# கொங்கு வேளாளர் குலவரலாறு

## இரண்டாம் பாகம்



கல்வெட்டு, செப்பேடு, ஓலைச்சுவடி, காணிப்பாடல், இலக்கியம் வழியாக

செ. இராசு

# கொங்கு வேளாளர் குல வரலாறு

## பாகம் 2

கல்வெட்டு, செப்பேடு, ஓலைச்சுவடி,
காணிப் பாடல், இலக்கியம்
வழியாக

ஆசிரியர்

புலவர் **செ. இராசு** எம்.ஏ., பிஎச்.டி.,
முன்னாள் தலைவர்
கல்வெட்டு - தொல்லியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

**வெளியீடுவோர்**

கொங்கு மண்டலம் பதிப்பகம்
7, இராமானந்த நகர்
சரவணம்பட்டி
கோயம்புத்தூர்-641035

கொங்கு ஆய்வு மையம்
58/2 பாலக்காட்டுத் தோட்டம்
புதிய ஆசிரியர் குடியிருப்புப்பாதை,
ஈரோடு-638011

# நூற்குறிப்பு

இந்நூல் கோவை, சரவணம்பட்டி கயிலைமணி பழ.தரும. ஆறுமுகம், கோவை மருத்துவ மையம் மருத்துவமனை (KMCH) தலைவர் டாக்டர் **நல்லா.ஜி. பழனிசாமி** ஆகியோரின் பொருட்கொடையால் வெளியிடப்பெறுகிறது. இருவருக்கும் எங்கள் மனமார்ந்த நன்றி உரியதாகுக.


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | **கொங்கு வேளாளர் குல வரலாறு** |
| நூல் பொருள் | : | சமுதாய வரலாறு |
| ஆசிரியர் | : | புலவர் **செ.இராசு** |
| பதிப்பு ஆண்டு | : | 2012 |
| நூலின் அளவு | : | 14 செ.மீ × 21 செ.மீ |
| பக்கங்கள் | : | 656 (பாகம் 1 - 336, பாகம் 2 - 320) |
| அச்சு எழுத்து | : | 11 புள்ளி, ஸ்ரீலிபி 7.1 வெர்சன் |
| பதிப்புரிமை | : | வெளியீட்டாளர்களுக்கு |
| விலை | : | ரூ.350/- |

**நூல் கிடைக்குமிடங்கள்:**

கொங்கு மண்டலம் பதிப்பகம்,
7, இராமானந்த நகர்,
சரவணம்பட்டி,
கோயம்புத்தூர்-641035.
98422 99866

கொங்கு ஆய்வு மையம்,
58/2 பாலக்காட்டுத் தோட்டம்,
புதியஆசிரியர் குடியிருப்புப் பாதை,
ஈரோடு - 638011.
0424-2262664

கணினி தட்டச்சு : முருகன் கணினி பணியகம்,
11, அகில்மேடு 2வது தெரு,
கோட்டை, ஈரோடு-638001.
கைபேசி எண்: 9486641299

அச்சாக்கம் : வாழ்க வளமுடன் ஆப்செட் பிரிண்டர்ஸ் பிரைவேட் லிமிடெட்,
29, நாச்சியப்பா வீதி,ஈரோடு - 1.
0424-2258511, 2258522

# கொங்கு வேளாளர் குல வரலாறு

## பொருளடக்கம்

## பாகம் - 2

## 58. பண்ணை குலம்

கொங்கு வேளாளர் குலங்களில் 96 கீர்த்திகளைக் கொண்ட குலம் என்ற சிறப்பினையுடையது பண்ணை குலம். இக்குலம் பண்ணன் குலம், பண்ணர் குலம், பண்ணை குலம் எனப் பல வகையாக அழைக்கப்பட்டுள்ளது.

சங்க இலக்கியங்களில் சிறுகுடி கிழான் பண்ணன், வல்லார் கிழான் பண்ணன் என்று இரு வள்ளல்கள் புலவர் பலரால் புகழப் பட்டவர்களாக உள்ளனர். கிழான் என்பதால் இவர்கள் உழவர் குடியாகிய வேளாளர்களே என்பது பெறப்படுகிறது.

நொய்யல் கரையில் உள்ள இன்றைய கொடுமணல் சங்க காலப் பேரூர். பதிற்றுப்பத்தில் அவ்வூர் 'கொடுமணம்' என்று கூறப் பட்டுள்ளது. அங்கு நடைபெற்ற அகழாய்வில் 2000 ஆண்டுகட்கு முன்பு வழங்கிய பழந்தமிழ் எழுத்துக்களில் 'பண்ணன்' என்று எழுதப் பட்ட பானையோடு கிடைத்துள்ளது.

சேர மன்னன் கோரவிகோதை கொங்கு நாட்டை வென்று கருவூர் சித்திரா கூடத்தில் எழுந்தருளியிருக்கும் போது நாடு கேட்ட ''வேம்பன் பண்ணன்'' என்பாருக்குப் பூந்துறை நாட்டு அனுமன் பள்ளியில் காணி கொடுத்ததாக அனுமன்பள்ளிச் செப்பேடு கூறுகிறது.

செங்கம் பகுதி நடுகற்களில் ''பசீரப் பண்ணன்'' ''நகர ஊராளி பண்ணன் நாட்டான்'' என்ற பெயர்கள் காணப்படுகின்றன.

ஆகவே 'பண்ணன்' என்ற பெயருடையவர்கள் வாழ்ந்த குலம் பண்ணன் குலம் என்று அழைக்கப்பட்டு பண்ணை குலமாகப் பெயர் பெற்றது என்று சிலர் கூறுகின்றனர். இப்பண்ணன் குலம் பேச்சு வழக்கில் கடைசி 'ன்' கெட்டுப் 'பண்ண குலம்' என்றும் அழைக்கப்பட்டது. காலிங்கராயன் வம்சாவளி என்னும் ஆவணத்தில் ''மாமன் மச்சுணன் ஆன பண்ண குலத்தாளி'' என்ற தொடர் காணப்படுகிறது. எனவே 'பண்ணன்' என்னும் குல முதல்வன் பெயரால் இக்குலம் பெயர் பெற்றது என்பது சிலர் கருத்தாகும்.

அலகுமலைக் குறவஞ்சி, காணிப்பாடல் ஆகியவை 'பண்ணர்' குலம் என்று குறிக்கிறது. பண்ணன் குலம் சார்ந்தவர்கள் பண்ணர் என்று குறிக்கப்பட்டனர்.

வேளாண்மை நிலங்களைப் பண்ணை என்று அழைப்பர். பண்ணையையுடையவன் 'பணணையக்காரன்' எனப்பட்டார். அவர் செய்யும் உழவுத் தொழில் 'பண்ணையம்' எனப்பட்டது. இவ்வாறான 'பண்ணை' நிலங்கட்குச் சொந்தக்காரர்கள் என்ற பெயரில் இக்குலம் 'பண்ணை குலம்' என்று அழைக்கப்பட்டது என்பதே பெரும்பான்மை யானவர்கள் கருத்து, கொடுமணல் இலக்கியங்கள், கொங்கு மண்டல சதகம் முதலிய இலக்கியங்களில் இக்குலம் 'பண்ணை குலம்' என்றே குறிக்கப்படுகிறது. பாசூர் தீட்சிதர் செப்பேட்டிலும் 'பண்ணை குலம்' என்ற சொல்லே உள்ளது. நடு நாட்டில் 'பண்ணை நாடு' என்றே ஒரு பகுதிக்குப் பெயர் வழங்கியது.

எனவே பண்ணை எனப்படும் நிலத்தைக் குறிக்கும் பெயரிலிருந்து இக்குலம் பெயர் பெற்றது என்பது ஒரு கருத்தாகும். தே.ப. சின்னசாமி ஆட்டுப் பண்ணை, மாட்டுப் பண்ணை என்ற பெயர்களைக் கூறிப் பண்ணைக்கு உரியவர்கள் பண்ணை குலத்தார் ஆயினர் என்று கூறுகிறார். முதலில் கொங்கு வேளாளர் குல வரலாறு எழுதிய டி.எம். காளியப்பா அவர்கள் கீரை வகையில் 'பண்ணைக் கீரை' மிகவும் சிறந்தது. இப்பண்ணைக் கீரையை அடையாளச் சின்னமாகக் கொண்டவர்கள் பண்ணை குலத்தார் என்று கூறியுள்ளார். பண்ணை குலத்தார் பண்ணைக் கீரையைத் தெய்வமாக மதிப்பவர்கள். இவர்கள் பண்ணைக் கீரையை உண்ண மாட்டார்கள். பண்ணைக் கீரையை மிதிக்கக்கூட மாட்டார்கள் என்று கூறுகிறார். பேராசிரியர் கிருஷ்ணசாமியும் இவ்வாறே கூறுகிறார்.

வி. இராமமூர்த்தி பண்ணை குலமும், பண்ண குலமும் வெவ்வேறு குலங்கள் என்று கூறுகிறார். வேளாண்மை தொடர்பானது பண்ணைகுலம். குல முதல்வன் பண்ணன் பெயரால் ஏற்பட்டது

பண்ணன் குலம் (பண்ண குலம்) என்பது அவர் கருத்து. குலப்பட்டியல் கூறும் எல்லா ஆவணத்திலும் பண்ணன் அல்லது பண்ணை என்ற பெயரில் ஏதாவது ஒரு குலப் பெயர் வருகின்றதே தவிர எங்கும் இரண்டாகக் கூறப்பெறவில்லை.

நல். நடராசன் புன்செய் நிலங்களை நன்செய் நிலங்களாகப் பண்ணியவர் பண்ண குலத்தார். பண்ணப் பட்டவர் பண்ண குலத்தார் என்று கூறுகிறார். பண்ணைகுலம் என்பதே பெரும்பான்மை வழக்காகும்.

பண்ணை குலம்,

''வளர்கின்ற பண்ணை குலம்''
''மேருஅன்ன புகழ்படைத்த பண்ணை குலம்''
''பாரம் சுமந்த பண்ணை குலம்''

என்றெல்லாம் சிறப்பிக்கப்பட்டுள்ளது. முனைவர் கு.முத்துக்குமார் பண்ணை குலம் என்பதே சரியானது; பண்ணன் குலம் என்பது பொருத்தம் இல்லை என்பார்.

**காணியூர்கள்**

பண்ணை குலத்தார் காணியூர்களைத் தொகுத்து ஒரு பாடல் கூறுகிறது. கூடலூர், கொல்லன் கோயில், சென்னிமலை, வயிரூசி, பழனி, கொடுவாய், இடையாறு, கீரனூர், வல்லிபுரம், வாணியம்பாடி, ஊஞ்சலூர், பூவாணி, கல்யாணி, கண்டியன் கோயில், பெருச்சாணி சத்திரம், புன்னம், பவித்திரம், கடத்தூர், நெடுங்கூர், தும்பங்குறிச்சி, அவிநாசி, கணியாம்பூண்டி, கொற்றமங்கலம், உறையூர், நடுவனேரி, பூவாநல்லூர் ஆகிய ஊர்கள் பண்ணை குலத்தாரின் காணியூர்கள் என்று காணிப்பாடல் கூறுகிறது.

''செகதலம் புகழ்வளர் கூடல்கொல் லன்கோயில்
சென்னிகிரி வயிரூசியும்

தென்பழனி கொடுவாய் இடையாறு கீரனூர்
    திருவுலவு வல்லிபுரமும்

புகழ்பரவு வாணியம் பாடிதென் ஊஞ்சலூர்
    பூவாணி கல்யாணியும்
பொன்கண்டி யன்கோயில் பெருச்சாணி சத்திரம்
    புன்னம்பவித் திரம்கடத்தூர்

அகமகிழ் நெடுங்கூரு தும்பங் குறிச்சியும்
    அதிகமிகு அவிநாசியும்
அழகுகணி யாம்பூண்டி கொற்றமங் கலமுடன்
    அன்பான உறையூரதும்

பகர்நடுவ னேரியும் பூவாநல் லூருடன்
    பண்பாக அரசுபுரியும்
பண்ணையங் குலதிலக சின்னயன் அருள்பழனி
    பாக்கியனே யோக்யதருவே''

என்பது பண்ணை குலத்தாரின் காணிப் பாடலாகும். இவ்வூர்களிலெல்லாம் பண்ணை குலத்தார் அரசு புரிவதாகவே புலவர் கூறுகிறார். இக்காணிப் பாடலில் குறிக்கப்பெறாத பல முக்கியக் காணியூர்கள் பண்ணை குலத்தார்க்கு உரியனவாக உள்ளன.

மேல்கண்ட காணிப்பாடலில் குறிக்கப்பெறாத அஞ்சுராம் பாளையம், ஆலத்தூர், இராசாம்பாளையம், ஈரோடு, ஊத்தங்கரைப் பாளையம், ஏழூர், ஒண்டிக்காரம்பாளையம், கங்காபுரம், கரூர், காங்கேயம்பாளையம், காலிங்கராயன்பாளையம், குத்திலுப்பை, குப்பம், குளித்தலை, குறும்பபட்டி, கைலாசபுரம், கொல்லம் பாளையம், சேந்தமங்கலம், தாழம்பாடி, தொட்டம்பட்டி, நல்லி பாளையம், நெரூர், காந்திக்கவுண்டனூர், பெரிய திருமங்கலம், பேரோடு, வல்லிபுரம், வனவாசி, வாங்கப்பாளையம் என்பன அவற்றுள் சிலவாகும். விவசாயம், தொழில், அலுவல், வணிகம்

காரணமாக இன்னும் பல ஊர்களில் பண்ணை குலத்தார் குடியேறி வாழ்கின்றனர்.

சோழ நாட்டு உறையூர் காணிப்பாடலில் குறிக்கப் பட்டுள்ளது. சோழ நாட்டுத் திருவழுந்தூரும் பண்ணை குலத்தாரின் காணி யூராகும் ''திருவழுந்தூரில் வரு வேளாளன் நீ'' என்று ஒரு தனிப் பாடல் குறிக்கிறது.

ஏழூர் பண்ணை குலத்தாரின் முக்கியமான காணியூர். அங்கு குலப்பெயரால் பண்ணையம்மனை எழுந்தருளச் செய்து வணங்கி வருகிறார்கள். ஏழூர் தேவார வைப்புத் தலம். 'எழுவூர்' என்பதே ஏழூர் என மருவி வழங்குகிறது.

கீரம்பூர் எட்டுக்கையம்மனைப் பண்ணை குலத்தார் குல தெய்வமாக வணங்கி வருகின்றனர். நல்லிபாளையத்தில் மாரியம்மனையும், தும்பங்குறிச்சியில் மதுரகாளியம்மனையும், ஏழூர் நாட்டுத் தாழம்பாடியில் செல்லாண்டியம்மனையும், ஆட்டையாம்பட்டி அருகே ராக்கியண்ணனையும் குல தெய்வமாகக் கொண்டு பண்ணை குலத்தார் வழிபட்டு வருகின்றனர்.

ஏழூர் பொருளந்தை குலத்தார் ஆதிக்கம் பெறவே பண்ணை குலத்தார் கல்யாணியைத் தலைமையிடமாகக் கொண்டனர். ஏழூர் நைனாமலைக் கவுண்டர், அவர் மகன் பெரியண்ண கவுண்டர் பல இலக்கியம் பெற்ற பண்ணைகுலத் தலைவர்கள். 'கலிசை' என்றும் கல்யாணிக்குப் பெயர் உண்டு.

''ஏழூர் வளநாடு இலங்கும்கல் யாணிநகர்
நாளுக்கு உம்பளிக்கை நலமாகப் பெற்றெடுத்தோம்''

என்று கூறுவர் பண்ணை குலத்தார். கி.பி.1753 ஆம் ஆண்டு இங்குள்ள பொன்காளியம்மன் கோயிலைப் பண்ணைகுல தர்மகர்த்தா நமசிவாயக் கவுண்டர் திருப்பணி செய்தார். இங்குப் பண்ணைகுல நயினாமலைக் கவுண்டரையும், அவர் மனைவி முத்தாத்தாளையும்

தெய்வமாக வணங்கி வருகின்றனர். இவர்கள் நயினாமலை வரதராசப் பெருமாளைச் சிறப்புடன் வணங்கி வருகின்றனர்.

கல்யாணியை இருப்பிடமாகக் கொண்டு பண்ணை குலத்தார் இராசிபுரம், சேந்தமங்கலம், கொல்லிமலையில் திண்ணனூர், சேலூர், குண்டூர், தேவானூர், அரியூர், வளப்பூர், வாழவந்தி போன்ற பகுதிகளை நிர்வாகம் செய்தனர்.

கி.பி.10 ஆம் நூற்றாண்டில் சேர மன்னன் கோரவிகோதை கொங்கு நாட்டை வென்று கருவூர் சித்திரா கூடத்தில் வீற்றிருந்த போது பண்ணை குலத்து வேம்பன் என்பவர் அனுமன்பள்ளியைக் காணியாகப் பெற்றார் என்று செப்பேடு கூறுகிறது. இங்கு சின்னம்மன், பெரியம்மன், வேம்பரசு விநாயகர் ஆகியவர்களை வணங்கி வருகின்றனர்.

பேரோட்டில் உள்ள கரிச்சிக்குமாரர் கோயிலில் பண்ணை குலத்தாருக்குத் திருவிழாவில் 'கட்டியம் செய்தல்' என்னும் உரிமை உண்டு. 01.09.1547ல் எழுதப்பட்ட செப்பேட்டில் இது உறுதி செய்யப்பட்டுள்ளது. மணநாடு அல்லது மணலூர் நாடு என்று அழைக்கப்படும் நாட்டின் இரண்டாவது ஊர் கூடலூர், 'செகதலம் புகழ்வளர் கூடல்' என்று சிறப்பிக்கப்பட்டுள்ளது. சின்ன தாராபுரம் அருகே பெரிய திருமங்கலம் அமராவதிக் கரையில் உள்ள அருங் கரையம்மன் கோயிலில் பண்ணை குலத்தார் பல திருப்பணிகள் செய்துள்ளனர்.

திங்களூர் அப்பிச்சிமார் மடத்தின் பக்தர்களாகப் பண்ணை குலத்தார் இருந்துள்ளனர். அப்பிச்சிக் கவுண்டர், இராக்கியண கவுண்டர் எனப் பலர் பெயர் வைத்துக் கொண்டுள்ளனர். இங்குள்ள மசரியாத்தாள் சுவாமியைப் பல இடங்களில் எழுந்தருளச் செய்துள்ளனர். ஏழூர்ப் பண்ணை குல நாட்டு வேளாள கவுண்டர்கள் கொழுச்சிப்பட்டி என்னும் ஊரில் 3½ ஏக்கர் இடம் வாங்கித் தனிப் பண்ணையம்மன் கோயில் கட்டி வழிபட்டு வருகின்றனர்.

## புலவர் புகழ்மொழி

புலவர் ஒருவர் பண்ணைகுலச் சர்க்கரைக் கவுண்டர் என்பவரிடம் பரிசு பெற்றார். புலவர் அவர்மீது அழகிய பாடல் ஒன்றைப் பாடினார்.

''திருவழுந் தூரில்வரு கம்பநா டர்க்குஅடிமை
செய்கின்ற வேளாளன்நீ
சிவனுடைய பசியகல முளைவாரி அனமுதவி
செய்கின்ற வேளாளன்நீ

கருணைகொண் டரவின்மணி வாணர்க்கு உதவியே
கதிமைபெறு வேளாளன்நீ
காவலன் மதிக்கஉயர் ஆடைகீ றிச்சிலந்தி
காண்பிக்கும் வேளாளன்நீ

வருசைபெறு தொண்ணூத்தி ஆறுகீர்த் திக்கினிய
மன்னனிவர் கையினாலே
வடிதமிழுக்கு உதவிசெய் கின்றதோர் கொடையுதவு
வளர்பண்ணை குலதிலகனே

தருவைநிகர் கர்னனான ஆயியண வசீகரன்
தந்தசந் தானமணியே
தனபதிக ளாகவரும் சடையன்மகி பாலனே
சர்க்கரை விற்பன்னனே!''

## முதல் குலம்

தென்கரை நாட்டுப் புதுப்பை பரம்பரைப் புலவர்கள் வாழ்ந்த ஊர். புதுப்பைப் புலவர் கால்வழியினர் கொங்கு நாட்டில் பல இடங்களில் குடியேறினர். அவற்றுள் கொடுமணல் தம்மரெட்டி பாளையம் ஒன்று. அங்குள்ள நாச்சிமுத்துப் புலவர் வீட்டில் கிடைத்த பல ஏடுகளில் ஒன்று கொங்கு நாட்டில் வேளாளர் குடியேறியதைக் குறிக்கிறது. குடியேறி வந்தவர்களைத் தொகுத்துக் கூறும்போது முதலாவது பண்ணை குலத்தாரையே அந்த ஏடு கூறுகிறது.

''திங்கள்மணி மணிமேடை பூச்சக்ர வாள்குடைத்
தென்திசை அலங்கரித்துச்
சேரனவர் பாண்டியன் சோழர்திசைக் காராளர்
செய்யநதி காவேரிமுன்

கொங்கில்வரு பண்ணை ஓதாளன் பெரியகுலன்
பொருளந்தை கோவன்வேந்தன்
குழாயன்நீலன் செங்கண்ணன் காடை விழிபுல்லன்
கூரப்பனை பூந்தைபுன்னை''

என்று பாடல் தொடர்கிறது. இப்பாடலில் முதல் குலமாகப் பண்ணை குலம் குறிக்கப்பட்டிருப்பதைக் காணலாம்.

**சங்க இலக்கியச் சிறப்பு**

சங்க இலக்கியத் தொடர்பு பெற்ற கொங்கு வேளாளர் குலங்களில் பண்ணை குலம் முதலிடம் பெறுகிறது. சிறுகுடிகிழான் பண்ணன், வல்லார் கிழான் பண்ணன் என்ற இரு பண்ணர்கள் சங்க இலக்கியங்களில்புகழப்பட்டுள்ளனர். சிறுகுடிகிழான் பண்ணனை கொற்றன் கொற்றனார், கோவூர் கிழார், செயலூர் இளம்பொன்சாத்தன் கொற்றனார், மதுரை அளக்கர்ஞாழல் மகனார் மள்ளனார் ஆகிய புலவர்கள் பாடியுள்ளனர். பேரரசனான சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் சிறுகுடிகிழான் பண்ணனைச் சிறப்பித்துப் பாடியுள்ளது மிகவும் சிறப்புக்குரியது. வல்லார்கிழான் பண்ணனை சோழநாட்டு முகையலூர் சிறுகருந்தும்பியார் என்னும் புலவர் பாடியுள்ளார்.

''தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன்
பண்ணன் சிறுகுடிப் படப்பை''

''மலைமருள் யானை மண்டமர் ஒழிந்த
கழற்கால் பண்ணன்''

''மாவண் ஈகைப் பண்ணன் சிறுகுடி''

''வாய் வாள் பண்ணன்''

என்பன அவர்களைப் பற்றிய புகழ்மொழிகளாகும்.

**வெற்றிமிகு பண்ணை**

பெரும்புலவர் வே.ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர் தொகுப்பில் உள்ள ஏடுகளில் ஒன்றான வேளாளர் 96 கீர்த்திப் பாடல் ஏட்டில் பண்ணை குலம் ''செயபண்ணை'' என்று கூறப்பட்டுள்ளது. பண்ணை குலத்தார் எங்கும் வெற்றி பெற்றதை வரலாறு கூறு கிறது.

**காணி பிரித்த செயல்**

கொங்கு நாட்டில் குடியேறி நாடு பிரித்த பின் மேல்கரைப் பூந்துறை நாட்டில் 32 ஊர்களுக்கும் யார் யார் காணியாளர்கள் என்று எதிர்த்தவர்களை வென்று நியமனம் செய்ததில் பண்ணை குலத்தைச் சேர்ந்த திருவாச்சிக் கவுண்டர் முன்னின்றார். விடிய விடிய எல்லை கண்டு ஊர், காணி முற்றுப் பெற்று முடியவே எஞ்சியிருந்த அனுமன்பள்ளியைத் தங்களுக்குக் காணியாக்கினர் என்பது செவிவழிச் செய்தி.

**எவருக்கும் இல்லாத கீர்த்தி**

கொங்கு வேளாளர் சமூகத்தில் பண்ணை குலத்தார்க்கு மட்டுமே 96 கீர்த்திகள் உண்டென்று கூறுவர்.

''பண்ணை குலாதிபன் தொண்ணூறும் ஆறும் பரவுபுகழ்
மண்ணையும் வெண்ணையும் உண்டவன் வாழ்கொங்கு
மண்டலமே''

என்ற சதகப் பாடல் பகுதி இதனை விளக்கும். (இவற்றின் விரிவை இந்நூலாசிரியர் எழுதிய'' அனுமன்பள்ளி பண்ணைகுல வேளாளர் வரலாறு'' என்னும் நூலில் காணலாம்)

**வீரத்தின் விளைநிலம்**

போர்க்களத்தில் வீர மரணம் அடைந்தவர் நினைவாக நடுகல் நாட்டி. அதில் அவர் பெயரையும் புகழையும் எழுதுவது பண்டைய வழக்கம். செங்கம் வட்டத்தில் சில நடுகற்களில் பண்ணன் என்ற பெயர் காணப்படுகிறது.

''கோவிசைய சிங்க விண்ணவருமற்கு யாண்டு முப்பத்தி
மூன்றாவது கங்கதி அரைசரு மக்கள்மேல் விண்ணனார்
சேவகன் தொப்புர வரும்பாடி ஆள்கின்ற பசீரப்பண்ணன்
குறட்டாதன் தொறுக் கொண்ட ஞான்று எறிந்து பட்டான்''

என்பது ஒரு நடுகல் கல்வெட்டாகும்.

அதியரசர் காலத்தில் நகர ஊராளி பண்ணன் நாட்டான் என்பவன் பெயரும் ஒரு நடுகல்லில் குறிக்கப்பட்டுள்ளது.

**கம்பர் காணிப்பாடலில்**

கொங்கு வேளாளர்கள் கொங்கு நாட்டில் குடியேறும்போது மதுக்கரைச் செல்லாண்டியம்மன் கோயிலில் கம்பர் குலம் பிரித்துப் பெயர் கொடுத்தார் எனறு கொங்கு காணியான பட்டயம் கூறு கிறது.

''பாரம் சுமந்த பண்ணை குலம்
படியளந் துண்ணும் பயிரகுலம்''

என்பது ஒரு பாட்டின் பகுதியாகும்.

**சதகம் பாட உதவி**

கொங்கு நாட்டின் பன்முக மாட்சியை விளக்கும் நூல் 'கொங்கு மண்டல சதகம்' ஆகும். இந்நூலைப் புலவர் வாலசுந்தரக் கவிஞர் இயற்றும் போது பண்ணை குலத்தார் பொன் கொடுத்து ஊக்குவித்தனர் என்று சிலர் கூறுவர்.

''பண்ணைகோன் வெண்ணை நல்லூர்
கொடுத்திடும் இரணம்வாரிக்
கொங்குசெய் சதகம்தானே''

என்பது அதைக் குறிக்கும் பாடல் பகுதியாகும் என்பர்.

**காலிங்கராயன் வரலாற்றில்**

காலிங்கராயன் தந்தை நஞ்சைய கவுண்டர் மனைவி பண்ணைகுலம் சார்ந்தவர். அக்காலத்தில் தாய்மாமா பெண்ணை முறைப்பெண் என்று திருமணம் செய்வது வழக்கம். அதன்படி காலிங்கராயனுக்கு பண்ணை குல மாமா வீட்டில் பெண் கேட்டனர். இதை காலிங்கராயர் வம்சாவளி ''கங்கை குலம் சாத்தந்தை கோத்திரம் காலிங்கக்கவுண்டன் என்கிற தன்னுடைய குமாரனுக்குக் கலியாணம் பண்ண வேணுமென்று நினைச்சு மாமன் மச்சுணனான பண்ண குலத்தாளி வீட்டிலே பெண் கேட்டு'' என்று கூறுகிறது.

காலிங்கராயன் பவானியாற்றில் அணை கட்டும்போது அணை நிற்காமல் உடைந்துகொண்டேயிருந்தது. எவ்வளவோ முயன்றும் அணை நிற்கவில்லை. அனுமன்பள்ளியில் உள்ள பண்ணை, செல்லன் குலத்தாரின் குல தெய்வமாகிய பெரியம்மன். சின்னம்மன் இருவரில் பெரியம்மனைக் கொண்டு வந்து பிரதிட்டை செய்தால் அணை நிற்கும் என்று அசரீரி எழுந்தது.

காலிங்கராயன் அனுமன்பள்ளி பண்ணை குலம் பெரியம்மனை வண்டியில் ஏற்றி வரும்போது கவுண்டிச்சிபாளையம் அருகே அம்மன் நின்று விட்டது. அங்கிருந்தே அணையைப் பார்த்துக் கொள்வதாக பெரியம்மன் கூறவே காலிங்கராயன் அணை கட்டி முடித்தார் என்பது வரலாறு. இப்போது 'பாலமடையம்மன்' என்ற பெயரில் கனகபுரம் சாத்தந்தை குலத்தார் வணங்கி வருகின்றனர்.

### குலகுருக்கள்

பண்ணை குலத்தார் பாசூர் அகிலாண்ட தீட்சிதர், கூனம்பட்டி மாணிக்கவாசக சுவாமிகள், கொடுமுடிப் பண்டிதர் ஆகியோரைக் குல குருக்களாகக் கொண்டிருந்தனர் என்பது கூறப்படுகிறது. இதனை இலக்கிய வரிகள் மெய்ப்பிக்கின்றன.

''ஆட்சிபெறும் பாசூர் அகிலாண்ட தீட்சிதர்தாள்
மாட்சிபெறப் பூசைசெய்யும் கங்கா குலசீலன்''

''மண்டலத்தி லேவிசைய மங்கைநகர் மாணிக்கப்
பண்டிதராம் எங்கள்குரு பாதம் மறவோமே''

''குருமொழிக்குள் மெய்யான கொடுமுடிப் பண்டிதனார்
தருபதத்தை எந்நாளும் தயவாய்ப் பணிந்து கொள்வோன்''

என்பன மூன்று குலகுருக்களையும் குறிக்கும் இலக்கியத் தொடர் களாகும்.

# 59. பதரியர் குலம்

பதர் இன்றி நெல் விளைவிப்போர் மிகவும் குறைவு. அதனால் பதர் இல்லாமல் நெல் விளைவிப்பதில் சிறந்தவர்கள் பதரியர் எனப்பட்டனர் என்று தே.ப. சின்னசாமி கூறுகிறார். பதரி (வதரி) என்பது எலந்தை மரத்தைக் குறிக்கும். எலந்தை மரத்தை அடையாளச் சின்னமாகக் கொண்ட வேளாளர்கள் பதரியர் எனப்பட்டனர் என்று இரா. இரவிக்குமார் கூறுகிறார்.

காங்கய நாட்டில் காங்கயம், கண்ணபுரம் ஆகிய ஊர்கள் பதரி குலத்தாரின் காணியூர் என்று காங்கய நாட்டுக் காணிப்பாடல் கூறுகிறது.

''சிங்கநகர் அதனில்வளர் அதிகபெருங் குடியனை
செயவேந்தன் செங்கண்ணனைக்
சீர்கொண்ட தூரனைப் பதுமன்முதல் வாணியைத்
திவ்வியமிகு சாத்தந்தையை''

இக்காங்கய நாட்டுக் காணிப்பாடலில் பெருங்குடி குலம், வேந்தன் குலம், செங்கண்ணன் குலம், தூரன் குலம், பதுமன் குலம், வாணி குலம், சாத்தந்தை குலம் ஆகிய ஏழு குலங்கள் மட்டும் காங்கயம் காணியாளர்கள் என்று கூறப்படுகிறது.

காங்கயத்திற்கென்றே தனிக் காணிப்பாடல் ஒன்றுள்ளது. அப்பாடலில் பதரி குலத்தைச் சேர்த்து எட்டுக் குலத்தார் காங்கயம் காணியாளர்கள் என்று கூறப்பட்டுள்ளது. அப்பாடல்,

''பெருங்குடி வேந்தனும் செங்கண்ணன் தூரன்நல்
பேர்பதுமன்
விரும்பிய வாணிசாத் தந்தை பதரி
விரைகுடிலூர்
அரும்பணி நாதர் அகத்தீசு வரர்அகி
லாண்டவல்லி
கருங்குழல் மாது பகவதி வாழ்கின்ற
காங்கயமே''

என்பதாகும்.

காங்கயத்தில் அகத்தீசுவரர், ஆயி அம்மன், பகவதியம்மன் ஆகிய கோயில்களில் மற்ற காணியாளர்களோடு பதரியர் குலத்தாரும் வணங்கித் திருப்பணியிலும் பங்கு பெறுகின்றனர்.

காங்கேய நாட்டுக் கண்ணபுரத்திலும் செங்கண்ணகுலம், ஓதாள குலம் சார்ந்தவர்கட்கு அடுத்து மூன்றாவது காணியாளராகப் பதரியர் குலம் இடம்பெறுகிறது. அங்கு கரியகாளியம்மன், விக்கிரம சோழீசுவரம் ஆகிய கோயில்களில் பதரியர் குலத்தார் வணங்கி வருகின்றனர்.

''அமரர்தொழும்கண்ணையில்அதனில்வளர் செங்கண்ணனை
அரசுபுரி அதியனவனை
அளப்பரிய ஓதாள குலவனை நலமிகும்
ஆசைமிகும் மால்பதரியை
அன்புமிகும் கணவாள குலவீரர் தங்களை
அச்சமிகு மாவெட்டியை
அனைவர்புகழ் செட்டியை முத்தன்வண் ணக்கனை
அற்புதக் கடுந்தூளியை''

என்பது கண்ணபுரக் காணிப்பாடலாகும்.

குறுப்பு நாட்டுப் பாலத்தொழுவும் பதரி குலத்தார் காணியூ ராகும். அங்கு வாழ்ந்த பதரிகுல நல்லிசையாளன் பராக்கிரமன் அவினாசிக் கோயிலுக்கு 1562 ஆம் ஆண்டு சந்தியா தீபம் வைத்ததை அவினாசியப்பர் கோயில் கல்வெட்டுக் கூறுகிறது.

''ஸ்வஸ்திஸ்ரீ துந்துபி சம்வத்சரத்து ஆவணி மாதம் குறுப்பு நாட்டில் பாலத்தொழுவில் வெள்ளாளன் பதரிகளில் நல்லிசையாளன் பராக்ரமனேன் அவிநாசி ஆளுடைய நாயனார்க்கு நான் வைத்த சந்தியா தீபம் ஒன்றுக்கு இற்றை நாளில் சீபண்டாரத்தில் ஒடுக்கின பணம் 10 இப்பணம் பத்துக்கும் இந்த விளக்கு ஒன்றும் சந்திராதித்தவரை செல்வதாக இது பன்மாகேசுவரர் ரட்சை''

என்பது அக்கொடையை விளக்கும் கல்வெட்டாகும்.

# 60. பதுமன் குலம்

வேளாளர் 96 கீர்த்திப் பாடலிலும், வேளாளர் குலக் கும்மிப் பாடலிலும் பதுமன் குலம் குறிப்பிடப்பட்டுள்ளது.

''பதும குல வேளாளர்''
''காரணப் பதும குலர்''

என்று இவர்கள் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளனர். பழனிப் பகுதியை ஆட்சி புரிந்த வேளிர் மரபினர் ''வேள் ஆவிக்கோமான் பதுமன்'' என்று குறிக்கப்படுகின்றனர். இரா. இரவிக்குமார், நல். நடராசன் ஆகியோர் இப்பெயரை 'வேளாளப் பதுமன்' என்று எழுதியுள்ளனர். சங்க இலக்கியங்களில் பதுமனார், பெரும்பதுமனார் போன்ற புலவர்கள் பெயர்களும் காணப்படுகின்றன.

வேளிர்கள், வேளாளர்கள் மூவேந்தர்கட்கு மகட்கொடைக்கு உரியவர் ஆதலால் பழனிப் பகுதி வேளிர் தலைவன் வேள்ஆவிக்கோமான் பதுமன் பெண் மக்களைச் சேர அரசர்கள் நெடுஞ்சேரலாதன், செல்வக்கடுங்கோ வாழியாதன் ஆகியோர் மணம் செய்துகொண்டுள்ளனர். இவர்கள் மக்களே களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல், ஆடுகோட்பாட்டுச் சேரலாதன், தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை ஆகியோர் ஆவர்.

பதுமம் என்றால் தாமரை என்று பொருள். எனவே பதுமன் குலத்தாரின் குலச்சின்னம் தாமரை என்று க. கிருஷ்ணசாமி கூறுகிறார். டி.எம். காளியப்பா 'சூரபதுமன்' பெயரோடு பதுமன் குலத்தைத் தொடர்புபடுத்திக் கூறுகிறார். இப்பெயரைத் தமிழர்கள் பெருமையோடு வைத்துக் கொண்டனர் என்றும் கூறுகிறார். பதுமன் என்ற பெயருடைய தலைவன் வழிவந்த மக்களே பதுமன் குலத்தார் என்று கூறுவர்.

பதுமன் குலத்தார் அகத்தியப்பன், அகத்தியண்ணன் என்று பெயர்கள் வைத்துக் கொள்வர். இப்பெயர்கள் அகத்தி மரத்தோடு தொடர்புடையது. எனவே அகத்தி மரம் பதும குலத்தாரின் காவல்

மரமாக இருக்கவேண்டும் என்கிறார் காளியப்பா. இப்பெயர்களைப் பொதியமலைக் குறுமுனிவர் அகத்தியரோடும் தொடர்புபடுத்திக் கூறுவர். பதுமன்பள்ளி, பதுமனூத்து, பதுமனூர், பதுமன் பேட்டை, பதுமன் கோட்டை முதலிய ஊர்ப் பெயர்கள் இவர்களால் ஏற்பட்டது என்பர்.

காங்கயம் காணியாளர்களில் பதுமன் குலத்தாரும் கூறப் படுகின்றனர்.

''பெருங்குடி வேந்தனும் செங்கண்ணன் தூரன்நற் பேர்பதுமன்
விரும்பிய வாணிசாத் தந்தை பதரி விரைகுடிலூர்
அரும்பணி நாதர் அகத்தீசு வரர்அகி லாண்டவல்லி
கருங்குழல் மாது பகவதி வாழ்கின்ற காங்கயமே''

என்பது காங்கயம் காணிப்பாடலாகும்.

''சிங்கைநகர் தன்னில்வளர் அதிகபெருங் குடியனைச்
செயவேந்தன் செங்கண்ணனைச்
சீர்கொண்ட தூரனைப் பதுமன்முதல் வாணியைத்
திவ்யமிகு சாத்தந்தையை''

என்பது மற்றொரு காங்கயம் காணிப்பாடலாகும்.

போர்த்தொழிலில் ஈடுபட்ட பதுமன் குலத்தார் ஏர்த் தொழிலில் ஈடுபட்டுப் பெரும் செல்வந்தர்களாக விளங்கியதாக சேதுராமன் குறிப்பிடுகிறார்.

# 61. பயிரன் குலம்

கொங்கு வேளாளர் குலங்களில் இன்றியமையாமையும், இலக்கியப் புகழும், வரலாற்றுப் பெருமையும் உடைய குலங்களில் பயிரன் குலமும் ஒன்று. பயிரன் குலத்தைப் பேச்சு வழக்கில் பயிரகுலம் என்றும் அழைப்பர். 'பயிர்' என்பது உழவு செய்து விளைவதைக் குறிக்கும். உழவுத் தொழிலைப் 'பயிர்த்தொழில்' என்றும் குறிப்பர். பயிர்த்தொழில் வேளாளர்கள் அனைவருக்கும் பொதுவான தொழில் என்றாலும் அதில் சிறப்பும் தேர்ச்சியும் பெற்றவர்கள் 'பயிரன்' என்று அழைக்கப்பட்டிருக்கலாம். உழவு செய்பவன் 'உழவன்' என்று அழைக்கப்பட்டது போலப் பயிர் செய்பவன் பயிரன் என்று பெயர் பெற்றனர்.

பயிரன் குலத்தலைவர் பாடல்களில் தரிசு நில மேம்பாடு, ஆட்டெருவின் இன்றியமையாமை, பயிர் நோய்களை ஒழித்தல், கதிர்களைத் தாக்கும் பூச்சிகளை ஒழித்தல், நிலத்தை நாள்தோறும் பார்த்தலின் பயன், மேய்ச்சல் நிலம், ஊட்டச் சத்துள்ள புல்வகை, கால்நடைத் தீவனம், கால்நடைகளைப் பராமரித்தல், புதிய இனம் தோற்றுவித்தல் முதலிய பயிர்த்தொழில் நுட்பங்கள் பலவற்றைக் காணலாம். எனவே பயிர்த் தொழிலில் பல்வேறு சிறப்புக்களைப் பெற்றவர்கள் பயிரன் குலத்தார் என அழைக்கப்பட்டிருக்கலாம்.

சங்க இலக்கியங்களில் 'பயநிரை' என்ற சொல் பயனுடைய கால்நடைகளைக் குறிக்கும். பயன்தரக் கூடிய ஆடு, மாடு, எருமை, குதிரை போன்ற பயனுள்ள கால்நடைகளைப் பெற்றிருப்பவர்கள். அவைகளை வளர்க்க அறிவுரை வழங்குபவர்கள் 'பயநிரையன்' என்று அழைக்கப்பட்டிருக்கலாம். பயநிரையன் என்ற சொல் காலப் போக்கில் மருவி 'பயிரன்' என்று பெயர் பெற்றிருக்கலாம்.

சங்க இலக்கியங்களிலேயே கொங்கு நாடு கால்நடைச் செல்வம் பெருகிய நாடாகக் கூறப்பட்டுள்ளது. 'ஆகெழு கொங்கு' 'கொங்கர் படுமணி ஆயம்' 'கொங்கர் ஆபரந்தன்ன' என்ற

தொடர்களைக் காணுகின்றோம். கொங்கு மண்டல சதகம் 'மாடும் பெருகி வளர்வது கொங்கு மண்டலம்' என்று கூறுகிறது. 'சேரநாடு வேழம் உடையது, சோழ நாடு சோறு உடையது. பாண்டிய நாடு முத்துடையது. தொண்டை நாடு சான்றோர் உடையது.' அதுபோல் 'கொங்குநாடு ஆக்கள் உடையது' என்பர். காங்கயம், பர்கூர், ஆலாம்பாடி போன்ற இடங்களில் கால்நடைச் செல்வம் கொங்கு நாட்டில் இன்றும் மிகச் சிறப்புடன் விளங்குகிறது.

சங்க இலக்கியங்களில் 'பயறு' வகைகள் கூறப்படுகின்றன. வேளாண்மையில் ஒரு கூறாகிய பல்வேறு வகைப்பட்ட 'பயறு'களைச் சிறப்பாக உற்பத்தி செய்பவர்கள் 'பயறன்' எனப்பட்டு அச்சொல் 'பயிரன்' என்றும் மருவி இருக்கலாம்.

கால்நடைகள் கருவுறுதலாகிய சினை ஆவதைப் 'பயிர் ஆதல்' என்ற சொல்லால் குறிப்பது உண்டு. அதனால் கால்நடை வளத்தைப் பெருக்குபவர்கள் 'பயிரன்' குலத்தார் என்றும் அழைக்கப் பட்டிருக்கலாம்.

சங்க காலத்தில் சோழர் படை நாயகனாக விளங்கிய மோகூர்ப் 'பழையன்' வழிவந்தவர்களே பயிரன் குலத்தார் என்று க. பழனிசாமிப் புலவர் கூறுகிறார். வாழைப்பழம் - வாயப்பழம் என்று மாறுவதுபோல பழையன் என்ற சொல் பயிரன் என ஆனது என்று அவர் சுவைபடக் கூறுகிறார் தன் 'கொங்குச் செல்வி' என்னும் நூலில்.

**காணியூர்கள்**

வெள்ளோட்டில் பயிர குலப் பெரியவர் பெரியண்ணன் என்பவர் வாழ்ந்து வந்தார். அவரைப் பற்றிக் குமாரசாமிக் கவிராயர் பாடிய குறவஞ்சி இலக்கியத்தில் பயிரன் குலத்தார் காணியூர்கள் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன.

பரஞ்சேர்வழி, பவித்திரம், வெள்ளியணை, காரையூர், ஆனூர், கார்வழி, கூடலூர், கொன்னையாறு, திருமுக்கூடல், அண்ட நாடு, சேலம், வயிரம்பள்ளி, கொடுமணல், பாலத்தொழு, புள்ளா நத்தம்,

வெள்ளோடு ஆகிய ஊர்கள் காணியூர்கள் என்று வெள்ளோடு பயிர குலப் பெரியண்ணன் குறவஞ்சி கூறுகிறது.

''திதிக்கும் பரஞ்சேர் வழிபவித் திரமும்
பணிதிகழ் வெள்ளி யணைகாரை யூரும்
தெளிவு ஆ னூர் கார்வழி கூடலூரும்
வருகொன்னை யாறும் திருமுக் கூடலும்
அண்டவள நாடும் வண்டமிழ்ச் சேலம்
வயிரம் பள்ளியும் நயகொடு மணலும்
பாலத் தொழுவுடன் மேலுமை யான
புள்ளா நத்தமும் வெள்ளோ டுடனே
சீர்பெறக் காணி ஏர்பெறப் படைத்த
நாற்றிசை புகழும் கீர்த்தி விலாசன்''

என்பது பெரியண்ணன் குறவஞ்சிப் பாடல் ஆகும்.

பயிரன் குலத்துக்கு மற்றொரு காணிப்பாடல் கிடைத்துள்ளது. அதில் மேற்கண்ட ஊர்கள் அனைத்தும் கூறப்பட்டாலும் வரிசையில் மாற்றம் உள்ளது.

பவித்திரம், வெள்ளியணை, காரையூர், ஆனூர், பரஞ்சேர்வழி, கூடலூர், வெள்ளோடு கொன்னையாறு, புள்ளா நத்தம், திருமுக்கூடல், வயிரம்பள்ளி, கொடுமணல், பாலத்தொழு என்ற வரிசையில் காணிப்பாடலில் ஊர்கள் கூறப்பட்டுள்ளன.

''மன்னு புகழ்கொண்ட மூவரசர் செங்கோல்
வழங்கிடும் நம்குடிவழி
வண்மைபெறும் அந்நாளில் நற்குடிநாற்பத் தெண்ணாயிரம்
வகுப்புற்று வாழும்நாளில்

நன்னயம தாகிய பவித்திரம் வெள்ளியணை
நற்காரை ஆனூரதும்
நலமைதிகழ் தென்பரஞ் சைப்பதியும் சேலமும்
நட்பான கூடலூரும்

தென்னுலவு வெள்ளோடு உயர்கொன்னை யாறுடன்
சேர்ந்தபுள் ளாநத்தமும்
செய்யதிரு முக்கூடல் அண்டவள நாட்டிலுயர்
செல்வவயி ரம்பள்ளியும்

கன்னல்வயல் சேர்கின்ற கொடுமணல் பாலத்தொழு
காணிபெற் றேவாழ்ந்திடும்
காராள ராமன்எனும் பயிரகுல மன்னவர்கள்
கதித்துவளர் காணியிவையே''

என்பது பயிரகுலக் காணிப்பாடலாகும்.

**புலவர்கள் புகழ்மொழி**

'கியாதியுள்ள பயிரன்'

'பிறங்கு பயிரகுலம்'

'படியளந்து உண்ணும் பயிரகுலம்'

'சொற்புகழ் வேளாளப் பயிரகுலம்'

'கன பயிர கோத்திரம்'

'தயகுணவேந்தன் பயிரகுலேந்திரன்'

'செந்தமிழ்சேர் வெள்ளோடு
செழிக்கும் பயிரகுலம்'

'சொன்னமொழி தப்பாத
சுமுகன் பயிரகுலன்'

'பன்னுதமிழ் வெள்ளோடைப்
பயிரகுல கோத்திரன்'

'காராள ராமன்எனும் பயிரகுலன்'

என்பன புலவர் புகழ்மொழிகளில் சில.

**இலக்கியங்கள்**

பல புலவர்கள் பயிரகுலத் தலைவர்களிடம் பாடிப் பரிசு பெற்றுள்ளனர். அவர்கள் இயற்றிய தனிப்பாடல்களும் இலக்கியங்களும் பயிர குலத்தார் புகழ்பாடுகின்றன.

வெள்ளோட்டில் பயிரகுலத்தில் குப்பண்ண கவுண்டர் என்பவர் இருந்தார். அவர்மீது குப்பண்ணன் நீதிச் சதகம் என்ற நூலைப் புலவர் ஒருவர் இயற்றியுள்ளார். சதகம் என்பது நூறு பாடல்கள் கொண்ட இலக்கியம் ஆகும்.

''பூவுக்கு அழகு செந்தாமரைப் புட்பம், புகழ்ந்துரைக்கும்
நாவுக்கு அழகு பழுதுரை யாமைநல் நாவலர்சொல்
பாவுக்கு அழகு நினைப்பாடல், வாழும் பயிரகுலக்
கோவுக்கு அழகு நீயே வெள்ளோடையில் குப்பண்ணனே''

என்பது ஒரு சதகப் பாடலாகும்.

வெள்ளோட்டில் வாழ்ந்த பயிரகுலப் பெரியண்ண கவுண்டர் பெரும் நிலக்கிழாராகவும், வள்ளலாகவும் திகழ்ந்தார். அவர் மீது குமாரசாமிக் கவிராயர் குறவஞ்சி இலக்கியம் பாடியுள்ளார். அக்குறவஞ்சி இலக்கியம் இன்னும் அச்சாகவில்லை. ஈரோடு அரசு அருங்காட்சியகத்தில் அதன் ஓலைச் சுவடி உள்ளது.

**பெரியண்ண கவுண்டர்**

''பயிரகோத் திரத்தில்வந்த
பாக்கியவான் வெள்ளோடை வாசன்
தயவுயர் பெரியணேந்திரன்''

''வெள்ளோடு நகர்தனில் வேந்தன் பயிரகுல
வள்ளல் பெரியண மகிபதி''

என்று குறவஞ்சியில் புகழப்படுகிறார். 'பன்னு தமிழோர் புகழும் பயிரகுலம்'' என்று பயிரகுலம் புகழப்படுகிறது. வெள்ளோடு பயிரகுலத்தாரை,

''மேருவரை பொய்த்தாலும் வெங்கதிரோன் தன்னுடைய
சீருதயம் பொய்த்தாலும் சொன்னமொழி பொய்யாதார்''

என்று இந்நூல் புகழுகிறது.

வெள்ளோட்டில் பயிர குலத்தில் பழனிமலைக் கவுண்டர் என்பவர் வாழ்ந்தார். அவர் பாட்டனார் விசுவநாதக் கவுண்டர், தந்தையார் முத்துவேல் கவுண்டர், பழனிமலைக் கவுண்டர் மகன் சுப்பராயக் கவுண்டர் திருமணத்தின்போது புலவர்களைக் கொண்டு வெள்ளோட்டுக் கோயில்கள் எல்லாவற்றிற்கும் சிறப்பான பாடல்கள் பாடுமாறு ஏற்பாடு செய்தார். கவியரங்கம்போல் இந்நிகழ்ச்சி நடைபெற்றிருக்க வேண்டும். மணமகன் சுப்பராயக் கவுண்டர் மீதும் பாடல்கள் இயற்றி இறுதியில் வாழ்த்துப் பாடலும் பாடியுள்ளனர்.

'பரிதிமதி சூழ்புவன மதில்கொங்கி லேஇரு
பத்துநால் நாட்டில் மேலென்பது
பூந்துறை நாட்டினில் வெள்ளோடை யாதிபன்
பயிர கோத்திர விலாசன்

பரமனுக்கு இரவில்முளை அன்னம் பகிர்ந்துஅப்
பசிதீர்த்த இளையான்குடிப்
பதிமா றனுக்குநிகர் போகதே வேந்திரன்
பரிக்கு நகுலன் இணையானவன்

பாவாணர் கையில் சவுக்கடி பொறுத்திட்ட
பரிவுசர்க் கரைமன்றாடி
பட்டமது பெற்றவன் காசிவிசு வேசரின்
பரிவுகொள் விசாலாட்சிதன்

பட்டமும் பெற்றிட்ட விசுவநாதன் வங்கிஷ
பரிவாளன் முத்துவேலப்
பன்தான் அருளிய பழனிமலை சுதாகரன்
பரிவுசுப்ப ராயமாலே''

என்பது திருமணப் பாடல்களில் ஒன்று. இறுதியில்,

''சருவீசர் பாடக வல்லித்தாய் வாழி
தருமலட்சுமி நாராயணன் பொன்காளி வாழி
சரவணபவன் சிகராசலன் நஞ்சுண் டீசர்
தரணிபுகழ் அண்ணன்மார் பலதேவர் வாழி
குறைவில்லா வெள்ளோடைப் பயிர கோத்திர
குருசில் சுப்பராயன் திருமணம் செய்து
பிறையா யிரம்தொழுது பயன்பெற் றோங்கி
பேர்சொல் புத்ரபாக்கியம் பெற்றே வாழி''

என்று வாழ்த்துப் பாடலும் பாடியுள்ளனர்.

தேவாரம் பாடிய மூவரில் சுந்தரருக்கும் கொங்கு நாட்டுக்கும் மிக அதிகமான தொடர்பு உண்டு. மூன்று முறை சுந்தரர் கொங்கு நாடு வருகை புரிந்தார் என்பது வரலாறு. அவினாசியில் முதலை யுண்ட பாலனை வரவழைத்ததும், வேடுவர்கள் பொன் பறித்து மீண்டும் சிவபெருமானால் பொருள் பெற்றதும் கொங்கு நாட்டில் தான்.

சுந்தரர் செய்த அற்புதச் செயல்கள் காரணமாகப் பக்தி மேலிட்டுச் சுந்தரர் மீது அளவற்ற அன்புகொண்டார் பயிரகுல வேளாளர் காளியண கவுண்டர். சிவபெருமான் அருட் கருணையை மெய்ப்பித்த சுந்தரரைக் காணாத ஏக்கத்தால் காளியண கவுண்டர் விசயமங்கலம் சிவாலயம் வந்து தன் வயிற்றைக் கீறிக் கொண்டார். இந்நிகழ்ச்சியை வாலசுந்தரக் கவிராயர் தன் சதகத்தில் ஒரு பாடல் மூலம் விளக்குகிறார்.

''தயவுறு புக்கொளி முதலைவாய்ப் பிள்ளையைத் தாயின் முனர்த்
துயரமும் தீர வரவழைத் தோட்டிய சுந்தரர்க்காய்ப்
பயிர குலாதிபன் காளியணன் மங்கைப் பரமனுக்கு
வயிறது கீறி நிலைநாட்டு வோன்கொங்கு மண்டலமே''

என்பது சதகப் பாடலாகும்.

பரஞ்சேர்வழிப் பயிரகுலத்தில் சின்னய்ய கவுண்டர் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் நாள்தோறும் சிவமலையாண்டவரை வழிபடு பவர். புலவர்கட்குக் கொடையை வாரி வழங்கும் வள்ளலாகவும் திகழ்ந்தார். 'சிவமலைக் குறவஞ்சி' அவர் புகழ் பாடுகிறது.

''தேவர்கள் தேவன் சிவமலை வேலவன்
திருவடிக்கு அன்பு தினம்செய்யும் பூபாலன்
நாவலருக்குத் தியாகன் பரஞ்சைப்பதி நகரதிகாரம்செய்
பயிரகுலாதிப காவலன் சின்னய்ய பூபன்''

என்பது குறவஞ்சிப் பாடலாகும்.

பயிரகுலக் காணியூர்களில் 'ஆனூர்' மிகவும் முக்கியமான ஊர். பயிரகுலக் காணியூர்களில் ஒன்றான பவித்திரம் பகுதியில் ஓர் ஆனூர் உள்ளது. அங்குள்ள அம்மனுக்கு ஆனூரம்மன் என்று பெயர். காங்கேய நாட்டில் காணி பெற்றுக் குடியேறும்போது இங்கும் ஆனூரையும், ஆனூரம்மன் கோயிலையும் உருவாக்கினர். 'பயிரகுல அதிபர்' என்று புகழ்ந்து போற்றப்படும் பழைய கோட்டைப் பட்டக் காரர்கள் 'ஆனூர்க்குச் சர்க்கரை மன்றாடி' என்றே கூறப்படுவர்.

ஆனூரம்மன் கோயில் பயிரகுலத்தார் அனைவருக்கும் உரிய பொதுக் கோயிலாகும். அங்கிருந்த கல்வெட்டு ஒன்று அழகன் சர்க்கரை உத்தமக் காமிண்ட சர்க்கரை மன்றாடியார். ஆனூரம்மன் கோயில் கட்டும்போது கொங்கு நாட்டுப் பயிரகுலத்தார் பலர் கோயில் கட்டப் பணம் கொடுத்தார்கள். அழகன் சர்க்கரையார் சிற்பியர்க்கு மூன்று வேளையும் தயிரோடு சோறு போட்டு வெற்றிலை பாக்கும் தந்தார் என்று கூறுகிறது.

''உயருபுகழ் ஆனூர்வாழ் உத்தமிமண் டபம்கட்ட
உவந்து வந்து
பயிரகுலப் பெரியோர்கள் பணமெல்லாம் தான்கொடுத்தார்
பணியா ளர்க்கு

வயிறுநிறை யச்சோறும் வாய்க்குவெற் றிலைபாக்கும்
வாங்கித் தந்து
தயிரொடுமூ வேளையிட்ட தர்மம்இது அழகன்சர்க்
கரையதாமே''

என்பது ஆனூரம்மன் கோயில் கல்வெட்டுப் பாடலாகும்.

பயிர குலத்திற்குப் பெருமை சேர்க்கும் தலைவர்கள் பழையகோட்டைப் பட்டக்காரர்கள். அவர்கள் அனைவருக்கும் 'சர்க்கரை' என்ற சிறப்புப் பெயர் உண்டு. உலகம் அனைத்திற்கும் இனிமையுடன் உபசரிப்பவராக, எல்லோருடைய செவிகட்கும் இனிய சொற்களைக் கூறுபவராக, கவிபாடும் புலவர்கட்கு இனிமை தரும் பெரும் கொடையளிப்பவராக இருக்கும் காரணத்தால் 'சர்க்கரை' என்று பெயர் பெற்றார்களாம்.

''நற்காரை யூரில்வளர் நல்லசே னாபதிக்குச்
சர்க்கரையென்று ஓர்நாமம் சாற்றுவதேன் - மிக்க
புவிக்கும் செவிக்கும் புலவோர்கள் சொல்லும்
கவிக்கும் இனித்தருசி கண்டு''

என்பது தனிப்பாடலாகும்.

**கல்வெட்டுகள்**

பயிர குலத்தாருடைய கல்வெட்டுகள் கோயம்புத்தூர், நத்தக் காடையூர், ஆனூர், வெள்ளோடு, கவுண்டம்பாளையம், அரசம் பாளையம் (பட்டாலி), சிவமலை, கொம்மக் கோயில் ஆகிய இடங் களில் உள்ளன.

விக்கிரம சோழனின் பன்னிரண்டாம் ஆட்சியாண்டில் கோயம் புத்தூரில் உள்ள கோட்டை ஈசுவரன் கோயில் என்னும் சங்கமேசுவரர் கோயிலில் பயிரன்குலம் பாவனை வீரசோழகங்கன் சந்தியா தீபம் வைக்க ஒரு அச்சு பொற்காசு கொடையாகக் கொடுத்தார். இறைவன் பெயர் சங்கீஸ்வரர் என்று கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ளது.

நத்தக்காடையூர், செயங்கொண்டேசுவரர் கோயிலில் விசயநகர மன்னன் வீரமல்லிகார்ச்சுனராயர் காலத்தில் திருப்பணி நடைபெறும்போது காரையூர் பயிரகுல வீரநாயனார் கொங்கவேள தரையர், சிறுவப்பர் கொங்கவேளதரையர், காரையூர் வெள்ளாளர் பயிர்களில் கொற்றன் உத்தமக் காமிண்டன், அழகப்பெருமாள் உத்தமக் காமிண்டன், இராட்சதப் பெருமாள் ஆகியோர் பல தூண் களைக் கொடையாக அளித்துள்ளனர்.

வடமுகம் வெள்ளோடு கரையைச் சேர்ந்த பயிரகுல ராசாக் கவுண்டர் திருமலைக் கவுண்டர் இருவரும் கொம்மக்கோயில் பெருமாள் கோயிலில் வரதராசப் பெருமாள் செப்புப் படிமத்தை 1827 ஆம் ஆண்டு செய்தளித்துள்ளனர்.

பழையகோட்டை தீர்த்தகிரிச் சர்க்கரை (தீரன் சின்னமலை) சந்ததியைச் சேர்ந்த வாழத்தோட்டத்து வலசு ரங்கசாமிக்கவுண்டர், ரத்தினத்தாக் கவுண்டர் ஆகியோர் சிவமலைக் கோயிலில் 1899ஆம் ஆண்டு முன் மண்டபம் கட்டியுள்ளனர். சிவமலையில் 1858 ஆம் ஆண்டு கொற்றவேல் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார் 'பழையகோட்டை மடம்' கட்டியுள்ளார்.

தீர்த்தகிரிச் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார் (தீரன் சின்னமலை) சிவமலைக் கோவிலுக்குக் கொடுத்த கொடை பற்றிய கல்வெட்டுகள் கவுண்டம்பாளையத்திலும் அரசம்பாளையத்திலும் உள்ளன. 1621 ஆம் ஆண்டு விசுவநாதச் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார் நம் சொந்தப் பணத்தைக் கொண்டு நொய்யலாற்றில் புது அணைகட்டி வாய்க்கால் வெட்டி புன்செய் நிலத்தை நன்செய் ஆக்கியதை ஒரு கல்வெட்டு விளக்கமாகக் குறிக்கிறது.

வெள்ளோடு சர்வலிங்கேசுவரர் கோயில் மகாமண்டபத் தெற்குவாயில் மண்டபத்தைக் கட்டியவர் வெள்ளோடு பயிரகுலம் பழனிக்கவுண்டர் மகன் சரவணக் கவுண்டர் என்பவர்.

பூந்துறை நாட்டுச் சபையில் வெள்ளோட்டைச் சேர்ந்த பயிரகுலம் பிள்ளையாண்டான் என்பவர் அங்கம் வகித்ததாக வெள்ளோட்டுச் சர்வலிங்கேசுவரர் கோயில் கல்வெட்டுக் கூறுகிறது.

**செப்பேடு பட்டயங்கள்**

பூந்துறை நாடு, காங்கய நாடு, தென்கரை நாடு அரையநாட்டுப் பகுதியில் வேளாளர்கட்குத் தொல்லைகள் கொடுத்த வேட்டுவர் குலத்தலைவர் கொங்கராயனை வென்று அடக்கிய காரணத்தால் காரையூர்க் காணியை அழகன் சர்க்கரை பெற்றதைக் காரையூர்ச் செப்பேடு கூறுகிறது.

படைவீடு மேதி குலத்தார் 500 பொன்னாகரத்துக்குப் பெருந்துறைக் காணியைக் கொங்கச் செட்டியிடமிருந்து விலைக்கு வாங்கினர். பூந்துறைக் காடை குலத்தார் மேதி குலத்தாரின் காணியில் பாதியை விலைக்கு வாங்கினர். அதற்காக எழுதப்பட்ட செப்பேட்டில் முன்னிலை வகித்துக் கையெழுத்திட்டவர் வெள்ளோடு பயிரகுலப் பழனிக்கவுண்டர்.

பொருளந்தை குலத்தாரின் வெள்ளைப் பெண்ணை மணந்து வள்ளியறச்சல் ஆந்தை குலத்தார் பிடாரியூரில் கால்காணி பெற்ற செப்பேட்டில் வெள்ளோடு பயிரகுலம் பழனிக்கவுண்டர் கையெழுத் திட்டுள்ளார். முகுந்தனூர், திருப்பூர், மண்ணறை, ஊத்தலூர் முதலிய ஊர்க் காணியைக் கொங்குச் செட்டியாரிடமிருந்து எழுமாத்தூர்ப் பனங்காடை குலத்தார் விலைக்கு வாங்கிய செப்பேட்டில் வெள்ளோடு பயிரகுல விசுவராயக் கவுண்டர் கையெழுத்திட்டுள்ளார்.

திருவாச்சிக் காணியை ஆந்தை குலத்தாரும், ஓதாள குலத்தாரும் விலை கொடுத்து வாங்கி எழுதிய ஆவணத்தில் வெள்ளோடு பயிரகுலச் சென்னிமலைக் கவுண்டர் கையெழுத் திட்டுள்ளார். விசயநகர மன்னன் தேவப்பராயர் காலத்தில் புலவர்

நியமனம் செய்தபோது பூந்துறை நாட்டு சார்பில் நிகழ்ச்சியில் பங்கேற்றவர் வெள்ளோடு பயிரகுல விசுவராயக் கவுண்டர்.

பாசூர்க் குருக்கள் அகிலாண்ட தீட்சிதரைக் குலகுருவாகக் கொங்கு வேளாண் பெருமக்கள் பலர் ஏற்றுக் கொண்டு எழுதிய ஆவணத்தில் வெள்ளோடு விசுவராயக் கவுண்டர், கருப்பராயக் கவுண்டர் ஆகியோர் கையெழுத்திட்டுள்ளனர்.

கொங்கு நாட்டு ஆவணங்கள் பலவற்றிலும் கையெழுத்திட்ட பயிரகுலத்தாரில் வெள்ளோடு பயிர குலத்தார் மட்டுமே இடம் பெற்றுள்ளனர். அதனால் பயிர குலத்தார் காணியூர்கள் பல இருந்தாலும் வெள்ளோடே முதன்மைக் காணி என்பது தெரிகிறது.

**தீரன் சின்னமலை**

20ஆம் பழையகோட்டைப் பட்டக்காரர் சேனாபதிச் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார் தம்பி இரத்தினச் சர்க்கரை - பெரியாத்தாள் தம்பதியினர்க்கு 17.04.1756 அன்று பிறந்து பெருவீரராக விளங்கி வெள்ளையரை எதிர்த்து வீரப்போர் புரிந்து 31.07.1805 அன்று சங்ககிரியில் தூக்கிலிடப்பட்ட தீர்த்தகிரி என்ற பெயருடைய ''தீரன் சின்னமலை'' பயிர குலத்திற்குப் பெரும்புகழ் சேர்த்தவராவார்.

## 62. பரதர் குலம்

வேளாளர் 96 கீர்த்திப் பாடலும், கொடுமணல் இலக்கியமும் 'பரதர்' என்னும் குலம் பற்றிக் கூறுகிறது. கம்ப நாத சுவாமிகளின் கொங்கு மண்டல சதகத்திலும் 'பரத குலாதிபன் நல்லான் சிறுவன்' என்பவர் குறிக்கப்படுகிறார். இக்குலம் பற்றி எவரும் எழுதவில்லை.

உறுதியாக இராமன் தம்பி பரதனைக் குறிப்பதாக இக்குலம் இருக்க முடியாது. பரத கண்டம் என்ற வழக்கு இருந்தாலும் அதையும் குறிப்பதாகக் கொள்ளல் இயலாது.

'கூத்து' என்பது பரதத்தைக் குறிக்கும். கூத்தாடுவோர் 'பரதர்' எனப்படுவர். 'பல்லியமொடு நடிக்கும் பரதர்' என்பது பிரபுலிங்க லீலைத் தொடர். கொங்கு வேளாளர் ஆதரவு பெற்றவர்கள் 'கூத்தாடி' எனப்பட்டனர். 'கூத்தன் கூத்தப் பெருமாள்' 'நம்பியான மங்கை கூத்தன்' எனப் பலர். கூத்தோடு தொடர்புடைய பெயர்களை வைத்துக் கொண்டுள்ளனர். பல ஊர்கள் 'கூத்தன் பூண்டி' என்று பெயர் பெற்றுள்ளன. கூத்தாடுவோரை 'ஆடு பாத்திரம்' 'பாடு பாத்திரம்' என்று பிரித்தழைப்பது கொங்கு நாட்டு வழக்கம். 'வேளாளர் கூத்தாடி' என்பது ஒரு கூத்துக் கலைஞர் பெயர்.

கோயில்களில் ஆடற்கலை வல்ல பெண்களை 'மாணிக்கி' என நியமித்து 'சதிர்க்கச்சேரி' பார்த்ததாகப்பட்டயங்கள் கூறு கின்றன. மாணிக்கிகள் பலர் கூத்தாடிகளின் மகளாகவே உள்ளனர்.

கூத்துக்கலையில் வல்லவராகவோ, அல்லது கூத்தை ஆதரிப் பவராகவோ இருக்கும் வேளாளர் 'பரதர்' என்று அழைக்கப் பட்டு அவ்வழிவந்தோரும் 'பரதர்' 'பரதன்' என்று அழைக்கப்பட்டிருக்கலாம்.

''கரைதெரி வாணி மலைமகள் கேள்வன் கனகசபை
உரைதெரி பாவை வனந்தனி லேஎதிர் ஓடிவந்து
பரத குலாதிபன் நல்லான் சிறுவன்தன் பாரிதன்னை
வரைதெரி ஏழும் குலம்வகுத் தான்கொங்கு மண்டலமே''

என்பது கம்பநாத சுவாமிகள் சதகப்பாடலாகும் (22).

# 63. பவளன் குலம்

கொங்கு வேளாளர்களில் பொன்ன குலமும், மணியன் குலமும் பொன்னாலும், மணியாலும் பெயர் பெற்றது என்ற ஒரு கருத்து உண்டு. அதுபோல் பவளன் குலமும் பவளத்தால் பெயர் பெற்றிருக்கலாம். கொங்கு நாட்டில் இயற்கையாகவே பலவண்ண மணிக்கற்கள் கிடைக்கின்றன. அவற்றிலிருந்து பாசியும், மணிக்கற்களும் செய்ததுபோல கடல் சங்குகளைக் கொண்டு செய்த அணிகலன்களும் அகழாய்வில் கிடைக்கின்றன. செம்மை நிறம் கொண்ட பவளத்தால் செய்யப்பட்ட அணிகலன்களும் பல கிடைத்துள்ளன. அணிகலன் செய்யக் கடல் கரையிலிருந்து பவளத்தைக் கொண்டு வந்து 'வினை மாண் அருங்கலம்' செய்ய உதவியவர்கள் பவளர், பவளன் என்று பெயர் பெற்றிருக்கலாம். பவளத்தான் என்ற பெயர் ஆவணங்களில் கிடைத்திருப்பதும் இக்கருத்திற்கு வலுச்சேர்க்கிறது. ஈரோடு அருகே 'பவளத்தான் பாளையம்' என்ற ஊர் ஒன்று உள்ளது.

பவளம் போன்ற செம்மையான குணம் உடையவர்கள் பவளர் என்று பெயர் பெற்றனர் என்று தே.ப. சின்னசாமி கூறுகிறார். பவள குலத்தாரில் 'நெல்லரிசிப் பவளர், கம்பரிசிப் பவளர்' என இரு பிரிவினர் இருப்பதாகக் கூறப்படுவதால் இவைகளை விளைவிப்பவர்கள் பவளர் எனப் பெயர் பெற்றனர் என்று நல்.நடராசன் கூறுகிறார். பவளம் பவள குலத்தாரின் அடையாளச் சின்னம் என்று கு.சேதுராமன் கூறுகிறார். டி.எம். காளியப்பா 'நெல்லரிசி, கம்பரிசி' பிரிவைக் கூறுகிறார்.

## பவள குலத்தின் முதன்மையும் தொன்மையும்

சேர சோழ பாண்டியர்கள் தொண்டை மண்டலத்திலிருந்து கொங்கு நாட்டில் நற்குடி நாற்பத்தெண்ணாயிரம் வேளாளர்களைக் குடியேற்றினர். தங்கள் சீமையில் புதியதாக வந்த வேளாளர்கள் வலிமை பெறுவதைக் கண்ட வேட்டுவ சமூகத்தார் கொடுத்த

தொல்லைகளால் வேளாளர்கள் மீண்டும் தொண்டை நாட்டுக்கே சென்றுவிட்டனர்.

சேரமான் பெருமாள் மீண்டும் வேளாளர்களை அழைத்து வந்து தக்க பாதுகாப்புடன் கொங்கு நாட்டில் குடிவைத்தார். முதலில் நல்லுருக்கா நாட்டை உருவாக்கி கொடுங்கயம் என்ற ஊரில் மக்களைக் காக்கும் பொருட்டு ''பவளகுல பிரமியண வாணவ ராயரை'' முதல் அரசராக்கினார். இச்செய்தி சமத்தூர்ச் செப்பேட்டில் கூறப்படுகிறது.

கொங்கு காணியான பட்டயத்தில் மற்றொரு செய்தி கூறப்படுகிறது. வேளாளர்கள் கொங்கில் நுழையும்போது 'குலகோத்திரம்' தெரிந்தால்தான் நாட்டினுள் நுழைய அனுமதி கிடைக்கும் என்று கூறப்பட்டது. கம்பர் குல கோத்திரப் பிரிவுகளைக் கூறினார். முதலில் வந்தவர்களின் குலங்களைக் கம்பர் முதல் பாடலாகப் பாடினார்.

''சேரன் பாண்டி யன்பனகன்
செங்கோல் பெரியன் செம்பவளன்
தூரன் ஆந்தை காடைகுலன்
துலங்கு முடியன் ஓதாளன்
பாரம் சுமந்த பண்ணைகுலம்
படியளந்து உண்ணும் பயிரகுலம்
கீரன் வேந்தன் கோவேந்திரன்
கூறை பொன்னர் கொங்கினரே''

என்னும் முதல் பாடலில் பவளகுலம் செம்பவளன் என்று ஐந்தாவதாக இடம் பெற்றுள்ளது.

### காணி-குலம் பிரிப்பதில் ஆர்வம்

நாடுகள் பிரித்து எல்லை வகுத்து ஊர்கள் உண்டாக்கி எந்தெந்த ஊருக்கு யார் யார் காணியாளர்கள், குருக்கள், புலவர்கள் யார்யார் என்று நியமனம் செய்து அவை பட்டயமாக எழுதப்பட்டது.

அப்பட்டயம் ''கொங்கு காணியான பட்டயம்'' என்று கூறப்பட்டது. அப்பட்டயத்தில் எல்லாக் குலத்தாரும் கையெழுத்திட்டனர். பல குலங்கட்கு ஒருவர் அல்லது இருவர் மட்டுமே கையெழுத்து இட்டுள்ளனர். ஆனால் பவளகுலப் பெருமக்கள் ஐந்துபேர் கையெழுத் திட்டுள்ளனர். அவர்கள் பெயர்கள் செப்பேடு பட்டயத்தில் உள்ளது. ''பவளகுலத்தில் அழகப்ப கவுண்டர், ராய குமாரக் கவுண்டர், மாரண கவுண்டர், சுப்பிரமணியக் கவுண்டர், நல்லிக் கவுண்டர்'' என அப்பெயர்கள் உள்ளன. இது காணி,குலம் பிரித்ததில் பவள குலத்தார்க்கு இருந்த ஆர்வத்தைக் காட்டுகிறது. சமூகத்தில் அவர்களின் முக்கியத்துவத்தையும் காட்டுகிறது.

**காணியூர்கள்**

பவளகுலத்தார்க்கு ஒரு காணிப்பாடல் கிடைத்துள்ளது. கோகா நகரம், கணபதி, புத்தூர், கொழுமம், தழிஞ்சி, மருதுறை, சமத்தூர், பழனி, பழமங்கலம், வாழ்கரை ஆகிய ஊர்கள் பவளகுலக் காணியூர்கள் என்று காணிப்பாடல் கூறுகிறது.

''கோகா நகரம் கணபதி புத்தூர் கொழுமமுடன்
போகா தழிஞ்சிமிஞ் சியஞ்சேர் மருதுறை பேர்சமத்தூர்
பாகா நகுத மிலம்பு பழனி பழமங்கையும்
வாகாம் பவள குலத்தோர் இருக்கின்ற வாகரையே''

என்பது பவள குலத்தார் காணிப்பாடலாகும்.

நரையனூர் நாட்டில் குடியேறி கீரனூரில் தங்கித் தலைமை தாங்கிய பவளகுலத்தார் கண்டியம்மனையும், செல்லாண்டி யம்மனையும் வணங்கி வந்தனர். பொங்கலூர் நாட்டில் குடியேறிய பவளகுலத்தார் அங்கித் தொழு காளியம்மனை வணங்கிவந்தனர். ஓதாளர் அலகுமலைக் குறவஞ்சி அங்கித்தொழுவை 'ஐங்கநகர்' என்று கூறுகிறது.

''ஐங்க நகர்தனில் பவளர் நிலைபெறும் தலைவர்''
''ஐங்கநகர் தலைவர் அழகு நாரணன்''

என்பது அலகுமலைக் குறவஞ்சித் தொடர். பவளகுல அழகு நாரணன் மிகச் சிறந்த கொடையாளராக விளங்கினார்.

சர்க்கார் பெரியபாளையம் என்று இன்று வழங்கப் பெறும் முகுந்தனூர் குறுப்பு நாட்டு ஊர். அங்கு ஆறுசெஞ்சடை வேதாந்த சுவாமிகள் அருள் பெற்ற ''பவளகுல வாணவராயக் கவுண்டர்'' என்பவர் இருந்தார். சுவாமியார் ஆதரவுடன் பாலவேளாளர்க்கு ஆதரவாகச் செல்லகுலச் செம்பெரிச்சிகவுண்டர் நடத்திய போரில் ஆலோசனைகள் வழங்கியதுடன் போரில் கலந்துகொண்டு வெற்றிக்கும் பவளகுல வாணவராயக் கவுண்டர் உதவிகள் செய்தார். செல்லகுலச் செம்பெரிச்சிக்கவுண்டர் 'மரம்பிடுங்கிப் பட்டக்காரர்' என ஆனதற்குப் பவளகுலத்தார் பெரிதும் துணை புரிந்தனர்.

கவசை, கோயில்பாளையம் என வழங்கப்பெறும் சர்க்கார் சாமக்குளம் பகுதியில் கவைய காளியம்மன் கோயிலைக் குல தெய்வமாகக் கொண்டு பவளகுலத்தார் வாழ்ந்து வருகின்றனர். வெள்ளக் கிணற்றில் அந்துவன் குலத்தார் காணியாளர்களாக இருப்பினும், கோயில் நிர்வாகமும், தேர் ஓட்டும் பொறுப்பும் பவள குலத்தாருக்கேயுண்டு, திருப்பணியில் அந்துவன் குலத்தாரும் பங்கு கொண்டுள்ளனர். அருகில் உள்ள கோட்டப்பாளையம், கீரநத்தம், முத்தாக்கவுண்டனூர் ஆகிய பகுதி மணியம், நாட்டாமைப் பொறுப்புக்களும் பவள குலத்தார்க்கே இருந்துள்ளது.

கொடுவாய், அன்னூர் போன்ற ஊர்க் கல்வெட்டுகளில் பவள குலத்தார் பற்றிய குறிப்புகள் உள்ளன. அலங்கியம் தேசநாயகியம்மனை வழிபடும் பவள குலத்தார் அமரம்பூண்டி, எறமநாயக்கன் பட்டி, கணக்கன்பட்டி, கலிக்கநாயக்கன்பட்டி, பாப்பம்பட்டி, வேலாயுதம்பாளையம் ஆகிய ஊர்களில் வாழ்ந்து வருகின்றனர். கோட்டைமேடு அப்பிச்சிமார் சுவாமி பவள குலத்தார் குலதெய்வம் ஆகும். கோயமுத்தூரின் மேற்குப் பகுதியில் வாழும் பவள குலத்தார் வணங்கி வருகின்றனர். கடத்தூர் காளியம்மன் பவளகுலத்தார் குலதெய்வம். வீரப்பூர் தென்பள்ளி, கொழுமம், பிரமியம்,

தளவாய்பாளையம், கல்லூர், குரும்பபாளையம் முதலிய ஊர்களில் பவள குலத்தார் வாழ்ந்து வருகின்றனர். சோமன்துறை சித்தூர் - சங்கம்பாளையத்தில் ஊரதிகாரம் செய்யும் மணியகாரராகப் பவள குலத்தார் இருந்தனர்.

பவளகுலத் தலைவர்களான சமத்தூர்ப் பாளையக்காரர்கள் 'பவளகுல வாணவராயர்' 'பவள வங்கிசத்தார்' என்று குறித்துக் கொள்வது குலத்திற்குப் பெருமையளிப்பதாகும்.

**கல்வெட்டுகள்**

1) கோயில்பாளையம் கவையகாளியம்மன் கோயில் முன் மண்டபம் திருப்பணியைப் பவளகுலத்தார் மேற்கொண்டதை அக்கோயில் கல்வெட்டுக் கூறுகிறது.

> ''கலியுகாதி 4996 மன்மத வருஷம் வையாசி முன் மண்டபம் பிரித்து புதுக் கல்லுடன் சீரணத்துடன் தென்திசை வேளாள பவளகுலம் மணியம் வையாபுரிக் கவுண்டர் புத்திரன் ராயகுமாரக்கவுண்டன் யிதன் குலதெய்வக் குடிகளால் தொகை வசூல் செய்து சீரண உத்தாரணம் விரிவாய் செய்யலாச்சுது 1895 வருஷம் மே மாதம்''

2) பொள்ளாச்சி வட்டம் தேவணம்பாளையம் மாரியம்மன் கோயில் கிழக்குச் சுவர்க் கல்வெட்டு

> ''கீலக வருஷம் தை மாதம் 23ம் தேதி தேவணம்பாளையம் பவள கோத்திரம் இராமசாமிக் கவுண்டர் பெண்சாதி நஞ்சம்மாள் கண்டிய கவுண்டர் மகள் உபயம்.''

**பவளம்**

நவமணிகளில் சிறந்ததான பவளத்தின் பெயரால் குலப் பெயர் அமைந்தது என்று கொள்வதே சிறப்பு.

பவளம் தமிழ்நாட்டுக் கடலில் விளையும் பொருள் அல்ல. மத்திய தரைக்கடல் பகுதிகளில் எடுக்கப்பட்ட பவளம்தான் தமிழ்நாட்டுக் கிழக்குக் கடற்கரை வழியாக இறக்குமதி ஆயிற்று. அதைத்தான் ''குணகடல் துகிர்'' எனப் பட்டினப்பாலை கூறுகிறது. பவளம் செம்மை நிறம் உடையது. அதனால் செம்பவளம் எனப்பட்டது. மூதாய் (செம்மூதாய்) என்னும் இந்திரகோபப் பூச்சிக்குப் பவளத்தை ஒப்புமை கூறுவர். பொன், முத்து, மணி இவற்றோடு பவளத்தையும் சேர்த்து அணிகலன் செய்தனர். சங்க இலக்கியத்தில் 'துகிர்' என்ற சொல் பவளத்தைக் குறிக்கிறது.

சேயோன் ஆகிய முருகன் 'பவளத்தன்ன'' மேனியை யுடையவன் என்று இலக்கியம் கூறுகிறது. பவளம்-பவழம் என்றும் கூறப்படும். பவளத்தை அணிகலன்களில் சேர்த்து அணிவதில் பழந்தமிழர் பெரும் விருப்புடன் இருந்தனர். அகழாய்வில் பெரிதும் கிடைக்கும் ''கார்னீலியன்'' என்னும் மணிக்கல் பவளம் போன்று இருப்பதால் அதைச் சூதுபவளம் என்பர்.

**பேராசிரியர் கு.அருணாசலக் கவுண்டரவர்கள் கருத்து**

தொண்டை மண்டலத்தின் மேல் பகுதியும், தென்பெண்ணை யாற்றங்கரை நடுநாட்டின் வடமேல் பகுதியும் சேர்ந்து வேணாடு எனப்பட்டது. வேளிர் நாடுதான் வேணாடு.

அங்கு 'பங்களர்' என்போர் வாழ்ந்தனர். ''கொங்கணர் கலிங்கர் கொடுங்கரு நாடர், பங்களர் கங்கர் பல்வேற் கட்டியர்'' என்று சிலப்பதிகாரம் கூறும் அப்பங்களர்-பங்கள நாடர்தான் கொங்கு நாட்டில் குடியேறினர். பங்கள நாடர், பங்களர் - பகளர்-பவளர் என அழைக்கப்பெற்றதாகக் கவுண்டரவர்கள் கூறுகிறார்.

# 64. பனங்காடை குலம்

காடை குலத்திலிருந்து வேறான குலம் பனங்காடை குலம். கி.பி.8 ஆம் நூற்றாண்டைச்சேர்ந்த செங்கம் வட்டச் சின்னய்யன் பேட்டை நடுகல்லிலும், ஆத்தூர் வட்டம் செந்தாரப்பட்டி நடு கல்லிலும் 'சாகாடச் சிற்றன்' 'சாகாடன் நக்கன்' என்ற பெயர்கள் குறிக்கப் பெற்றிருப்பதால் சாகாடை, பனங்காடை என்ற வேறுபாடு குலங்கள் தோன்றிய நாளிலிருந்தே வழக்காற்றில் இருந்தது என்பது தெளிவு. இரண்டு குலங்களுக்கும் தனித்தனிக் காணிப்பாடல்கள் உள்ளன. காணியூர்கள் வேறு வேறாகவே உள்ளன. சிலர் காடை குலத்தின் ஒரு பிரிவு பனங்காடை குலம் என்று கூறுவர்.

'ஆத்தூர்க் காடை குலத்தார் பனங்காடை குலத்தார் என்று அழைக்கப்பட்டனர்' என்று டி.எம்.காளியப்பா கூறுகிறார்.

'பனைமரம் வளர்த்த காடை குலத்தார் பனங்காடை ஆயினர்' என்று தே.ப.சின்னசாமி கூறுகிறார். இவை பொருத்தமாக இல்லை.

'காடை குலத்திலிருந்து தோன்றியது பனங்காடை குலம்' என்று நல் நடராசன் கூறுகிறார்.

'எழுமாத்தூர்க் காணி கொண்ட காடை குலத்தார் பனங்காடை என்று அழைக்கப்படுகின்றனர்' என்கிறார் மோகன சுந்தரம்.

'காடைகுலமும் பனங்காடை குலமும் ஒரே குலம்தான்' என்று கு.சேதுராமன் கூறுகிறார்.

'பனை வளர்த்த காடை குலத்தினர் பனங்காடை குலத்தார் என்று கூறப்பட்டனர்' என்கிறார் இரா. இரவிக்குமார். பனங்காடு நிறைந்த பகுதியை ஆட்சி புரிந்த காரணத்தால் இவர்கள் பனங் காடர் ஆயினர் என க.பழனிசாமிப் புலவர் கூறியுள்ளார். எல்லோரும் அடிப்படையில் காடை குலமும்-பனங்காடை குலமும் ஒன்றே என்று கருதுகிறார்கள். தே.ப. சின்னசாமியும், நல்.நடராசனும் 'காடை குலத்தார்' ஏற்படுத்தியது 'காடையூர்' என்கின்றனர். நட்டூர் என்று

பெயர் பெற்ற ஊரில் வளர்ந்த காடைக் குருவிகள் யானைப் படையை விரட்டிய காரணத்தால்தான் நட்டூர் காடையூர் ஆயிற்று.

பனை என்ற சொல்லுக்கு நிலம் என்று பொருள். நிலத்தை உழுது வாழ்பவர் பனங்காடை குலத்தார் எனப்பட்டதாக நல். நடராசன் கூறுகிறார். நிலம் உழுவது எல்லா உழவர்கட்கும் பொதுத்தொழில். 'பனங்காடு' என்ற சொல்லின் வழியாகப் பனங்காடை என்று பெயர் ஏற்பட்டதாக டி.எம். காளியப்பா கூறுகிறார். 'பனம்' என்பதற்கு பெரிது, பெருமை என்ற பொருள் உண்டு. இதனாலும் பனங்காடை என்ற பெயர் தோன்றியிருக்கலாம். கல்வெட்டிலும், செப்பேடு பட்டயங்களில் 'பனங்காடர் குலம்' என்று காணப்படுகிறது.

ஆனால் இலக்கியங்களில் ''பாவாணர் தேடிவரும் பனங்காடை குலம்'', ''முந்துபனங் காடைகுல முத்துச்சாமி மன்னன்'', ''வேந்தன் எழு மாதைநகர் விளங்குபனங் காடைகுலன்'' எனப் பல இடங்களில் 'பனங்காடை' என்றே இக்குலம் குறிக்கப்படுகிறது.

**காணியூர்கள்**

பனங்காடை குலத்திற்கு இரண்டு காணிப்பாடல்கள் உள்ளன. அவற்றில் திங்களூர், எழுமாத்தூர், கொடுமணல், விசயமங்கலம், தென்நெல்லி, பட்டிலூர், திருமுருகன் பூண்டி, குந்தாணி, கச்சுப்பள்ளி, பவானி, மாத்தூர், கங்காபுரம், கொன்னையார், இடையாறு, மானூர், நடுவச்சேரி, கருவலூர், பிரமியம், குறுணி, கடுகநகர், கந்தமாபுரி, குறிச்சி, ஆத்தூர், மருதுறை, கிழாங்குண்டல், சுந்தரபாண்டிய நல்லூர், பஞ்சமாதேவி, ஊராட்சிக்கோட்டை, அனுமன்பள்ளி, மொடக்குறிச்சி, செங்கப் பள்ளி, ஆனங்கூர், கோனூர், மாவிளம்பதி, திருவைநகர், பனையம்பள்ளி, வைத்தியூர் ஆகிய ஊர்கள் காணியூர்கள் என்று குறிக்கப்பட்டுள்ளன.

### முதல்பாடல்

‘‘திங்களூர் எழுமாதை கொடுமணல் விசயமங்கலம்
தென்நெல்லி பட்டிலூரு
திருமுருகன் பூண்டிகுந் தாணியும் சச்சுபளி
திருவானி கூடல்மாத்தூர்

கங்கைபுரி கொன்னையார் இடையாறு மானூர்க்
கதித்தநடு வச்சேரியும்
கருவலூர் பிரமியம் குறுணியும் கடுகநகர்
கந்தமா புரிகுறிச்சியும்

பொங்கமுடன் ஆத்தூரு மருதுறை கிழாங்குண்டல்
புகழ்சுந்தர பாண்டியநல்லூர்
பொருள்பஞ்ச மாதேவி ஊராட்சிக் கோட்டைஅனு
மன்பள்ளி மொடக்குறிச்சி

செங்கைஆ னங்கூரு கோனூரு மாவிளம்
திருவைநகர் பனயம்பள்ளி
சீர்பெருகு வைத்தியூர் பனங்கா டைகுலச்
செல்வமிகு காணியாமே’’

### இரண்டாம் பாடல்

‘‘வடிதமிழ் சிறந்தஎழு மாதைமா னூருமாம்
வானிகூ டல்பிரமியம்
மாவிளம் பதிகுறுணி குந்தாணி பட்டிலூர்
மருதுறை கிழாங்குண்டலும்

இடையாறு கச்சுபளி ஊராட்சிக் கோட்டையும்
இனியநடு வச்சேரியும்
இன்பமொடு வன்குறிச்சி ஆத்தூர்பஞ் சமாதேவி
ஏற்கைபெறும் ஆறைநகரும்

கடிகமழ்ந் தருள்திங்க ளூர்கொன்னை யாறுடன்
கனகபனை யம்பள்ளியும்
காசினி மதிக்கவரு கோனூரு தென்நெல்லி
கதித்தஆ னங்கூரதும்

கொடுமணல் அவினாசி அரசுசெய் பனங்காடை
கோதிலக னாகவந்த
கொண்டலே தெய்வ சிகாமணி மகிழ்ந்தருள்
குமாரசின் னயராயனே''

கொடுமணலைத் தலைநகராகக் கொண்டு நாட்டு நிர்வாகம் செய்த எழுமாத்தூர்ப் பனங்காடை குலத்தலைவர்கள் மீது பல சிற்றிலக்கியங்களும், தனிப் பாடல்களும் உள்ளன. 'கந்தசாமி காதல்' என்னும் இலக்கியத்தின் பாட்டுடைத் தலைவர் பனங்காடை குலப் பெருமகன் கந்தசாமிக் கவுண்டரோடு தொடர்புடைய காணியூர்கள் அவ்விலக்கியத்தில் கூறப்பட்டுள்ளன.

''நல்லூர் கொடுமணலூர் நாரிஎழு மாதைநகர்
வெல்லும் மருதுறையும் விளங்குதிங்கள் மாநகரும்

கோனூர் மொடக்குறிச்சி குவலயத்தில் ஆத்தூரும்
மானூர் பிரமியமும் வானிகூ டல்பதியும்

ஆனங்கூர் கொன்னை யாறும் பனயம்பள்ளி
சேனை நகர்க்கதிபன் செய்யபனங் காடைகுலன்

நலஞ்சிறந்த காராளன் நற்குவளை மார்பன்
குலம்மிருந்த சோமன்எனும் குறுப்புவள நாடதிபன்''

என்பது கந்தசாமி காதல் இலக்கியப் பகுதியாகும்.

**பிற இலக்கியங்களில் - காணி நூல்**

மருதுறைக் காணியாளர்களைத் தொகுத்துக் கூறும் பாடல் பகுதி காங்கய நாட்டுக் காணிப் பாடலில் இடம்பெற்றுள்ளது.

''அவனிமிசை மருதுறையில்வாழ்
அதிகபனங் காடையை புகழ்பெற்ற ஆந்தையை
அன்புமிகும் செங்கண்ணனை''

என்பது அப்பகுதியாகும்.

**பெரியண்ணன் குறவஞ்சி**

வெள்ளோடு பயிரகுலப் பெரியண்ண கவுண்டர் மீது பாடப் பட்ட இலக்கியம் பெரியண்ணன் குறவஞ்சி, பாடிய புலவர் வெள்ளோடு குமாரசாமிப் புலவர். அந்நூல் அரங்கேற்றத் திற்கு வருகை தந்து புலவரைப் பலர் சிறப்பித்தனர். அவர்களில் எழுமாத்தூர்ப் பனங்காடை குலத்தாரும் அடங்குவர். அவர்கள் பெயரைப் புலவர் தம் நூலிலேயே சேர்த்துள்ளார்.

''வேதமே புகழ்எழு மாதை யூர்தனில்
கனம்போல் உதவும் பனங்காடை கோத்திரன்
பூசித வாரண வாசிமன் னவனும்
சொல்லதில் நிலைசேர் நல்ல குமாரு''

என்பவர்கள் புகழப்படுகின்றனர்.

**அலகுமலைக் குறவஞ்சி**

திருப்பூர்ப் பனங்காடை பொன்னய்யன், மண்ணறைப் பனங்காடை மந்திரி முத்துமன்னன், ஊற்றலூர்ப் பனங்காடை ஈசுவரமூர்த்தி ஆகியோர் அலகுமலைக் குறவஞ்சியில் புகழ்ந்து கூறப்பட்டுள்ளனர்.

**தனிப்பாடல்கள்**

எழுமாத்தூர்ப் பனங்காடை குல முத்துப் பொன்னய்ய கவுண்டர் ஏழைகளையும், இரவலர்களையும் ஆதரித்துப் புகழ் பெற்றார் என்று ஒரு புலவர் பாடியுள்ளார்.

''எழுமாதை நகர்க்கதிபர் இரவலர்சேர் பனங்காடை
வழுவாத கீர்த்திபெற்ற மன்னர் - பழுதில்லா
வித்வசனர்க் கேஉதவும் வேந்தனே கீர்த்திபெற்ற
முத்துப்பொன் னையன்வேள் முகம்''

என்பது புலவர் வாக்காகும்.

எழுமாத்தூர்ப் பனங்காடை குல முத்துக் காங்கயகவுண்டர் மகன் பொன் கவுண்டய்ய கவுண்டருக்குத் திருமுருகன்பூண்டி முருகீசர் சன்னதியில் நாட்டுத் தலைவராக முடி சூட்டினர். சேவூர், செவளம்பூண்டி அரசு அலுவலர்கள் இந்நிகழ்ச்சியை நடத்தினர்.

''வளமைதிகழ் கலியுக சகரநா லாயிரத்து
வழங்குமுப்பத் தைந்துமேல்
வருகின்ற குரோதன ஆண்டுதை மாசமும்
வடிதமிழ் விளங்கவந்த

அழகுதிகழ் ஒன்பதாம் திகதிரே வதிவெள்ளி
அன்புற்ற சுபதினத்தில்
ஆதிகன் எழுமாதை வளர்பனங் காடைகுலன்
அருள்முத்துக் காங்கயன்சொல்

செழுமலர்ப் புயனான பொன்கவுண் டய்யனுக்கு
செம்பொன்முடி சூட்டுநாளில்
சேவையம் பதிஅரசு சோழரா சேந்திரன்
செவளையில்க் குமாரசாமி

நளினமிகு கொங்காறு நாட்டினில் கந்தபுரி
நாதர்முரு கீசர்முன்பாய்
நாட்டிலுயர் சிவசுப்பிர மண்ணியகுரு தேசிகன்
நாட்டிவைத் தருள்பட்டமே''

என்பது அம்முடிசூட்டுவிழாப் பற்றிய பாடலாகும்.

புலவர் ஒருவர் வேளாளரின் சிறப்புக்களையெல்லாம் கூறி அம்மரபில் வந்த கொடுமணல் பனங்காடைகுல ஈசுவரமூர்த்திக் கவுண்டர் மகன் பொன்னையன் அவர்களைக் காக்கவேண்டும் என்று சிவமலைக் குமரனை வேண்டிப் பாடியுள்ளார். அதற்காக அத்தனூர் அம்மனை வணங்குவதாகவும் கூறுகிறார்.

''அருள்சுதா சிவமலைக் குமரனே
அடியன் விண்ணப்ப மதுகேள்
அருள்பரவு அம்புவி இனிதான கொடுமணல்
அத்தனூர் அம்மன் இருதாள்
அகமதனில் இனிதுடன் இரவுபகல்
அர்ச்சனைசெய் தேதுதிப்போம்
ஆதிநாள் ஒரு நாவலர்க்கு அரவின் வாய்மணியை
அங்கையால் வாங்கியீந்தோம்
அமரர்மனம் மகிழவே முளைவாரி அமுதிட்டு
அதிகபுக ழேகொண்டவன்

தருவுலவு மடகின்மிசை வருகின்ற நீலிபழி
தான்கொடுத் துப்புகழும் பெற்றோம்
குபேரன் சதுருள்ள பனங்காடை குலதிலகன்
கெம்பீரன் சற்குண உதாரன்

சதாசு பரமூர்த்தி நற்றவம் தன்னில்வரு
மகிமைகள் கொண்ட மைந்தன்
தகவுடைய பொன்னையன் மகிபன் கிருபை
தந்துகை காக்கவென்றே''

என்பது புலவர் பாடலாகும்.

**புகழ்கொண்ட புதுக்காணிகள்**

பனங்காடை குலத்தாரைப் போல் கொங்கு எங்கணும் பரவிப் புதுப்புதுக் காணியூர்களைப் பெற்றவர்கள் கொங்குச் சமுதாயத்தில்

வேறு யாரும் இல்லை. அவற்றைக் கல்வெட்டு, செப்பேடு, பட்டயங்கள் இலக்கியங்கள் மிக விரிவாகக் கூறுகின்றன.

## குறுப்பு நாட்டு முதல் காணியாளர்

குறுப்பு நாட்டில் 32 தலைமையான பழம்பதிகள் உள்ளன. அவை குருமந்தூர், கோசணம், செவியூர், அயிலூர், கொளப்பலூர், அலங்கியம், முடச்சூர், கலிங்கயம், ஆதியூர், சிறுவலூர், குன்னத்தூர், அழுக்கொளி, தாளூன்றி, திங்களூர், மூதூர், நல்லூர், திருப்பூர், வாய்ப்பூர், விசயமங்கலம், நிரம்பையூர், கூடலூர், சிறுக்களஞ்சி, செங்கப்பள்ளி, மண்ணறை, சீனாபுரம், பாலத்தொழு, வெள்ளிரவெளி, முகுந்தனூர், கத்தாங்கண்ணி, கொடுமணல், அமுக்கயம், தக்களூர், ஊத்துக்குளி என்பன.

இந்த 32 கிராமத்தில் முதல் உரிமையும், கதித்தமலையில் முதல் விபூதி பெறும் உரிமையும் பனங்காடை குலத்தாருக்கே உரியது என்று ''குறுப்புநாட்டுக் காணியாளர் செப்பேடு'' கூறுகிறது.

> ''இந்தக் குருப்பை நாட்டுக்கு முப்பத்திரண்டு கிராமத்துக்கும் முதல்வனாகிய தென்திசை வேளாளக் கவுண்டர்களில் பனங்காடை குலத்தில் சோளியாண்டாக் கவுண்டர் கதித்தமலை ஆண்டவருக்குத் தேரும் திருநாளுக்கு முந்தின விபூதி பிரசாதம் சோளியாண்டாக் கவுண்டருக்கு''

என்பது பட்டய வாசகம் ஆகும்.

## ஆயிரம் பூநாகரத்துக்கு ஐந்து ஊரில் காணி

ஈரோட்டில் ஆளித மகாராயர் ஆளும்போது எழுமாத்தூர்ப் பனங்காடை குல சோழியாண்டாக்கவுண்டர், கொங்குச் செட்டியார் காசிலிங்கம் செட்டியாரிடமிருந்து முகுந்தனூர், நல்லூர், திருப்பூர், ஊத்தலூர், மண்ணறை ஆகிய ஊர்களின் பாதி உரிமையை ஆயிரம் பூநாகரம் பொன்னுக்கு விலைகொடுத்து வாங்கிய விபரம் முகுந்தநல்லூர்ப் பட்டயத்தில் எழுதப்பட்டுள்ளது.

> ''கொங்கு மண்டலத்துள் பூந்துறை நாடு எழுமாத்தூர்க் காணி யாளரில் பனங்காடை குலத்தில் ஆண்டாக் கவுண்டருடைய குமாரன் சோழியாண்டாக் கவுண்டர் தென்குறுப்பை வீர சோழபுர நாட்டில் முகுந்தைநல்லூர்ச் சீமைக்குச் சுபாதீனமான காணியாளன் கொங்கச் செட்டிகளில் திருமிய கோத்திரத்தில் அவினாசிசெட்டியாருடைய குமாரன் காசிலிங்கம் செட்டியார் கையில் 1000 பூநாகரம் கொடுத்து முகுந்தநல்லூர்ச் சீமை கிறையமாக வாங்கு கையில் முகுந்த நல்லூர்ச் சீமைக்கு முந்தின சரி பங்குக் காணியாளனென்று நாட்டி வைத்துக் கொண்டோம்''

என்பது செப்பேட்டுப் பகுதியாகும். ஈரோடு கொங்கிலம்மன் கோயிலில் செப்பேடு எழுதப்பட்டது.

**நல்லூர்க் காணியில் ஆத்தூர்ப் பனங்காடை குலத்தார்**

நல்லூர்ப் பகுதியை மதுரை வீரப்பநாயக்கர் காலத்தில் கொங்கச் செட்டி பவளத்தான் என்பவர் நிர்வாகம் செய்து வந்தார். அவரால் மதுரைக்கு வரிப்பணம் கட்ட முடியவில்லை. அப் பகுதிக்குத் தன் மாட்டுப்பட்டியோடு மேய்ச்சலுக்கு ஆத்தூர்ப் பனங்காடை குல முத்து நஞ்சப்ப கவுண்டர் மகன் சோழியப்ப கவுண்டர் வந்தார். அவரிடம் கொங்குச் செட்டியார் பவளத்தான் ''நமக்கு அரமனை முடிப்புக்குப் பணம் செல்லாமலிருக்கிறபடியால் நீ ஆயிரம் பொன்னாகரமும் பத்துப் பொதி நெய்யும் கொடுத்தால் இந்தக் காணியாட்சியிலே உனக்குப் பாதி கொடுக்கிறேன்'' என்று பவளத்தான் ஆத்தூர்ப் பனங்காடை குல சோழியப்ப கவுண்டரிடம் கூறினார். அவ்வாறே சோழியப்பகவுண்டர் பணமும் நெய்யும் கொடுத்து நல்லூர்க் காணியைப் பெற்றார். இதற்கான ஆவணம் குண்டடம் வடுகநாதசுவாமி கோயிலில் எழுதப்பட்டது.

**அவினாசி, திருமுருகன்பூண்டிக் காணி பெறல்**

மதுரைச் சொக்கலிங்க நாயக்கர் ஆட்சிக் காலத்தில் அவிநாசி திருமுருகன்பூண்டிப் பகுதியைப் பாலவேளாளர் பயிசலி கோத்திர

இம்முடி சோழியாண்டாக்கவுண்டர் மகன் வீரவிக்கிரம சோழியாண்டாக் கவுண்டர் நிர்வாகம் செய்து வந்தார். அவர் மதுரைக்குச் செலுத்த வேண்டிய வரிப்பணம் 15000 பொன் பாக்கியாகிவிட்டது. மூன்று நாளில் பாக்கியைச் செலுத்தாவிட்டால் நிர்வாக உரிமையை இழப்பதுடன் கைது செய்து சேவூரில் சிறை வைக்கப்படுவார் என்று அரசன் ஆணையிட்டார்.

அப்போது எழுமாத்தூர்ப் பனங்காடைகுலப் பொங்கியாக் கவுண்டர், மருதுறை ஆந்தை குலச் செல்லப்பகவுண்டர், கொற்றனூர் ஆந்தை குலச் சரவணகவுண்டர் மூவரும் ஆளுக்கு 5000 பொன் கொடுத்து ஆதரித்தனர்.

அதற்காக மேற்கண்ட மூவருக்கும் அவினாசி, திருமுருகன் பூண்டி ஊர்க்காணியும், கோயில் உரிமையும் அளிக்கப்பட்டது. இதற்கான பட்டயம் திருமுருகன் பூண்டி முருகநாதர் கோயிலில் எழுதப்பட்டது. திருமுருகன் பூண்டியில் வாழ்ந்த அத்துணைச் சமூகத்தினரும் இசுலாமியர் உட்படக் கையெழுத்திட்டுள்ளனர்.

**பனங்காடை நந்தவனம்**

06.05.1644 அன்று கொங்கு நாடெங்கும் உள்ள பனங்காடை குல வேளாளரில்,

| | | |
|---|---|---|
| எழுமாத்தூர் | - | குமாரசாமிக்கவுண்டர், தெய்வசிகாமணிக் கவுண்டர், அத்தப்பகவுண்டர், வேம்பாண்ட கவுண்டர், நாச்சியப்பகவுண்டர் |
| ஆனங்கூர் | - | வேலகவுண்டர், செங்கோட கவுண்டர், ஆனந்தகவுண்டர், கொங்கலாயிக் கவுண்டர் |
| கொன்னையாறு | - | பெரிய நல்லாக்கவுண்டர், பெரிய புள்ளிக்கவுண்டர், சின்னப்புள்ளிக் கவுண்டர், பெரிய பெரிச்சிக்கவுண்டர், தேவராடி மாரப்பகவுண்டர், விருமாண்டக் கவுண்டர், |

| | | |
|---|---|---|
| காட்டுப்பாளையம் | - | வேலகவுண்டர் |
| கூத்தம்பூண்டி | - | பெரியநல்லாக்கவுண்டர், பிடாரப்பகவுண்டர், செல்லப்ப கவுண்டர், சாமிக்கவுண்டர் |
| அறச்சலூர் | - | சோழியப்பகவுண்டர் |
| ஆத்தூர் | - | சோழியப்பகவுண்டர் |
| கிழாம்பாடி | - | குமாரசாமிக்கவுண்டர் |
| மொடக்குறிச்சி | - | குமாரசாமிக்கவுண்டர் |
| மருதுறை | - | நல்லகுமரக்கவுண்டர், வீரணகவுண்டர் |
| ஊராட்சிக்கோட்டை | - | அர்த்தநாரிக் கவுண்டர், சின்னாக்கவுண்டர் |
| பிரமியம் | - | வாரணவாசிக்கவுண்டர் |
| மருக்காரம்பட்டி | - | வேலகவுண்டர் |
| கோனூர் | - | குப்பச்சிக்கவுண்டர், சோழியப்பகவுண்டர் |
| பொத்தனூர் | - | கந்தப்பகவுண்டர் |
| பட்டிலூர் | - | இளைச்சிக்கவுண்டர் |
| ராசாபாளையம் | - | வேலகவுண்டர் |
| கொடுமணல் | - | புடாரப்பகவுண்டர், செல்லப்பகவுண்டர், சாமிக் கவுண்டர், செல்லப்பகவுண்டர் |
| கூனவேலம்பட்டி | - | அர்த்தநாரிக்கவுண்டர், ஆறுமுகக்கவுண்டர், ராமசாமிக் கவுண்டர் |

ஆகியோர் திருச்செங்கோட்டில் ஒன்றாகக் கூடினர்.

திருச்செங்கோட்டில் நந்தவனம் அமைத்து கோயில் பூசைக்குப் பூக்கள் கொடுக்கவும், தண்ணீர்ப் பந்தல் வைத்து உப்பு, ஊறுகாய், நீராகாரம் வழங்கவும், வைகாசி விழாவில் அன்னதானம் செய்யவும்

ஏற்பாடு செய்தனர். திருச்செங்கோடு பணிமலைக் காவலர் பூசாரிகளில் பழனிப்பூசாரி மகன் குழந்தைப் பூசாரியை நந்தவனம் பார்க்க நியமித்தனர். கொங்கு நாட்டுப் பனங்காடை குலத்தார் அனைவரும் ஏருக்கு மூன்று வள்ளம் தானியம் கொடுக்கவேண்டும் என்று நிர்ணயம் செய்தனர்.

## புலவரும் குருக்களும்

பனங்காடை குலத்தார் ஒன்றாகக் கூடித் தங்கள் குலத்திற்கு என்று ஒரு காணியுரிமையுடைய புலவரை நியமித்தனர். அவருக்குப் 'பனங்காடை குல மெச்சன்'' என்று பெயர் வழங்கியது. அதே போல ஞானசிவாச்சாரியார் இம்முடி அகிலாண்ட தீட்சிதரைக் குலகுருவாக ஏற்றுக்கொண்டு எழுமாத்தூர், குமாரசின்னய்ய கவுண்டர், நல்லய்ய கவுண்டர், அவிநாசிக் கவுண்டர், முத்துராம கவுண்டர், செங்காளிக் கவுண்டர், பொங்காளிக்கவுண்டர், காளியப்ப கவுண்டர், குப்ப கவுண்டர், ஊராட்சிக்கோட்டை அர்த்தநாரிக் கவுண்டர், பழனிக் கவுண்டர் ஆகிய பனங்காடை குலக் கவுண்டர்கள் செப்பேட்டில் கையெழுத்திட்டுள்ளனர். புலவருக்கும், குருக்களுக்கும் கொடுக்க வேண்டிய வர்த்தனையைத் தவறாமல் கொடுப்போம் என்று ஒப்புக்கொண்டுள்ளனர்.

## சமுதாய ஒப்பந்தங்களில் பனங்காடை குலத்தார்

கத்தாங்கண்ணி சிவந்திகுலத் தீத்தாக் கவுண்டரின் வெள்ளைப் பிள்ளையை மணந்துகொண்ட கண்ணகுலச் செங்கோட்டு வேலப்ப கவுண்டருக்கு கத்தாங்கண்ணிக் காணி முழுவதையும் கொடுத்து விட்டுச் சிவந்தி குலத்தார் கீழ்க்கரைப் பூந்துறை நாட்டு இருப்புலிக்குக் குடியேறி விடுகின்றனர். இதற்காக எழுதப்பட்ட பட்டயத்தில் திருப்பூர் பனங்காடைகுல முத்துராசாக் கவுண்டர் சாட்சிக் கையொப்பமிட்டுள்ளார்.

சோழர் காலத்தில் நியமனம் ஆன கொங்குக் காணிப்புலவர் வழக்கம் இடைக்காலத்தில் நின்று விட்டது. கொங்கு வேளாளர்கள் வேண்டிக் கொள்ளவே கொங்கு 24 நாடுகட்கும் காணிப்புலவர்கள்

நியமிக்கப்படுகின்றனர். இதற்காக எழுதப்பட்ட பட்டயத்தில் பனங்காடை குலம் சார்பாகக் கையெழுத்திட்டவர் சோழியாண்டாக் கவுண்டர் என்பவர்.

கொடுமணல் கிராமத்தை அவிநாசிக் கோயிலுக்குக் கொடை கொடுப்பதற்காக ஆனந்தபட்டன் என்பவரிடம் 2000 நகரடிப் பொன் கொடுத்து நஞ்சண செட்டியார் என்பவர் விலைக்கு வாங்கினார். கொடுமணல் பாண்டியன், பனங்காடை, சேரன், கொடிக்கால்காரர் கணக்கர்குலம் ஆகியோருக்குக் காணி என்று கூறப்பட்டுள்ளது.

கொங்கு நாட்டுச் செல்ல குலத்தார் அனைவரும் கூடித் தங்கள் செல்ல குலத்திற்கு மாணிக்கியாக ‘வேளாளர் கூத்தாடிகளில் கந்தபட்டன் மகள் அத்திப் பெண்ணை செல்ல குல மாணிக்கியாக நியமனம் செய்தனர். இதற்குச் சாட்சிக் கையொப்பமிட்டவர் கொன்னையாத்துப் பனங்காடர் குல பெரிச்சிக்கவுண்டர் மகன் சின்னப் பெரிச்சிக் கவுண்டர் என்பவர்.

### கல்வெட்டுகள்

பனங்காடை குலம் தொடர்பான கல்வெட்டுகள் விசயமங்கலம், திங்களூர், வெள்ளோடு, கொடுமணல் ஆகிய இடங்களில் உள்ளன.

1. கொங்குச் சோழமன்னன் வீரராசேந்திர தேவனின் 3ஆம் ஆட்சியாண்டில் (1210) கூடூர் வெள்ளாளன் பனங்காடரில் கோவன் மனிச்சர் என்பாரின் மனைவி உண்ணாடி என்பவர் விசயமங்கலம் நாகீசுவரர் கோயிலில் சந்தியா தீபம் வைக்க ஸ்ரீயக்கி பழஞ்சலாகை அச்சு ஒன்று கொடையாகக் கொடுத்தார்.

2. கொங்குச் சோழன் வீரராசேந்திரன் காலத்தில் 21 ஆம் ஆட்சி யாண்டில் (1238) குறுப்பு நாட்டுக் கூடூர் வெள்ளாளர் பனங்காடரில் சொக்கன் கொற்றன் என்பவர் திங்களூர் சிவாலயத்தில் நந்தா தீபம் வைக்க பழஞ்சலாகை அச்சு ஒன்று கொடையாக அளித்தார்.

3. கொடுமணல் அருகேயுள்ள மொசக்குத்திவலசு என்ற ஊரைச் சேர்ந்த சாத்தந்தை குலத்தார் கொடுமணலில் இராமசாமி கோயில் கட்டினர். 'சீரங்கராமர்' என்று இராமர் அழைக்கப்படுகிறார். 1821ஆம் ஆண்டு அக்கோயில் கட்டும் போது பனங்காடை குலக் கயிலாசக் கவுண்டர் பேரனும், முத்துக்கவுண்டர் மகனுமான வெள்ளைக்கவுண்டர் அவர்கள் அக்கோயிலுக்குத் தூண் ஒன்றைத் தன் கொடை யாக அளித்தார்.

4. பூந்துறை நாட்டுச் சபையில் எழுமாத்தூர்ப் பனங்காடை குல பெரியண்ண காகுத்தர் என்பவர் உறுப்பினராக இருந்தமை பற்றி வெள்ளோடு சர்வலிங்கேசுவரர் கோயில் கல்வெட்டுத் தெரிவிக்கிறது.

**பனங்காடை - ஒரு பறவை**

'பனங்காடை' என்ற பெயரில் வண்ணப் பறவை ஒன்று உள்ளது. அதற்குக் காட்டுக்காடை, பால்குருவி, கோட்டைக்கிளி என்ற பெயரும் உண்டு. சாதாரணக் காடையை 'சாகாடை' என்றும் அழைப்பர். எனவே சாகாடை-பனங்காடைகளை அடையாளச் சின்னமாக உடையது சாகாடை, பனங்காடை குலமாகவும் இருக்கலாம். பறவை இயலார் பனங்காடையை "INDIAN ROLLER' என்றும், சாகாடையை "COMMON QUAIL' என்றும் அழைப்பர். பனங் காடையைப் பார்ப்பது நல்ல சகுனமாகக் கருதப்படும். காண் போருக்கு உணவு கிடைக்கும் என்றும் கூறுவர். 'சப்தார்த்த சிந்தாமணி' என்னும் வடமொழி நூல் பனங்காடைக்கு சாஷம், நீலகண்டம், அசோகம், விசோகம், நந்தனம், புஷ்டிவர்த்தனம், ஏமதுண்டம், மணிக்கிரீடம், சுவத்திகம், சுபராசிதம் என்ற பத்துப் பெயர்களைக் கூறுகிறது (கூகுள்).

## 65. பனையன் குலம்

பனையன் என்ற குல முதல்வனின் பெயரால் இக்குலம் பெயர் பெற்றது என்று டி.எம். காளியப்பா கூறுகிறார். நல்.நடராசன் பனையன் குலத்தை 'பணையர் குலம்' என்று கூறுகிறார். பண்ணை என்ற சொல் பணை என்று மாறும் என்றும், அச்சொல் நிலத்தைக் குறிக்கும் என்றும், நிலத்தை உழுபவர் பணையன் என்று அழைக்கப் பட்டனர் என்றும் கூறுகிறார். எல்லாக் குலத்தினரும் நிலத்தை உழும்போது ஒரு குறிப்பிட்டவர் மட்டும் அதனால் பெயர் பெறுவர் என்பது ஆய்வுக்குரியது. பனையன் குலத்தைப் பணையன் குலம் என்று கூறுவதற்குச் சான்று இல்லை.

கொங்கர்-தமிழரின் வாழ்வோடு இரண்டறக் கலந்த பனைமரம் என்பதன் அடிப்படையிலேயே பனையன் குலம் பெயர் பெற்றிருக் கலாம். தமிழர்கள் தினை என்பதைச் சிறு அளவிற்கும், பனை என்பதைப் பெரிய அளவிற்கும் உரிய சொல்லாகப் பயன்படுத்தினர். இப்பொருளில் திருவள்ளுவர் தன் அறம், பொருள், இன்பம் என்ற முப்பாலிலும் கையாள்கிறார்.

''தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்தெரி வார்'' (104)

''தினைத்துணையாம் குற்றம் வரினும் பனைத்துணையாக்
கொள்வர் பழிநாணு வார்'' (433)

''தினைத்துணையும் ஊடாமை வேண்டும் பனைத்துணையும்
காமம் நிறைய வரின்'' (1282)

என்பன குறட்பாக்கள்.

சேரர்க்கு உரிய பூ பனம்பூ; அதையே அவர்கள் அணிவர். கடல் கொண்ட குமரிக் கண்டத்தில் 'ஏழ்பனை நாடு' எனும் பகுதி இருந்ததாகக் கூறுவர். தொல்காப்பியர் பனை என்ற சொல்லோடு பிற சொற்கள் வரும்போது எவ்வாறு மாற்றம் அடையும் என்று

விரிவாகக் கூறுகிறார். சங்க இலக்கியங்களிலும் 'பனை' பல இடங்களில் குறிப்பிடப்படுகிறது.

''இரும்பனை வெண்தோடு மலைந்தோன்'' (புறம் 45)

''வண்டு இசைகடவாத் தண்பனம் போந்தை'' (பதிற். 70)

போந்தை, பெண்ணை என்ற சொற்களும் பனையைக் குறிக்கும். பின்னாளில் தாலம், தாளி, புற்பதி, புல்தாளி என்ற சொற்களும் பனையைக் குறித்தன. பனையின் எல்லாப் பாகங்களும் பயன்பாட்டுக்கு உரியன. ''பண்ணை பாராதவன் பனையைப் பார்ப்பான்'' ''பனை இருக்கும் நாட்டில் பஞ்சம் இல்லை'' என்பது பழமொழி. வள்ளுவர் கூறுகின்ற பயன்மரமாகப் பனையைக் கருதலாம். பனையம்பள்ளி, பனைப்பாடி, பனங்காட்டூர், பனை மரத்துப்பட்டி போன்ற பல ஊர்கள் பனைமரத்தோடு தொடர்பு உடையன. தென்னிலைச் செப்பேட்டில் கோடந்தூர் பனைய குல வேளாளரில் புள்ளாக் கவுண்டர் என்பவர் சாட்சிக் கையொப்ப மிட்டுள்ளார். பனையெழுபது, தாலவிலாசம் போன்ற நூல்கள் பனையின் பல்வேறு பயன்களைக் கூறுகின்றன. கோடந்தூர், அருங்கரை, மொஞ்சனூர், தனிச்சயம், பழையபாளையம், பாலமேடு, ஆனைப்பாழி, சாணார்பாளையம் என்பன பனையன் குலத்தார் காணியூர்களாகும்.

மணநாட்டுக் கூடலூர் அருங்கரையம்மன் புகழ் வாய்ந்த கோயில். அக்கோயிலில் வெண்டுவன், பண்ணை குலத்தாரோடு பனையன் குலத்தாரும் காணியாளர்களாக உள்ளனர். கவிஞர் புதுமதியன் தன் நல்லதாய் என்னும் நூலில்,

''வெண்டுவர் பண்ணையர் பனையர் குலாதிபர்கள்
வேண்டிடும் குல தேவதை
வேண்டிடும் வரம்எலாம் ஆண்டிடத் தந்தருள்
விளைவுசெய் கிறதேவதை''

"மண்டலம் தன்னில் மணல்நாட்டில்-புகழ்
மண்டி விளங்கிடும் காராளர்
வெண்டுவர் பண்ணை பனையர்களும்-தினம்
வேண்டும் குலதெய்வம் ஆகிநின்றாள்"

எனக் கூறியுள்ளார்.

கூடலூர்க் கிராமத்தில் வாழ்ந்த பனைய குலத்தார் கூடலூர்ப் பனையர் என்றும், அதேபோல பாலமேட்டுப் பனையர், அருங்கரைப் பனையர், கரூர்ப்பனையர் என வாழும் இடத்திற்கேற்ப அழைக்கப் பட்டனர். பாலமேட்டுப் பனைய குலப் பெருமக்களே கூடலூரில் குடியேறினர்.

**கூடலூரில் பனையர் காணி பெற்ற வரலாறு**

கூடலூரில் செல்வாக்குப்பெற்ற வெண்டுவன் குலத்தார் ஆகிய உள்ளூர்க் கவுண்டர் குதிரை காணாமல் போய்விட்டது.எங்கு தேடியும் கிடைக்கவில்லை. குதிரையை மீட்டுக் கொடுப்போருக்கு என் கூடலூர்க் காணியில் பாதி உரிமையைக் கொடுப்பேன் என்று வெண்டுவன் குல உள்ளூர்க் கவுண்டர் அறிவித்தார்.

கூடலூரில் குடியேறி வாழ்ந்த பொன்னைய கவுண்டன் தன் பனையகுலப் பங்காளிகளைக் கூட்டிக் கொண்டு குதிரையைத் தேடிப் புறப்பட்டார். குதிரையைக் கவர்ந்து சென்ற கள்ளர் நாட்டுத் தலைவன் குதிரையை மிகப் பாதுகாப்பாக வைத்திருந்தான். பனையகுல இளைஞர்கள் கள்ளர் தலைவனிடம் வேலைக்குச் சேர்ந்து நம்பிக்கைக்குப் பாத்திரமாக நடந்து கொண்டனர். குதிரையைக் காவல் காத்த வீரர்கள் தெருக்கூத்திற்குச் சென்ற சமயத்தில் குதிரையை மீட்டுத் தெருக்கூத்து நடைபெற்ற இடத்திற்குச் சென்று "குதிரைக் காரன் குதிரையைக் கொண்டு போகிறான். வீரமுள்ளவன் தடுக்க வரலாம்" என்று சவால் விட்டுக் குதிரையுடன் கூடலூர் வந்தனர். பனையகுல வீரர்களைப் பாராட்டிய வெண்டுவர் குலத் தலைவன் தான் கூறியபடி கூடலூர்க் காணியில் பாதியைப் பனையன் குலத்தார்க்குத் தந்தார்.

## 66. பாண்டியன் குலம்

கொங்கு வேளாளர்களில் பாண்டியன் குலத்தார் பாண்டியர் களோடும், பாண்டிய நாட்டுடனும் தொடர்புடையவர்கள். பாண்டியர் தமிழ் இனத்தின் பண்டையோர் என்பார் தேவநேயப் பாவாணர். பண்டையோர் ஆகிய பாண்டியரோடு தொடர்புடைய பாண்டியன் குலத்தாரும் பண்டையோரே ஆவர்.

சங்க காலத்தில் கொங்கு மண்ணில் பாண்டியர் சேரரோடு போர் புரிந்துள்ளனர். முற்காலப் பாண்டியர்கள் கொங்கு நாட்டுக் கோயில் திருப்பணிகள் பல செய்ததைச் செப்பேடுகள் கூறுகின்றன. ஏழாம் நூற்றாண்டிலேயே ''பாண்டிக் கொடுமுடி'' என்ற பெயர் கொடுமுடிக்கு இருந்துள்ளது. பாண்டிய குலத்தார் காணி உரிமை யுடைய ஊர்களைத் தொகுத்துக் கூறும் இரண்டு காணிப்பாடல் களிலும் 'மதுரை' பாண்டிய குலத்தார் காணியூர் என்று குறிக்கப் படுகிறது. ஒரு காணிப் பாடலில் 'தண்டமிழ் துதிக்கவரு மதுரை' என்று பாண்டிய குலத்தாரின் முதல் காணியூராகக் குறிக்கப்படு கிறது. தொடர்பில்லாமல் இவ்வாறுமுன்னோர் குறிப்பிடமாட்டார்கள்.

பாண்டிய குலத்தாரின் காணியூர்கள் பெரும்பாலானவற்றில் 'மதுரைகாளியம்மன் (மதுரகாளி) கோயில்கள் இன்றும் உள்ளன. சில ஊர்களில் 'மருதகாளியம்மன்' எனப் பெயர் மாறி உச்சரிக்கப் படுகிறது. மதுரைக்கே 'திருமருதமுன்துறை' என்ற பெயர் உண்டு. மதுரை மாவட்டக் கிராமப்புரங்களில் அடித்தளமக்கள் இன்றும் மதுரையை 'மருதை' என்றே அழைக்கின்றனர். தொடர்பு இல்லாமல் கொங்கு நாட்டில் மதுரை காளியம்மன் கோயில்கள் ஏற்பட்டிருக்க வாய்ப்பில்லை.

'வீரபாண்டி' 'பாண்டியம்பாளையம்' 'பூதப்பாண்டி' எனப் பல ஊர்ப் பெயர்கள் கொங்கில் வழக்கில் உள்ளன. திருப்பூர் அருகில் உள்ள நல்லூரின் பெயர் வீரபாண்டிய நல்லூர் என்பதாகும். கொங்குத் தலைவர்கள் பலர் பாண்டியரால் 'வேப்பம்பூ மாலையும்' 'மீன் கொடியும்' பெற்றுப் பெருமையுற்றுள்ளனர். பல சந்தர்ப்பங்

களில் கொங்கர் படை பாண்டியரோடு சேர்ந்து போராடிச் சோழரை விரட்டியுள்ளது.

'கன்னிக்கோன் ஏவலினால் காரைக்கோன் பின்தொடரப்
பொன்னிக்கோன் ஓடும் பொழுது'

என்பது ஒரு பாடல் பகுதி. தேவைக்கேற்பச் சில சமயம் சோழருடனும் கொங்கர் தொடர்புகொண்டுள்ளனர். சோழர் படையில் ''கொங்க வாளார்'' என்றபிரிவு இருந்தது.

கொங்கு மக்கள் பல கோயில்கட்குப் 'பாண்டீசுவரம்' என்றும் 'பாண்டிய விண்ணகரம்' என்றும் பெயர் வைத்து மகிழ்ந்துள்ளனர். அவை சிவன் கோயிலையும், பெருமாள் கோயிலையும் குறிப்பன. வேளாளர்களைப் ''பாண்டிய புத்திரர்'' என்றே சேரலர் குறவஞ்சி கூறுகிறது.

பாண்டியன் குலத்தோடு கொங்கு வேளாளர்களில் செழியர் குலம், மீனவன் குலம், வேம்பன் குலம், பூந்தை (பூதன் தந்தை) குலத்தார்க்கும் பாண்டியர், பாண்டிய நாட்டுத் தொடர்பு உண்டு. அவர்கள் 'மீனவநாடு' சேர்ந்தோர் என்ற குறிப்பும் ஆவணங்களில் காணப்படுகிறது.

இவ்வாறு உள்ள தொடர்புகளையெல்லாம் ஆராயாமல் அல்லது தெரியாமல் 'எருது பூட்டிய வண்டிக்குப் பெயர் பாண்டியம்.' அதனால் பாண்டியம் என்ற பெயரிலிருந்து பாண்டியர் பெயர் ஏற்பட்டது என்று டி.எம்.காளியப்பா எழுத, அவர் நூலைப் பார்த்து நல்.நடராசன், மோகன சுந்தரம், கு.சேதுராமன், தே.ப. சின்னசாமி முதலிய பலரும் அவ்வாறே பின்பற்றி எழுதியுள்ளனர். (நூற்றுக்கு மேற்பட்ட வேளாளர் குலங்கள் இருக்க, பாண்டியன் குலத்தார் மட்டும்தான் எருது பூட்டி வண்டி ஓட்டினார்களா?) பாண்டியருக்கும் - பாண்டியன் குலத்தாருக்கும் தொடர்பு இருப்பதாகத் தெரியவில்லை என்று நல். நடராசனும், வேப்பம்பூச் சூடிய பாண்டியர் வேறு பாண்டு பூட்டி உழுகின்ற பாண்டியர் வேறு, என்று தே.ப. சின்னசாமியும்

எழுதியுள்ளனர். கொங்கு வேளாளர் தலைவர் பலருக்கு 'வேப்ப மலர்மாலையும் மீனப்பதாகையும்' உரிமையுடையதாகப் பல தனிப் பாடல்கள் கூறுகின்றன.

கொங்கு வேளாளர் தலைவர்கள் பலர் 'மன்றாடியார்' பட்டம் பெற்றுள்ளனர். பாண்டியன் குலத்தார் ஒருவரும் மன்றாடியார் பட்டம் பெற்றதாகக் கொங்குப் புலவர் பட்டயமும், இருபத்து நான்கு நாட்டுப் பட்டயமும் கூறுகிறது. அவர் பெயர் 'மீன நாடு பாண்டி மன்றாடியார்' என்பதாகும். 'ஆண்டாராகிய பாண்டி மன்றாடியார்' என்பவரும் ஒரு பாண்டிய குல மன்றாடியார் ஆவார்.

பாண்டியன் குலத்துப் பச்சிராசாக் கவுண்டர் என்பவர் கொடுமணலில் குடியேறியவர். அவர் 'மானூர்ப் பாண்டியன்' என்று அழைக்கப்பட்டார். மானூர் பழனியருகில் உள்ள பாண்டிய நாட்டு எல்லை ஊராகும். பாண்டியப்பன், பாண்டியராயன், 'பாண்டிப் பெருமாள்' என்ற பெயர்களும் ஆவணங்களில் காணப்படுகின்றன.

திருச்செங்கோட்டில் குடியேறிய ஆதிசைவ சிவாச்சாரியாரைக் குலகுருவாக ஏற்று எட்டுக் குலத்தார் செப்பேடு வெட்டித் தந்தனர். அவற்றில் ஒருவர் 'வெள்ளாளரில் பாண்டிய குலப் பாண்டிக் கவுண்டர்' என்பவர். அவர் மிகச் சிறந்த சிவபக்தர், ''வாகுளாம விதிப்படி பஞ்சாட்சர உபதேசம்'' பெற்றவர் என்று செப்பேடு கூறுகிறது. திருச்செங்கோட்டு மலைஉச்சியில் உள்ள கோயிலுக்கும், பாண்டியன் குலத்தார் காணியூராகிய குமரமங்கலத்திலும் உள்ள சிவாலயத்திற்கும் 'பாண்டீசுவரம்' என்று பெயர்.

பாண்டியன் குலத்தாரில் சிலர் தங்கள் முதல்வரைப் 'பாட்டப் பெருமாள்' என்று முன்னோர் வழிபாடாக வழிபட்டு வருகின்றனர். பாட்டப் பெருமாளை வணங்குவோர் மதுக்கரை அருகே பிச்சனூரில் வாழ்ந்து வருகின்றனர். கோவை கணபதி அருகில் உள்ள பூசாரிபாளையம் என்னும் ஊரில் பாப்பம்பட்டி, பூசாரிபாளையம் பகுதியைச் சேர்ந்த பாண்டியன் குலத்தார் 'ஆயி அம்மன்'

தெய்வத்தை வணங்குகின்றனர். ஆயி அம்மாளைப் பாட்டப் பெருமாளின் தங்கை என்பர்.

கொங்கு வரலாற்றில் மிகவும் முக்கியத்துவம் பெற்ற கோயில் மதுக்கரைச் செல்லாண்டியம்மன் கோயில். மூவேந்தர் கூடும் இடம். பல கொங்கு ஆவணங்கள் மதுக்கரைச் செல்லாண்டி யம்மன் கோயிலில் எழுதப்பட்டன. அங்கு சேர விநாயகர், சோழ விநாயகர், பாண்டிய விநாயகர் கோயில்கள் உள்ளன. அச்சிறப்புமிகு மதுக்கரைச் செல்லாண்டியம்மன் கோயிலின் பரம்பரை அறங்காவலர்கள் பாண்டியன் குலத்தாரேயாவர். பல ஊர்களில் பாண்டியன் குலத்தார் செல்லாண்டியம்மனை வணங்கி வருகின்றனர். கொங்கு நாட்டின் தென்பகுதியில் உள்ள பொன்னிவாடியில் பாண்டியன் குலக் குடும்பத்தார் பலர் வாழ்ந்து வருகின்றனர்.

**காணிப்பாடல்கள்**

பாண்டியன் குலத்தார்க்கு இரண்டு காணிப்பாடல்கள் கிடைத்துள்ளன. முதல் பாடலில் மதுரை, நசியனூர், மானூர், பட்டாலி, கொடுமணல், வயிரூசி, காணாங்குளம், ஆத்தூர், கொங்கணாபுரம், பாலமேடு, கோட்டைக்கரை, புன்னம், மோகனூர், காவேரிபுரம், பவித்திரம், குடையூர், இடையாறு ஆகிய ஊர்கள் பாண்டியன் குலத்தாருடைய காணியூர்கள் என்று கூறுகின்றன.

''தண்டமிழ் துதிக்கவரு மதுரைதென் நசையனூர்
சாற்றுபுகழ் மானூருடன்
தயவுபெறு பட்டாலி கொடுமணல் வயிரூசி
தழைக்கின்ற காணாங்குளம்

மண்டலம் தனிலாத்தூர் கொங்கணா புரமுடன்
வளமுற்ற பாலைமேடு
வலுவான கோட்டைக் கரைபுன்னம் முகவனூர்
வாய்த்தகா வேரிபுரமும்

கொண்டலுயர் பவித்திரம் குடையூரு இடையாறு
கூறும்இவ் வூர்கள்எல்லாம்
கொற்றவர் மதிக்கஉயர் கம்பர்க்கு அடிமைமுறி
ஈந்தகுண சாந்தமுடையோர்

எண்டிசை மதிக்கவே மேழிப் பதாகையுடன்
எழில்பெற்ற குவளையுடையோர்
இந்திரன்என வந்துதவு பாண்டியகுல வேளாளர்
இனிதாக மிகவாழ்கவே''

இரண்டாம் காணிப்பாடலில் ஆண்டவநல்லூர், மருதுறை, செம்பத்தொழு, ஆரியூர், திடுமல், கொடுமணல், காஞ்சிக்கோயில், பவானி, பூண்டி, பவித்திரம், மானூர், மதுரை, புதுவயல் ஆகிய ஊர்கள் காணியூர்கள் என்று கூறப்பட்டுள்ளன.

''ஆண்டவ நல்லூர் மருதுறை செம்பத் தொழுஆரியூர்
தீண்டும் திடுமல் கொடுமணல் காஞ்சி திருவானியும்
பூண்டி பவுதையும் மானூர் மதுரை புதுவயலூர்
பாண்டியன் தன்குலத் தோர்கள் இருக்கும் பதியிவையே''

## பாண்டிய குல தருமவேளாள மன்னர்

கொடுமணலில் பாண்டிய குலத்தார் வாழ்ந்து வருகின்றனர். உள்ளூர் தெய்வங்கள் அனைத்தையும் கூறி அவர்களை ஒரு பாடல் வாழ்த்துகிறது.

'சீர்மருவு கங்கைபுனை அக்கினீசு பரக்கடவுள்
சேர்வீர நாராயணன்
செல்வியுமை அகத்தூர் ஆயிமக மாயியும்
திருவுற்ற தங்கம்மனும்

பார்மருவு மாமதுரை காளியுடன் முத்தாலை
பட்டத் தலைச்சியுமையும்
பண்புதிகழ் ராவுத்த மாருடன் பொன்மாரி
பரிவான கணபதியுடன்

ஏர்மருவு ராமரும் முதலான கடவுளர்கள்
கிருபையால் வாழ்த்தநாளும்
எழிலான கொடுமணலில் இனிமையது பொருந்தவே
ஏற்றசெங் கோல்நடாத்தும்

தார்மருவு குவளைமலர் புனைபாண்டிய குலத்தினில்
தருமவே ளாளமன்னர்
தரணிதனில் நீடூழி காலம்இனி தாகவே
தழைத்துமிக வாழ்க நன்றே''

**பாண்டியன் குல சிவமலைக் கவுண்டர்**

பாண்டியன் குல காளிகவுண்டர் மகன் சேனாபதிக்கவுண்டர், சேனாபதிக்கவுண்டர் தம்பி சிவமலைக்கவுண்டர் கொடுமணல், பட்டாலி ஆகிய ஊர்களின் காணியாளராகவும் நிர்வாகியாகவும் இருந்தார். அவர்பால் பரிசு பெற்ற ஒரு புலவர் அவரைப் புகழ்ந்து பாடியுள்ளார்.

''சீருற்ற சிவமலையில் முருகர்தன் கிருபையால்
செகராசர் மெச்சுதயவும்
செய்யகன யோகமும் புத்திரசந் தானமும்
செந்தமிழ் உணர்ந்தஅறிவும்

தாருற்ற குவளைமலர் மாலிகா பரணமும்
தாய்தீங்கை உதவுவரமும்
சற்சனர் விலாசமும் மேன்மையும் வீரமும்
சாற்றுதற்கு ஒருவர்உளரோ

மேருற்ற பொன்மேழி விருதுடைய சோமனே
மேலான பாண்டியகுலனே
மேதினியில் வருகின்ற கொடுமணல் பட்டாலி
விளங்கிய விசுவாசனே

வாருற்ற தனமாதர் வேள்காளி ராயன்அருள்
மைந்தனாம் சேனாபதி
மன்னவன் துணைவனாம் சிவமலை மகீபனே
வனசலட் சுமிவாசனே!''

பாண்டியருடைய வேப்பமாலை, மீன் கொடிகள் பெற்றாலும் கொங்கு வேளாளர் ஆன பாண்டியன் குலத்தலைவர்கள் வேளாளர்களின் மேழிக்கொடியேற்றிக் குவளைமாலை அணிந்தனர் என்பது மேற்கண்ட பாடல்கள் மூலம் தெரிகிறது.

## கோயில் திருப்பணி

கொடுமணலில் நந்தன வருடம் சித்திரை மாதம் 15ஆம் தேதி கொடுமணல் பாண்டியன் குலத்தார் சேரன், பனங்காடை குலத்தாரோடு சேர்ந்து அத்தனூரம்மன் கோயிலுக்குக் கதவு செய்தளித்ததை அக்கதவில் உள்ள எழுத்துப் பொறிப்புக் கூறுகிறது. கதவு பணி செய்தவர்கள் ஆன்மக்கொல்லன், பழனித் தச்சன் ஆகியோர் ஆவர்.

தென்கரை நாட்டுக் கொழுமண்குழியில் 1289ஆம் ஆண்டு பாண்டியன் குல பிள்ளையப்பன் என்பவர் பிள்ளையார் கோயில் கட்டி அதற்கு அழகிய விநாயகப் பிள்ளையார் என்று பெயர் கொடுத்து நாள்தோறும் 2 நாழி புன்செய் தானியத்தால் அமுது படைக்க ஸ்ரீயக்கி பழஞ்சலாகை அச்சு நான்கு கொடை யளித்ததாக இலக்கும நாயக்கன்பட்டி எழுவரம்மை கோயில் கல்வெட்டு மூலம் தெரிகிறது.

## செப்பேடு பட்டயங்களில்

கொங்கு காணியான பட்டயத்தில் கம்பர் பாடியதாகக் கருதப்படும் காணிப்பாடல் ஒன்று காணப்படுகிறது. அதில் சேரன் குலத்தார்க்கு அடுத்தபடி இரண்டாவதாகப் பாண்டியன் குலம் கூறப்பட்டுள்ளது.

''சேரன் பாண்டி யன்பனகன்
செங்கோல் பெரியன் செம்பவளன்''

என்று அக்காணிப்பாடல் தொடங்குகிறது.

கொடுமணல் கிரயப் பட்டயத்தில் ''கொடுமணல் பாண்டியன் குலம், பனங்காடை குலம், சேரன்குலம் கொடிக்கால் காரர் கணக்கர்குலம் இவர்களுக்குக் காணி'' என்று எழுதப்பட்டுள்ளது. பாசூர் தீட்சிதர் இம்முடி அகிலாண்ட தீட்சிதர் அவர்கட்கு வேளாளர்கள் பல குலத்தார் சீடர்களாக அமைந்து பாதகாணிக்கை செலுத்த ஒப்புக்கொண்ட செப்பேட்டில் கொடுமணல் பாண்டிய குலத்தாரும் கையொப்பமிட்டுள்ளனர்.

# 67. பில்லன் குலம்

கொங்கு வேளாளர் குலங்களுள் வீரத்திறன் கொண்ட சில குலங்களில் பில்லன் குலமும் ஒன்று. பேச்சு வழக்கில் பில்ல குலம் எனக் குறிக்கப்பெறும் இக்குலத்தைப் புல்லன் குலம், புல்லி குலம், புல்லர் குலம் என்றும் குறிப்பர்.

கால்நடைகட்கு மிகவும் தேவைப்படும் பில் அல்லது புல் எனப்படும் பயிரை வளர்ப்பதில் புதுமை கண்டு வளர்த்தோர் பில்லர் அல்லது புல்லர் என அழைக்கப்பட்டிருக்கலாம்.

'புல்லி' என்னும் சங்ககால வேளிர் குலத்தலைவன்,
'மழபுலம் வணக்கிய மாவண் புல்லி'
'பொய்யா நல்லிசை மாவண் புல்லி'
'கல்லா இளைஞர் பெருமகன் புல்லி'
'நிறைபல குழீஇய நெடுமொழிப் புல்லி'

என்று பல இடங்களில் புகழப்படுகிறான். புல்லி வழிவந்தவர் புல்லர் என ஆகியிருக்கவும் கூடும்.

'புல்லார்' என்றால் பகைவர். புல்லாரை வென்றடக்கியவர் புல்லர் என்று கூறப்பட்டிருக்கலாம். கலிங்கத்தை வென்றவன் கலிங்கன் என்றாவதைப் போல.

''பில்லன் குலத்தார் புல்லன் என்றும் அழைக்கப்படுவதால் இவர்கள்சங்ககாலம் 'புல்லி' வழியினர் என்றும், வள்ளியறச்சலில் 'இவர்கள் ஐந்தாவது காணியாளராக இருப்பினும் ஊர்க்காவல், கோயில் பரிபாலனம், செல்வநிலை இவைகளில் இவர்களே முதலிடம் பெற்று வாழ்கின்றனர்'' என்று க.பழனிசாமிப் புலவர் எழுதியுள்ளார்.

**காணியூர்கள்**

பில்ல குலத்தார் காணிப்பாடலில் அஞ்சூர், அனுமன்பள்ளி, இராமதேவம், இளம்பிள்ளை, கார்வளி, குன்னமலை, கொற்றனூர்,

சத்திமங்கலம், சேமூர், பழமங்கலம், வடகரைநாடு, வள்ளியறச்சல், வெங்கம்பூர் ஆகிய ஊர்கள் காணியாகக் குறிக்கப்பட்டுள்ளன. இதனைக் குறிக்கும் காணிப்பாடல்,

''வளமைமிகு வெங்கைநகர் சத்திமங் கலத்துடன்
வள்ளிநகர் கொற்றையூரும்
வடகரசை நாடுடன் சேமூரு கார்வளி
மாதுவளர் இராமதேவம்

பழமங்கை அஞ்சியூர் அனுமநக ரும்பரவு
பாருலகில் குன்னமலையும்
பாங்கான இளம்பிள்ளை இவையெலாம் உமதுபதி
பண்பான பில்லகுலனே

அழகுபெறு முருகர்தன் பொன்னடித் தாளிணையை
அனுதினமும் மறவாதவர்
அரிவையர் தமக்குநிகர் ஆனமன் மதசீல
ஆதுலர்கள் புகழ்தூயனே

களபமணி திண்புயா செங்குவளை மார்பனே
கங்கைகுல நலதம்பிசொல்
கனமணிய தாகவரு மோழைமக ராசனே
கருதலர்கள் பணிசிங்கமே''

என்பதாகும். பில்ல குலத்தார் முருகர் பொன்னடித் தாள்களை நாள்தோறும் மறவாமல் பணிபவர்கள் என்று கூறப்பட்டுள்ளது. இக்காணிப்பாடல் பில்லகுல நல்லதம்பிக் கவுண்டர் மகன் மோழைகவுண்டர் மீது பாடப்பட்டதாகும்.

கல்வெட்டுகளின் மூலம் அன்னூர், ஈரோடு, கோயம்புத்தூர், கோயில்பாளையம், விசயமங்கலம் ஆகிய ஊர்களும் பில்ல குலத்தாரின் காணியுரிமையுடைய ஊர்கள் என்று தெரிகிறது.

## பில்ல குலத்தாரின் பெருங்கொடைகள்

### நிலக்கொடை

வெள்ளாளர் பில்லகுலத்தார் மேழிப்பள்ளி தான்தோன்றீசுவரர் கோயிலில் திருமண்டபம் ஒன்றைக் கட்டி அமுதுபடிக்காக கிழக்கேயுள்ள ஏரிக்கரையில் 20 அடிக்கோலால் நிலம் அளந்து 500 குழி கொடுத்தனர். வடக்கு ஏரியில் 200 குழியும், மேற்கு ஏரியில் 300 குழியும் அளித்தனர்.

### சந்தியா தீபம்

குளப்பலூர் வேளாளர் பில்லகுலத்தில் நம்பி தொண்டைமான் ஆலத்துக் கோம்பையான சதுமுகை கயிலாயம் உடையார்க்கு உச்சிச் சந்தி அமுதுபடிக்கும், சந்தியா தீபத்துக்கும் ''சுரிகுழுந்தன்'' என்னும் காசு கொடையாக வழங்கினார்.

வடபரிசாரநாடு வெள்ளாளன் புல்லிகளில் பறையன் பறையனான நாட்டுக் காமிண்டன் கோயம்புத்தூர் சங்கீசுவர முடையார் கோயிலுக்குச் சந்தியா தீபம் வைக்க ஒரு அச்சுக் கொடையாகக் கொடுத்தார். (பறையன்-தகவல் தொடர்பு அலுவலர்)

### திருப்பணிக்கொடை

மன்னியூர் வெள்ளாளர் புல்லிகளில் கோவன் இருடனான இராசநாராயணக் காமிண்டன் ஆளுடையார் காலகால தேவர்கோயில் திருப்பணிக்காக மூன்றரைக் கழஞ்சு பொன் கொடையாகக் கொடுத்தார். (அக்காலத்தில் கிராமத் தலைவர்கள் காமிண்டன் என அழைக்கப்பட்டனர்).

### திருவிழாக் கொடை

வெள்ளோடு சர்வலிங்கேசுவரர் கோயிலில் தைப்பூசவிழா எடுப்பதற்காக மங்கலம் வெள்ளாளர் பில்லர் குலச் சூரிய தேவன் கொடை கொடுத்தார். (இன்று மங்கலம் அருகில் சூரியம்பாளையம் என்னும் ஊர் உள்ளது).

மன்னியூர் வெள்ளாளர் புல்லிகளில் தேவன் பொற்கோயில் நம்பி ஞாயிற்றுக்கிழமை தோறும் இறைவனை திருவீதியில் எழுந்தருளச் செய்யவும், இறைவனுக்கு வெஞ்சனம் படைக்கவும் கோயில் பண்டாரத்தில் ஏழரைக் கழஞ்சு பொன்னும், மூன்று குறுணி நெல்லும் கொடுத்தார். கறியமுது வெஞ்சனங்களுக்கு 11 கலன் மூன்று குறுணி நெல் கொடுத்தார். (பொற்கோயில் நம்பி கோயில் அலுவலர்களில் ஒருவராக இருக்கலாம்).

**மக்கள் நலனுக்கு மகேசனுக்குக் கொடை**

ஈரோட்டிலும், விசயமங்கலத்திலும் பில்லன் குலத்தாரின் இரண்டு அரிய கல்வெட்டுகள் கிடைத்துள்ளன.

பூவாணிய நாட்டு ஆவணிப்பேரூரில் வெள்ளாளர் பில்லன் குலத்தில் சொக்கன் விக்கிரம சோமயரையன் என்பவர் இருந்தார். அவருக்கு ஒரு மகன் பிறந்தான். அவனுக்கு அக்கன் சோமன் மாமணியாழ்வான் என்று பெயரிட்டனர். அவன் நலத்துடன் வாழ்ந்து பெயர் பெற்று விளங்க வேண்டும் என்பதற்காக ஒரு குளம் அமைத்து புன்செய் நிலத்தை நன்செய் ஆக்கி விளைச்சலில் நான்கில் ஒரு பாகம் ஈரோடு தொண்டீசுவரருக்குக் கொடையாக அளிக்க ஏற்பாடு செய்தனர். இந்தக் கல்வெட்டு ஆவணத்தில் அரசன் இரவி கோதையான கோக்கலிமூர்க்கனே கையெழுத் திட்டிருப்பதால் குழந்தையின் தந்தை சொக்கன் விக்கிரம சோமயரையன் அரசு உயர் அலுவலராக இருந்திருக்கக் கூடும்.

அதே ஆவணிப் பேரூரில் பில்லன் குலத்தில் நடுவிலான் என்பவர் இருந்தார். அவர் மனைவியின் பெயர் சிறுப்பெண். இந்தத் தம்பதியருக்கு ஒரு மகன் பிறந்தான். அவனுக்குப் பில்லன் என்று குலப் பெயரையே சூட்டினர். விசயமங்கலம் நாகேசுவரருக்கும் அம்மன் பெரிய நாச்சியார்க்கும் காச்சல் ஊராணியோடு ஒத்த மாற்றுடைய இரு கழஞ்சுபொன்னால் திருமாலை செய்து பில்லன் நலமாக வாழ்வதற்காகக் கொடை கொடுத்தனர். சந்தியா தீபம் வைக்க ஒரு கழஞ்சு பொன்னும் கொடுத்தனர். இக்கொடை களைப்

பல சிவனடியார்கள் காப்பாற்ற வேண்டும் என்றும் எழுதிக் கொடுத்துள்ளனர்.

## தொண்டைமான் மன்றாடியார்

வள்ளியறச்சல் பில்ல குலத்தில் மன்றாடியார் பட்டம் பெற்ற தொண்டைமான் என்பவர் ஒருவர் இருந்தார். அவருடைய முன்னோர் ஒருவர் காஞ்சிபுரத்தில் களப்பிரரால் சிறை வைக்கப் பட்டிருந்த சேர, சோழ, பாண்டியர் ஆகிய மூவேந்தர்களையும் விடுதலை செய்த அரிய செயலைச் செய்த கொங்கு நாட்டு மூன்று இளைஞர்களில் ஒருவர் (மற்ற இருவர் மூலனூர் பூச குல இளைஞன், சௌதாபுரம் விழிய குல இளைஞன்). அதனால் மகிழ்ந்த தொண்டைநாட்டு மன்னனால் 'தொண்டைமான்' என்ற பட்டம் பெற்றனர். பின்னர் அவர் வழியில் வந்த பலர் அப்பெயரை வைத்துக் கொண்டிருந்தனர்.

மணலூர் நாட்டுத் தென்னிலை வெங்கச்சி வேட்டுவர் தலைவன் கொங்குராயன் தென்கரைநாடு, காங்கயநாடு, பூந்துறை நாடு அரையநாடு ஆகிய நாடுகளில் தலைவரி கொடுக்க வேண்டும் என்று வற்புறுத்தியும், வசூல் செய்தும் ஆடு மாடுகளைக் கொள்ளையடித்தும் வேளாளர்கட்குத் தொல்லை கொடுத்தான். தென்னிலைக் கோட்டையில் கொங்குராயனையும் அவன் படைத்தலைவர்களையும் கொன்று நஞ்சராயனால் காரையூர்க் காணியும் பட்டக்காரராகப் பட்டமும் பெற்றவர் பழைய கோட்டை முதல்வர் அழகன் சர்க்கரை என்று பழையகோட்டைப் பட்டக்காரரின் காரையூர்ச் செப்பேடும், வேறு ஆவணங்களும், தனிப் பாடல்களும் கூறுகின்றன.

ஆனால், 'பராபவ வருடம் ஆனி மாதம் 7ஆம் தேதி மக நட்சத்திரம் சதுர்த்தியும் பெற்று வியாழக்கிழமை கொங்குராயன் மாந்தபுரத்தில் வெட்டிக் குத்திச் சில்லறை பண்ணி ஆடு மாடுகளைப் பிடிச்சுக்கொண்டு' போகையில் அவனை எதிர்த்துப் போராடிக் கொங்குராயன் படைபோன அடையாளத்தைப்

பின்பற்றிப் போய் போராடி மொஞ்சனூர் குளத்தருகில் வீரமரணம் அடைந்தவர் ''வள்ளியறச்சல் புல்லரில் தொண்டைமான் மன்றாடி மகன் மாந்தக் கவுண்டன்'' என்பவர். இச்செய்தியைப் பழைய கோட்டைப் பட்டக்காரரின் காரையூர்ச் செப்பேடே கூறுகிறது.

காடையூர்க் காங்கேய மன்றாடியார் வம்சாவளி ''வள்ளியறச்சல் பில்லம் கூட்டத்தில் தொண்டமாக்கவுண்டன் என் குறவன் சிறிது கூட்டத்தைக் சேர்த்துக்கொண்டு கொங்குராயனை ஜெயிச்சு'' அவன் தலையையும் வெட்டினான் என்று கூறுகிறது. தொண்டைமான் கொங்குராயன் தலையைத் தன் உறவினரிடம் கொடுத்துவிட்டு உடம்பில் இருந்த இரத்தக் குறிகளைச் சுத்தம் செய்து கொண்டிருக்கும் போது அந்த உறவினர் நான்தான் கொங்கு ராயனைக் கொன்றேன்'' என்று கூறி விருது பெற்றதாகவும் கூறுகிறது.

அழகன் சர்க்கரைக்குக் காரையூர்க்காணி கொடுக்கும் செப்பேட்டில் வள்ளியறச்சல் பில்லகுலத் தொண்டைமான் மன்றாடி கையெழுத்தும் உள்ளது.

இக்காரையூர்ச் செப்பேட்டின் மூலம் பழையகோட்டை முதல் பட்டக்காரர் அழகன் சர்க்கரை மன்றாடியாருக்கு முன்பே வள்ளியறச்சல் பில்லகுலத் தொண்டைமான் மன்றாடி பட்டம் பெற்றது தெரிகிறது.

வேறு சில ஊர்க் கல்வெட்டுகளில் தொண்டைமான் பெயர் வருவதால் வள்ளியறச்சல் பில்ல குலத் தொண்டைமான் மரபினர். பல ஊர்களில் அரசு அதிகாரிகளாக இருந்தது பெறப்படுகிறது.

ஊருக்குள்ளும், நாட்டுக்குள்ளும், மக்களிடையே ஏற்படும் வழக்குகளையும், பிணக்குகளையும் தீர்ப்பவரே 'மன்றாடி' எனப்படுவார். கொங்கு நாட்டு மன்றாடியார்கள் தீர்க்கும் வழக்குகளை ஒரு தனிப்பாடல் கூறுகிறது.

''சண்டை சச்சரவைத் தீர்த்துக் கொள்ளச் - சிலர்
சாதி ஞாயங்களைத் தீர்த்துக் கொள்ள

காடு பத்தாது கொடுங்கள் என்று சிலர்
கந்தாயம் தள்ளும் படிச்சிலரும்

நாவிதன் சிறைக்க வருவதில்லை என்றும்
நன்றில்லை வண்ணானின் வெள்ளை என்றும்

ஆண்டி இலைபோட வில்லை என்றும் - அந்த
ஆசாரி எங்கட்கு வேண்டாம் என்றும்

குடங்கள் சட்டிகள் கொடுப்ப தில்லை - வேறு
குயவன் வேண்டும் எனச் சொல்பவரும்

கொடுக்கல் வாங்கல் தகராறு சொல்பவரும்
கோயில் தகராறு சொல்வோரும்

சொன்னபடி மகன் கேட்பதில்லை - அவன்
சோறும் சரியாகப் போடவில்லை

அவனுக்குப் பண்ணயம் பிரித்து விடுங்கள் என்று
அப்படிச் சொல்ல வருவர் சிலர்

மாடொன்று தேடியும் கிடைக்க வில்லை
மற்றவன் ஆடதைக் காணோம் என்பான்

காட்டினில் ராவே மேய்த்தான் என்பான் - அவன்
காணாமல் கோழியைத் தின்றான் என்பான்.

மேற்கண்ட குறைகள் கொங்குநாட்டு மன்றாடியார்களால் தீர்க்கப் பெறும்.

**காணி மாற்ற ஒப்பந்தம்**

கத்தாங்கண்ணியில் அத்தப்ப கவுண்டர் வழிவந்த கண்ணன் குலச் செங்கோட்டு வேலப்பகவுண்டர் காணியுரிமை கொண்டு

வாழும்போது செவந்தி குலத்துத் தீத்தாக் கவுண்டரின் மகள் வெள்ளைப் பிள்ளையைத் திருமணம் செய்து கொண்டால் 'பொன்னும் பொருளும்' கொடுக்கிறோம் என்றனர். கண்ணன்குலச் செங்கோட்டு வேலப்ப கவுண்டர் ''உங்கள் பொன்னும் வேண்டாம் பொருளும் வேண்டாம் உங்கள் ஊர்க் காணியைக் கொடுங்கள்'' என்றார். திருமணம் முடிந்தபின் செவந்தி குலத்தார் காவிரிக்குக் கிழக்கே கீழ்க்கரைப் பூந்துறை நாட்டு இருப்புலிக்குக் குடிபோய் விட்டனர்.

இக்காணி மாற்றத்திற்குச் செப்பேடு எழுதப்பட்டது. அதில் சாட்சிக் கையொப்பம் இட்டவர் ''புல்லன் குலத்து நெட்டைராசாக் கவுண்டர்'' என்பவர் ஆவார்.

## குலகுருக்களுக்கு மரியாதை

கொங்கு நாட்டில் சமய நம்பிக்கையுடன் 'குல குரு முறை' உள்ளது. பாசூர் குருக்கள் ஞானசிவாச்சாரியார் இம்முடி அகிலாண்ட தீட்சிதருக்கு வேளாளர் பெருமக்கள் எழுதிக் கொடுத்த செப்பேட்டில் சத்திமங்கலம் ''பில்லகோத்திரம் செல்லப்ப கவுண்டர். கொழந்தவேல் கவுண்டர்'' ஆகியோர் கையொப்பமிட்டுப் பாத காணிக்கை செலுத்தியுள்ளனர். எங்கு குடியேறி வாழ்ந்தாலும் குல குரு சஞ்சாரம் வரும்போது தவறாமல் பாதகாணிக்கை கொடுப் பதாகவும் ஒப்புக் கொண்டுள்ளனர்.

## தென்னிலைச் செப்பேட்டில்

தங்கள் வசம் இருந்த ஊர் உரிமை, கோயில் உரிமை ஆகியவைகளை வேட்டுவக் கவுண்டர்கள் பலர் கொங்கு வேளாளர் சமூகத்துக்குக் கொடுத்து அதற்குரிய தொகையையும் பெற்றுக் கொண்டனர். மேல்கரை அரைய நாட்டு அஞ்சூர் என்ற ஊரை வேட்டுவரிடமிருந்து வேளாளர் பெறும் ஒப்பந்தத்தில் சாட்சிக் கையொப்பம் இட்டவர் ''புல்லை வெள்ளாளன் மலையாமிரங்கிக் கவுண்டர்'' என்று தென்னிலை வேட்டுவப் பட்டக்காரர்

எம்.ஏ.பகவதிக் கவுண்டர் வீட்டுச் செப்பேடு கூறுகிறது. சில வேட்டுவக் கவுண்டர்களும் கையெழுத்திட்டுள்ளனர்.

**கத்தாங்கண்ணி முதன்மை**

குறுப்பு நாட்டுக் கத்தாங்கண்ணிக்கு சிவந்தி குலம், கண்ணன் குலம், வெண்டுவன் குலம், பில்லன் குலம் நான்கு முதன்மை என்று கூறும் காடையூர்ச் செப்பேடு ''புல்லன் குலத்துக்கு நெட்டராசாக்கவுண்டர்'' என்று கூறுகிறது.

**பில்லன்குல விநாயகர்**

வள்ளியறச்சல் காணியாளர்கள் வில்லி, செல்லன், ஆந்தை, வண்ணக்கன், பில்லன், கண்ணந்தை, பூந்தை, காடை, கணக்கன் (நீலன், நீருண்ணியர்) குலத்தார் பெயரில் ஒவ்வொரு விநாயகர் படிமம் மாந்தீசுவரர் கோயிலில் உள்ளது. அதில் பில்லன்குல விநாயகரும் இடம்பெற்றுள்ளார்.

## 68. பிள்ளந்தை குலம்

வேளாளர் 96 கீர்த்திப் பாடல், கொடுமணல் இலக்கியங்கள், கல்வெட்டு ஆகியவைகளில் மட்டும் குறிக்கப்பட்டுள்ள குலம் பிள்ளந்தை குலம். இந்த அமைப்பில் உள்ள பிற குலங்களைப் போல் பிள்ளன் + தந்தை = பிள்ளந்தை எனக் கொள்ளலாம். பிள்ளன் என்பானின் தந்தை வழி வந்தவர்கள் என்று கொள்ளலாம்.

கோயில்பாளையம் (கவசை), அவிநாசி ஆகிய இடங்களில் மட்டும் பிள்ளந்தை குலத்தார் கல்வெட்டுகள் உள்ளன. இரண்டு கல்வெட்டுகளும் கோயில் திருப்பணி தொடர்பானவை.

1532ஆம் ஆண்டு விசய நகர மன்னர் அச்சுதராயர் காலத்தில் (கலியுகம் 4633) நந்தன வருடம் வைகாசி மாதம் 20ஆம் தேதி நாலூர்ப் பற்று நாட்டில் கவையமுத்தூரில் வெள்ளாளர் பிள்ளந்தை குலத்தைச் சேர்ந்த இராக்கதப்பெருமாள் பிறவிக்கு நல்லார் என்பவர் கவையகாளியம்மை கோயில் திருப்பணி நடை பெறும் பொழுது முன் மண்டபத் திருப்பணியைத் தன் உபயமாகச் செய்தார்.

1648ஆம் வருடம் (சித்தாத்ரி சித்திரை 3) கவைய முத்தூர் வெள்ளாளன் பிள்ளந்தை குலத்தைச் சேர்ந்த பெரிய காளியப்ப கவுண்டர், சின்னக் காளியப்ப கவுண்டர் இருவரும் அவிநாசிக் கோயிலில் அணி ஒட்டுக்கால் மண்டபம் கட்டினர்.

> ''ஸ்வஸ்திஸ்ரீ கலியுக சகாத்தம் 4748க்கு மேல் செல்லா நின்ற சித்தார்த்தி வருஷம் சித்திரை மாதம் 3 தியதி நாலூர்ப்பற்று நாட்டு கவையம்புத்தூரில் இருக்கும் வெள்ளாளன் பிள்ளந்தை குலத்தில் பெரிய காளியப்ப கவுண்டர் அவர்கள் சின்னக் காளியப்பகவுண்டர் அவர்கள் உபயம் அணி ஒட்டுக் கால் மண்டபம் கட்டி முடித்தார் அவிநாசிலிங்கம் லட்சிப்பார்''

என்பது கல்வெட்டாகும்.

# 69. பூச்சந்தை குலம்

பூசன் அல்லது பூச்சன் என்பாரின் தந்தை வழி வந்தவர்கள் தங்களைப் பூச்சந்தை குலத்தினர் என்று அழைத்துக் கொண்டிருக்கலாம். பூசன் + தந்தை; பூச்சன் + தந்தை என்ற சொற்கள் பூச்சந்தை என மாறுவதற்குத் தொல்காப்பியம் விதி கூறுகிறது. அவ்வகையில் பூச்சந்தை என்ற பெயரும் அக்குலமும் தொன்மையானவை என்று தெரிகிறது.

டி.எம். காளியப்பா , கு.சேதுராமன் ஆகியோர் பூத்தந்தை என்ற குலமே பூச்சந்தை குலம் எனப் பெயர் பெற்றதாகக் கூறுகின்றனர். மொழியியலில் த, ச என மாறுவது இயல்பானதே யாகும். அத்தன் என்ற சொல் அச்சன் என மாறியுள்ளதைக் காணலாம்.

பூச்சந்தை - சாத்தந்தை இரு குலங்களும் சகோதரக் குலம் என்ற கருத்து கொங்குச் சமுதாயத்தில் உள்ளது. டி.எம். காளியப்பா சாத்தந்தை குலத்தின் கிளைக்குலம் பூச்சந்தை குலம் என்பார். இக்குலத்தைப் பூச்சாந்தை குலம் எனக் கொண்டு ஆந்தை இவர்கள் குலச் சின்னம் என்பர். இது பொருத்தமுடையதாகத் தோன்றவில்லை. எங்கும் பூச்சாந்தை என்ற வழக்கு இல்லை. கு.சேதுராமன் பூந்தை குலமும் பூச்சந்தை குலமும் ஒன்றே என்று கருதுகிறார். வெவ்வேறானவை என்றே ஆவணங்கள் கூறுகின்றன.

பூச்சந்தை குலத்தாரின் காணியூர்கள் நாகம்பள்ளி, நசியனூர், கூத்தம்பூண்டி, வெள்ளோடு, குன்னத்தூர், தோட்டாணி சத்திரம் என்பவைகளாகும். நாகம்பள்ளியில் இன்று ஆதி, அந்துவன், சாத்தந்தை, பூச்சந்தை குலத்தார்கள் காணியாளர்களாக உள்ளனர். ஆனால் வேட்டுவர் சமுதாய மக்களிடமிருந்து நாகம்பள்ளியைப் பெற்றவர்கள் சாத்தந்தை பூச்சந்தை குலத்தினர் என்று தென்னிலைப் பட்டக்காரர் பகவதிக்கவுண்டர் வீட்டுச் செப்பேடுகள் குறிக்கின்றது.

''நாகம்பள்ளிக் கிராமத்தில் செல்லாண்டியம்மனுக்குக் கோயில் முப்பாடு கொடுத்தது. வெள்ளாள குலம் பூச்சந்தைக் கும் சாத்தந்தைக்கும் கோயில் முப்பாடு குடுத்ததுக்குச் சாட்சி வெங்கால நாடு சல்லி காளாத்திக் கவுண்டன் நீலியப்ப கவுண்டன் முத்தூர் மணிய வேட்டுவன் சாட்சி தென்னிலை மோக்காளி வேட்டுவன் சின்னக்கவுண்டன் சாட்சி கொடையூரு புரக்கிலாக் கவுண்டன் புன்னம் பூவாணி வேட்டுவன் சின்னக் கவுண்டன் சாட்சி சம்பந்தராயன் சாட்சி துவரை குலம் சாமி நாதக் கவுண்டன் சாட்சி சேரன் சோழன் பாண்டியன் செட்டி சிவப்பிராமணன் காலத்தில் மன்மத வருஷம் சித்திரை மாதம் 26ஆம் தேதி முப்பாடு குடுத்ததுக்கு இத்தனை பேரும் சாட்சி'' (முப்பாடு என்பது முதல் உரிமையைக் குறிக்கும் சொல்).

தலைய நாட்டில் கன்னிவாடிப் பகுதியில் நிர்வாகம் செய்த கண்ணகுலத் தலைவர்கட்கு மிக உறுதுணையாக இருந்தவர்கள் கூத்தம்பூண்டி பூச்சந்தை குலத்தினர் என்று கன்னிவாடிக் கண்ணகுலப் பட்டயம் கூறுகிறது. கண்ணகுலத்தார் பூச்சந்தை குலத்தாரைப் பாதிப் பங்காளிகள் என அழைத்தனர்.

பல ஊர்களைப் பூச்சந்தை குலத்தார் காணியாகப் பெற்றிருந் தாலும் பூந்துறை நாடு சிறப்புக் காணி என்பதால் பூச்சந்தை குலத்தார் ''பூந்துறை நாடர்'' என்று புகழப்பட்டனர்.

பொள்ளாச்சி ஆனைமலைப் பகுதியில் பூச்சந்தை குலத்தில் மணியமரையனான இராசராசப் பல்லவரையன் என்பவர் வாழ்ந்து வந்தார். பெயர் அமைப்பிலிருந்து அரசனால் பாராட்டப் பெற்ற ஒரு அரசு உயர் அலுவலராக அவர் இருந்திருக்க வேண்டும் என்று தெரிகிறது. செல்வந்தரான அவரிடம் நிலத்தை ஒற்றி வைத்து வெள்ளாளன் வடமணியனான அதிராசராச வஞ்சிவேளான் மனைவி பொன் பெற்று நக்காண்டார் கோயிலுக்கு விளக்கு வைத்த விபரம் கல்வெட்டில் கூறப்படுகிறது. இது வீரகேரள மன்னர் அதிராசராச தேவர் காலத்தில் நடைபெற்றுள்ளது.

பொங்கலூர்க்கா நாட்டுக் கீரனூர் ஆளுடையார் திருவாகீசுவரம் உடையார்க்குக் கீரனூர் வெள்ளாளன் பூச்சந்தைகளில் காளி கொத்தியன் என்பார் கொடை கொடுத்ததை அக்கோயில் கல்வெட்டுக் கூறுகிறது.

உலகத்தில் பிறர்க்கு உதவாத உலோபிகள் பலர் உள்ளனர். அவர்கள் தம்மை அழகுபடுத்திக் கொள்வர். மலர்மாலை சூட்டிக் கொள்வர். செல்வத்தைப் பெருக்குவர். பிறர்க்கு உதவி செய்ய மாட்டார். பிறர் கொடுத்த கொடைகளைத் தாம் கவர நினைப்பர். இப்படி உள்ளவர்களைப் புலவர்கள் பாடமாட்டார்கள்.

நசியனூர்ப் பூச்சந்தை குலத்தில் முத்துவேலப்ப கவுண்டர் மகன் வேலப்ப கவுண்டர் ஈகைக் குணம் உடையவர். நசியனூர் மூவேந்த ஈஸ்வரன், முத்துமரகதவல்லி, சென்னிமலை வேலவர், ஆதிநாராயணப் பெருமாள், மதுரகாளியம்மன் மீது பக்தி மிகக் கொண்டவர். புலவர்கள் இவ்வேலப்ப கவுண்டரையே புகழ்ந்து பாடுவர் என்று கூறுகிறார் புலவர் ஒருவர்.

''மானிலம் தன்னிலே அழகுவிழி காட்டுவார்
வாசமலர் முடிசூட்டுவார்
வாய்வழுச் சொல்பிறந் தாலும்நிலை நாட்டுவார்
மதிப்பிலா நிதிகூட்டுவார்

தானும் கொடான்ஒருவர் கொடுப்ப ததனையும்
தனைக்கவர மனம்நினைகுவார்
தாரணியில் இப்படி அனேகராம் அவர்தம்மேல்
தண்டமிழ் பாடவசமோ

வானவர்கள் பரவுமூ வேந்தர்மர கதவல்லி
மகிமைசெறி சென்னிகிரியில்வாழ்
வடிவேலர் ஆதிநா ராயணக் கடவுளும்
மதுரமா காளியருள்சீர்

தானிலமை கொண்டவர் பூச்சந்தை கோத்திரர்
தகைமைசெறி முத்துவேல்பால்
தழைக்கவரு மைந்தனே வேலப்ப பூபதி
வரநிதிக் குணமுளோனே!''

நசியனூர்ப் பூச்சந்தை குலத்தில் குமரசாமிக் கவுண்டர் மகன் அத்தப்ப கவுண்டர் என்பவர் இருந்தார். ஒரு புலவர் நீ புலவர்களை ஆதரிக்கும் திறம் கண்டு மகிழ்ந்து உன்பால் வந்தேன். நீ என்னை ஆதரித்துப் பொருள்தருவாயாக என்று பாடுகின்றார்.

''செந்தமிழ்ப் பாவாணர்கள் தான்புகல வந்தேன்நீ
அதிக தியாகநீடும்
அய்ந்தரு வாமென்று உனைநம்பி வந்தேன்
எந்தனைநீ ஆதரிப்பாய்

நந்துலவு நசையநகர் பூச்சந்தை குலத்துதித்த
நாகரீகன்
மந்திரத் திண்புயன் குமரசாமி நீடு மதலை
அத்தப்பா அதிக வரிசையோனே''

என்பது புலவர் பாடல் ஆகும்.

பூச்சந்தை குலத்தினர் விருந்தளிப்பதில் மிகவும் புகழ் பெற்றவர்கள். அதிலும் குறிப்பாகப் புலவர்கட்கு அறுசுவை உணவு அளிப்பதில் மிகவும் புகழ் வாய்ந்தவர்கள். பூச்சந்தை குலத்தில் தோன்றிய ஒருவர் 'பூந்துரைநாடன்' என்றே அழைக்கப்பட்டார். புலவர்களை ஆதரிப்பதில் பெரும் விருப்பமுடைய அவர் காய்ச்சிய பாலில் பழம், நெய், தேன் இவைகளையெல்லாம் கலந்து தேவாமிர்தம் எனப் புலவர்கட்கு அளிப்பவர். அவர் இவ்வாறு அளிக்கும் வாய்ப்பைப் பெற்றதற்குப் பெரிதும் மகிழ்வாராம். வாலசுந்தரக் கவிராயர் தம் கொங்குமண்டல சதகத்தில் பூந்துறை நாடன் புகழைப் பாடுகிறார். அத்துடன் அப்புலவர்கட்கு தாராள மாகப் பொன்னையும் வாரிவழங்குவாராம்.

''காய்ச்சிய பாலொடு தேவா அமுதம் கனியுநெய்யும்
பாச்சிய தேனும் பெருக்காய் அளித்தனன் பாவலர்க்குப்
பூச்சந்தை கோத்திரன் பூந்துறை நாடன் புகழ்அழகன்
வாச்சு தெனக்கன பொன்மாரி பெய்கொங்கு மண்டலமே''

பூச்சந்தை குல அன்பர் ஒருவர் சிவபக்தி மிக்கவர். அதுவும் பூக்கள் கொண்டு அர்ச்சிப்பதில் பெருவிருப்பம் உடையவர். பூமாலை தொடுத்துச் சிவனுக்கு அணிவார். ஒரு நாள் 1008 மலர்கொண்டு சிவனை அர்ச்சிக்க எண்ணிப் பூக்களைத் தொடுத்தார். ஆழ்ந்த பக்தியுடன் இன்னிசைப் பாடல் பாடி இறைவனைப் பூக்களால் அர்ச்சனை தொடர்ந்து செய்தார். அர்ச்சனை முடிந்தது. 1007 பூக்கள் கொண்டுதான் அர்ச்சனை முடிந்தது. 1008 மலரால் அர்ச்சனை செய்யவேண்டுமே. ஒரு மலர் எப்படிக் குறையலாம். உடனே வாளால் கையை மணிக்கட்டில் வெட்டி மலருக்குப் பதிலாகத் தன் கையாகிய மலரால் அர்ச்சனையை முடித்தார். இதைக்குறிக்கும் பாடலும் வாலசுந்தரக் கவிராயர் சதகத்தில் உள்ளது.

''அணிக்கொடி யாமலர் சிவனிட பூசைக்கு அன்புவைத்தே
இணங்கிய புட்பம் குறைந்ததென் றேமலர் எண்ணிஎண்ணி
துணிக்கரம் வீர மணிக்கட்டு அறுத்துச் சுமுகன்முத்து
மணிக்கரம் சாத்தியபூச்சந்தை கோன்கொங்கு மண்டலமே''

என்பது அவ்வியத்தகு நிகழ்ச்சியைக் குறிக்கும் பாடலாகும்.

பக்திமிக்க பூச்சந்தை குலத்தார் பாசூர் அகிலாண்ட தீட்சிதர் அவர்களைக் குலகுருவாக ஏற்றுச் செப்பேடு எழுதிக் கொடுப்பதில் பிறரோடு பங்கு கொண்டனர். அச்செப்பேட்டில் நசியனூர்ப் பூச்சந்தை குலத்தைச் சேர்ந்த மூத்தமன்னாடிக் கவுண்டர், காசிக் கவுண்டர், ஆவுடையாக் கவுண்டர் ஆகியோர் கையொப்பமிட்டுள்ளனர்.

அறச்சலூர் வட்டாரத்தில் வாழ்ந்த பூச்சந்தை குலத்து வேளாள கவுண்டர்கள் பலர் பிற சமுதாயத்தின் தொல்லைகள் காரணமாகக் கேரளப் பகுதிக்குக் குடியேறி விட்டதாகப் புலவர் வே.ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர் எழுதியுள்ளார்.

குமாரசாமிப் புலவர் இயற்றிய வெள்ளோடு பெரியண்ணன் குறவஞ்சியில் புலவர்களால் புகழப்பட்ட பூச்சந்தை கோத்திர வள்ளல்கள் சிலர் பெயர்கள் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன.

''ஆச்சியாய்க் கவிபுகழ் பூச்சந்தை கோத்திரர்
பழனிவேலப்பன் நளன் சின்னத் தம்பிமால்
தருமன் வேலாயுதன் அருமைச் செங்கோடன்''

என்பவர்களே அவர்களாவர்.

# 70. பூசன் குலம்

பூசன் குலத்தைப் 'பூசல்' எனக்கொண்டு 'பூசல் மயக்கு' 'பூசல் மாற்று' என்ற புறத்துறைகளோடு தொடர்புபடுத்தி எழுதியுள்ளனர். வெட்சியார் கவர்ந்து சென்ற கால்நடைகளைக் கரந்தையார் மீட்க வரும்போது வெட்சியார் கரந்தையாரை வெல்லும் துறை ''பூசல் மாற்று'' என்னும் துறையாகும். பூசல் என்பதற்குப் போர் என்றும் பொருள் உண்டு. போர் ஆற்றலில் சிறந்து விளங்கியமையால் ''பூசன் குலத்தார்'' என்று பெயர் பெற்றிருக் கலாம். பிற்கால நிகழ்வுகள் அனைத்தும் பூச குலத்தாரைப் பெரு வீரர்களாகவே காட்டுகின்றன.

பூசை, பூச்சர் என்றும் இக்குலம் அழைக்கப்பட்டுள்ளது. பூசலை ஒடுக்குவதில் பெயர் பெற்றவர்கள் பூசன் குலத்தார் ஆயினர் என்று கு.சேதுராமன் கூறுகிறார். இரா. இரவிக்குமார் ''பூசலார் நாயனார் பூசன்குலம்'' என்று எழுதியுள்ளார். பூசலார் நான்மறை பயின்ற அந்தணர். அவர் எப்படிப் பூச குலம் சார்ந்தவராக இருக்கமுடியும்? மற்றொரு ஆய்வாளர் ''பூசன்குலம் பூசணிக்காயால் பெயர் பெற்றது. அதனால் பூசன் குலத்தார் பூசணிக்காயைச் சாப்பிடமாட்டார்கள்'' என்று கூறுகிறார்.

**காணியூர்கள்**

போராற்றல் மிகுந்த பூச குலத்தார் காணியூர்களைக் காணிப்பாடல் தொகுத்துக் கூறுகிறது.

களத்தூர், கண்டியூர், சீர்காழி, பொருளூர், மூலனூர், கோமங்கை, குகைமண்குழி, வீராட்சிமங்கலம், அல்லாளபுரம், சர்க்கார் சாமக்குளம், காவிலிபாளையம், வாய்ப்பாடி, பல்லாக் கோயில், கருவலூர், மேட்டுக்கோயில், வதம்பச்சேரி, சிறுகளந்தை, சிந்திலுப்பை, ஆனூர் ஆகிய ஊர்கள் பூச குலத்தார் காணியூர்கள் ஆகும்.

''தேசமது புகழ்சோழ மண்டலம் பாண்டியன்
திரள்பெற்ற மண்டலமுடன்
திகழ்சேர மண்டலம் கொங்குடன் மற்றுள்ள
தேசதே சங்கள்தன்னில்

பூசகுல ராசர்க்கு அரசுரிமை யாகவளர்
புரிகளத் தூர்கண்டியூர்
புனிதமிகு சீர்காழி புலரியூர் மூலனூர்
புகழ்சேரும் கோமங்கையும்

வாசமது புகழ்பெற்ற குகைமண்குழி வீராட்சி
மன்னும்அல் லாளபுரியும்
மருவுசாம் பக்குளம் காவிலி பாளையம்
வண்மைபுரி வாய்நகருடன்

வீசுபுகழ் பெற்றபல் லாக்கோயில் கருவலூர்
மேட்டுக் கோயில்மிகு
வதம்பச் சேரிசிறுக் களந்தைசிந் திலுப்பைப்பதி
விளங்கும்ஆ னூருமாமே''

என்பது பூசகுலத்தார் காணிப்பாடலாகும்.

பூச குலத்தாரின் மற்றொரு காணிப்பாடல் கரூர், களத்தூர், நசியனூர், பொருளூர், சர்க்கார் சாமக்குளம், பாசூர், சம்பை, பழங்கரை, மூலனூர் ஆகிய ஊர்களைப் பூசகுலத்தார் காணியூர்கள் என்று கூறுகிறது.

''வஞ்சி களத்தூர் மருவு நசையனூர்
தஞ்சம் புலரியூர் சாம்பக்குளம் - மிஞ்சவே
பாசியூர் சம்பை பழங்கரையும் மூலனூர்
பூசகுலத் தோர்காணி யே''

என்பது அதைக் குறிக்கும் காணிப்பாடலாகும்.

''போருக்குப் பூசன்'' என்ற தொடராலும், ''சொல்லாண்மை திகழ் சொற்றிடும் பூசர்'' என்பதனாலும் பண்டைய நாளில் ஒன்னார் பஞ்சுபோல் பறந்தகலத் திண்டிறல் காட்டிய காளை'' என்ற தொடராலும், பூசன் குலத்தார் போராற்றல் மிக்கவர்கள் என்று தெரிகிறது. தென்கரை நாடு, அண்டநாடு முதலிய நாடுகளின் சமய சமூக வரலாற்றில் பூச குலத்தார் பெரும்பங்கு வகித்தனர் என்பதை பட்டயங்களும், இலக்கியங்களும் மிகவும் தெளிவாக விளக்குகின்றன.

பெரும்பாலும் பூச குலத்தார் வரலாறு பூசகுலத்தலைவர் மூலனூர்த் தொண்டைமான் வரலாறாகவே உள்ளது.

**மூலனூர்க் காணி**

பூச குலத்தார் தொன்மைக் காணி ''நீள் புலரி'' என்று இலக்கியம் பாராட்டும் பொருளூர் ஆகும். பின்னர் மூலனூரைக் காணிகொண்டது மட்டும் அல்ல, முதன்மைக் காணியாகவும் கொண்டு ஆட்சிபுரிந்தனர். இதனை ''ஆதி பொருளூர் ஆண்டது மூலனூர்'' என்ற பழமொழி விளக்கும்.

''மூலகுல சேரிலான் முன்பூசன் செட்டியுடன்
சீலமுறு கம்பளத்தான் சீராளன் - மூலநகர்
காணிகொண்ட செல்வர் கருணை தழைத்தோங்க
வேணமுதன் மையைந்து மே''

என்பது மூலனூர்க் காணிப்பாடலாகும்.

மூலனூரின் காணியாளர்களாக இருந்தவர்கள் சேரிலான் குலத்தார். பொருளூர் பூச குலத்தார் மூலனூர் சேரிலான் குலத்தார் வீட்டில் பெண் எடுத்து மாமன் மைத்துனன் என்ற முறையில் மூலனூரில் முதல் உரிமை பெற்றனர். இதைச் சேரிலான் குலத்தார் சிலர் ஏற்றுக்கொள்ளவில்லை. இரு சாராரையும் சமாதானம் செய்து பூச குலத்தாருக்கு முன் உரிமையுடைய ஆட்சியையும், சேரிலான்

குலத்தாருக்கு 'பெரியதனம்' என்னும் முறைமையையும் வழங்கி சமாதானம் செய்து நல்லுறவை ஏற்படுத்தியவர் கொற்றனூர்ப் பெரியகுலப் பட்டக்காரர் வேணாடுடையார் ஆவர்.

பூசகுலத்தூரில் மூலனூர், பொருளூர், புதுப்பை, காளி பாளையம், சின்னக்காம்பட்டி ஊர்களை முதன்மையாகக் கொண்ட மூன்று பிரிவினர் உண்டு என்பர்.

## பூசகுலத் தொண்டைமான்கள்

தென்கரை, நாட்டில் கீழ்க்கரை ஆறு ஊர்களைத் தொண்டை மானுக்கு அளித்து ஆட்சி உரிமையை வேணாடர் வழங்கியுள்ளார். தொண்டைமானுக்கு வேணாடர் தன் மகளைத் திருமணம் செய்வித்துச் சீதனமாக அளித்திருக்கலாம். தொடர்ந்து மூன்று திருமணம் வேணாடர் குடும்பத்தோடு நிகழ்ந்துள்ளது. தொண்டை மான் குடும்பத்தில் சிக்கல் ஏற்பட்ட பொழுதெல்லாம் வேணாடர் நேரில் வந்து அதனைச் சுமுகமாகத் தீர்த்து வைத்துள்ளார்.

பூசகுலத் தொண்டைமானின் அரண்மனை சின்னக்காம் பட்டியில் உள்ளது. தொண்டைமான் மரபில் திருமலைத் தொண்டைமான், இரகுநாதத் தொண்டைமான், நல்லயத் தொண்டைமான், குமாருத் தொண்டைமான், அச்சுதராயத் தொண்டைமான், செம்பமுனைத் தொண்டைமான், நல்லதம்பித் தொண்டைமான், மன்னர் சிறைவிடு இராயத் தொண்டைமான், மாந்தியப்பத் தொண்டைமான், சோழியப்பத் தொண்டைமான், சின்னத்தம்பித் தொண்டைமான் ஆகிய பெயர்கள் அறியப்பட் டுள்ளன.

# 71. பூந்தை குலம்

வேளாளர் 96 கீர்த்திப் பாடல், அலகுமலைக் குறவஞ்சி, வேளாளர் குலக்கும்மி, கொடுமணல் இலக்கியம், கல்வெட்டு ஆகியவற்றில் பூந்தை குலப் பெயர் குறிக்கப்பட்டுள்ளது. பெயர் அமைப்பிலிருந்து பூந்தைகுலம் தொன்மையானது என அறிகிறோம்.

சங்ககாலத்தில் பூதன் என்ற பெயர் ஆண்களுக்குப் பரவலாக வைக்கப்பட்டிருந்தது. சங்க இலக்கியங்களில் பூதனார், சேந்தம் பூதனார், கொற்றன்பூதனார், பூதன் தேவனார், சேரம்பூதனார், பூதன் கண்ணனார் போன்ற பல பெயர்கள் காணப்படுகின்றன.

தொல்காப்பியர் பூதன் என்ற இயற்பெயரோடு தந்தை என்ற முறைப்பெயர் சேரும்போது,

பூதன்+தந்தை = பூந்தை

என்று மாறும் என்று இலக்கணம் கூறுகிறார். இதுபோலவே ஆதன் என்ற பெயர் தந்தையோடு சேரும்போது ஆந்தை என்றாகும் என்றும் விதி கூறுகிறார் (தொல்காப்பியம் 348, 349).

பூந்தை என்ற குலப்பெயரை அலகுமலைக் குறவஞ்சி 'பூந்தன் குலம்' என்று கூறுகிறது. பண்ணை குலம் பண்ணன் குலம் என்றும் கீரைகுலம், கீரன்குலம் என்றும் மாறுவதைப் போல 'பூந்தை குலம் பூந்தன் குலம் என்று மாறியிருக்கலாம்.

குறுப்பு நாட்டு விசயமங்கலத்தைச் சேர்ந்த துடுப்பதி விசுவநாத ஈசுவரன் கோயிலில் மட்டும் பூந்தை குலத்தாரின் ஒரு கல்வெட்டுக் கிடைத்துள்ளது. துடுப்பதி மேலைத் திருப்பதி என்றும், துடுப்பூதி என்றும் அழைக்கப்படுகிறது.

துடுப்பதிக் காணியாளரில் பூந்தை குலத்தைச் சேர்ந்த வாரணவாசிக் கவுண்டர் பங்கில் வாரணவாசிக் கவுண்டர் பேரனும், குமாரசாமிக் கவுண்டர் மகனும் ஆகிய குமாரவேலப்ப கவுண்டர்

காசி விசுவநாதர் கோயில் கட்டி விசாலாட்சியையும் ஏனைய பரிவார தெய்வங்களையும் அங்கு எழுந்தருளச் செய்து, மண்டபம், கோபுரம் கட்டி படித்தரத்துக்கும், பூசை தீபாராதனைக்கும் ஏற்பாடு செய்ததை அக்கோயிலில் உள்ள கல்வெட்டுக் கூறுகிறது.

குமாரவேலப்ப கவுண்டர் தம் குடும்பத்தாரோடு காசி யாத்திரை சென்று வந்ததன் நினைவாக இக்காசிவிசுவநாதர் கோயிலைக் கட்டினார் என்று உள்ளூர்ப் பொதுமக்கள் கூறுகின்றனர். ரத்தாட்சி வருடம் பங்குனி மாதம் 8ஆம் நாள் இத்திருப்பணி நிறைவுற்றது என்பதைக் கல்வெட்டு மூலம் அறிகின்றோம்.

**கல்வெட்டு**

''சிவமயம் ஸ்வஸ்திஸ்ரீமன் மகாமண்டலேசுவரன் மகா சுவாமி கிருஷ்ணராச உடையார் அவர்கள் காரியத்துக்குக் கர்த்தரான ஸ்ரீதளவாய் நஞ்சராசய்யன் அவர்கள் கணுவாய்ச் சீர்மையில் சுபைதார் ரங்கய்யனவர்கள் சுபையில் சாலிவாகன சகாப்தம் 1666 கலியுக சகாப்தம் 4845க்கு மேல் செல்லா நின்ற ரத்தாட்சி வருசம் பங்குனி மாதம் 8ம் தேதி புதவாரமும் பஞ்சமியும் உத்தர நட்சத்திரமும் இச்சாலி நாமயோகமும் பாலவா கரணமும் பெற்ற சுபதினத்தில் குறுப்பு நாட்டில் விசயமங்கைக்குச் சேர்ந்த துடுப்பூதி இவ்வூர்க் காணியாளரில் வாரணவாசிக் கவுண்டர் பங்கில் வாரணவாசிக் கவுண்டர் மகன் குமாரசாமிக் கவுண்டர் மகன் குமாரவேலப்ப கவுண்டர் காசி விசுவேசுவர சுவாமியார் விசாலாட்சியம்மன் மற்று முள்ள பரிவார தேவதைகளுக்கும் மண்டபம் கோபுரம் உண்டு பண்ணி படித்தரம் தீபாராதனை நடக்கும்படிக்கும் குமாரசாமிக் கவுண்டர் மகன் குமாரவேலப்ப கவுண்டர் உபயம். இவன் கோத்திரம் பூந்தை''.

வள்ளியறச்சல் காணிப்பாடலில் பூந்தை குலம் 'சிங்காரப் பூந்தை' என்று சிறப்பிக்கப்பட்டுள்ளது. வள்ளியறச்சல் மாந்தீசுவரர் கோயில் காணியாளர் குலத்தின் பெயரால் தனி விநாயகர்கள் உள்ளனர். 'பூந்தை விநாயகரும்' உள்ளார்.

உடுமலை இரா. இரவிக்குமார் கொங்கு 24 நாடுகளில் ‘பூந்தை நாடு’ இருப்பதாகவும், பூந்தை நாட்டின் காணிவாளர் பூந்தை குலத்தார் என்றும் கூறுகிறார்.

கு. சேதுராமன் பூந்தை குலமும் பூச்சந்தை குலமும் ஒன்றே என்று கூறுகிறார். ஆவணங்கள் வேறு வேறாகவே கூறுகின்றன.

## 72. பூமன் குலம்

கொங்கு மண்டல சதகம் தவிர மற்ற எல்லா இடங்களிலும் கொங்கு வேளாளர் பூமன் குலம் பற்றிக் குறிப்பிட்டிருந்தாலும் குல வரலாறு எழுதியோர் எவரும் பூமன் குலம் பற்றி ஒன்றும் எழுத வில்லை.

'பூமன்' என்ற சொல்லுக்குச் சென்னைப் பல்கலைக்கழகப் பேரகராதி அரசன், பிரம்மா என்று பொருள் கூறி அதற்கு இலக்கிய மேற்கோளும் காட்டுகிறது. சூடாமணி நிகண்டு செவ்வாய்க் கிரகத்திற்கும் பூமன் என்ற பெயர் உண்டு என்று கூறுகிறது. குறுப்பு நாட்டு ஆதியூர் ஆதீசுவரர் கோயில், காஞ்சிக் கூவல் நாட்டுக் கூகலூர் மத்திய புரீசுவரர் கோயில் ஆகியவற்றில் வெள்ளாளர் பூமன் குலத்தார் கோயில் திருப்பணியும், கோயில் கொடையும் குறிப்பிடப்படுகிறது.

போசள மன்னன் மூன்றாம் வீரவல்லாளன் காலத்தில் 1338 ஆம் ஆண்டு காஞ்சிக் கூவல் நாட்டில் உள்ள கூகலூரில் வெள்ளாளரில் பூமன் குலத்தைச் சேர்ந்த சொக்கன் ஆண்டார் என்பவர் கூகலூர் மத்திய புரீசுவரர் கோயிலில் சந்தியா தீபம் வைக்க 10 பணம் கொடையாகக் கொடுத்தார். அப்பணம் பத்தும் கோயில் காணியுடைய சிவப்பிராமணன் ஆளுடைய நாயக நம்பி பெற்றுக்கொண்டு சந்தியா தீபம் சந்திரசூரியர் உள்ளவரை எரிப்போம் என்று எழுதிக் கொடுத்துள்ளார்.

கொங்குப் பாண்டியன் வீரபாண்டியனின் ஆறாவது ஆட்சி யாண்டில் (1271) ஆதியூர் ஆதீசுவரமுடையார் கோயில் திருப்பணி நடைபெறும்போது வெள்ளாளன் பூமகளில் அவிநாசி என்பவர் தன் உபயமாக அர்த்தமண்டபத்தில் இரண்டாம் காலும், அகவாய் - புறவாயும் செய்வித்தார் என்று கல்வெட்டுக் கூறுகிறது.

## 73. பெரியன் குலம்

கொங்கு வேளாளர் குலங்களில் பெரிய குலம் பெருமைமிக்க குலம் ஆகும். பெரியன் என்றால் பெரியவர், மூத்தவர், தலைவர் என்ற பொருள் தோன்றுவதைக் காணலாம்.

பொருளந்தை குலத்துக் காடையூர் காங்கேய மன்றாடியார் வம்சாவளியில் 'கொங்கு 24 நாட்டுக்கும் வேணாடர் பெரிய வீட்டுக்காரராக இருந்தபடியாலே' பெரிய குலம் என்று பெயர் ஏற்பட்டதாகக் கூறப்படுகிறது. பெரிய குலத்தலைவர் வேணாடுடை யார் பற்றிக் குறிப்பிடும்போது,

'நாற்பத்தெண்ணாயிரம் கோத்திரத்திற்கும் முதன்மையாய் இருக்கும் பெரியகுலத் தென்கரை நாட்டு வேணாடுடையார்''

'நாற்பத்தெண்ணாயிரம் கோத்திரத்திற்கும் பெரிய கோத்திரம், தொண்டை மண்டலம் எழுபத்தொன்பது வளநாடு, 24 கோட்டத்திற்கும் பெரிய வீடு''

என்று பெரிய குலம் முதன்மையான குலமாக 'காலிங்கராயன் அணை கட்டின பட்டயம்', 'வேணாடுடையார் வம்சாவளி' ஆகியவற்றில் குறிக்கப்படுகிறது.

'இரத்தினமூர்த்தி விறலி விடு தூது' என்னும் இலக்கியத்தில்

'மூவேந்தர் கூடி முதல்வீடன் ஆம்எனவே
சீரார் கனக முடிசூட்டி'

என்று கூறப்படுகிறது. தனிப்பாடல் ஒன்றில்,

'நம்பு மறையோர் காவிரி மேல்கரையில்
நற்குடி நாற்பத் தெண்ணாயிரம்
நளினமிரு சோழர்திசை எழுபத் தொன்பதின்
நாடர்க்கு முதல்வீடனாம்'

எனப் பெரிய குலத்தார் முதல் குலத்தாராகக் கூறப்படுகின்றனர்.

கொடுமணலில் கிடைத்த தனிப் பாடலிலும், மூவேந்தர் முடிசூட்டுப் பாடலிலும் பெரிய குலத்தாரே முதலாவதாகக் கூறப்படுகின்றனர். எனவே கொங்கு வேளாளர் இனத்திலேயே முதல்வர், பெரியவர், முதன்மையானவர், தலைமையானவர் என்ற பொருளில் 'பெரிய குலம்' பெயர் பெற்றது எனலாம்.

கலிமூர்க்க விக்கிரம சோழன் காலக் கல்வெட்டில் பெரியன் சோழன் என்ற பெயருக்கு விளக்கம் கூறவந்த கு.அருணாசலக் கவுண்டர் 'பிருகத்' என்ற வடமொழிச் சொல்லால் 'பெரிய குலம்' பெயர் பெற்றது என்று எழுதியுள்ளார். (வாணவராயர் வரலாறு, 117). சங்க இலக்கியங்களிலேயே 'பெரியன்' என்ற சொல் காணப்படுகிறது. பிடார்த்தலைப் பெரியன் என்ற தலைவரின் வழிவந்தவர்களே பெரிய குலத்தார் என்பர்.

**காணியூர்கள்**

பெரிய குலத்தார் காணியூர்களைக் கூறும் பாடல்கள் மூன்று கிடைத்துள்ளன. ஒரு பாடல் காகம், விளக்கேத்தி, கொற்றனூர் (சங்கரண்டாம்பாளையம்), முருங்கத்தொழு, சோழமாதேவி, சிவாயம், இருகாலூர் ஆகிய ஊர்களைக் காணியூர்கள் என்று கூறுகிறது. அவற்றைக் குறிக்கும் பாடல்,

''காகம் விளக்கேத்தி கனகொற்றை மாநகர்வி
பேக முருங்கைப் பெருந்தொழுவாம் - கோகனக
சோழமா தேவி சிவாயம் இருகாலூர்
வாழ்பெரிய கோத்திரத்தார் மண்''

என்பதாகும். இவற்றைப் பெரிய குல 'ஏழு முதன்மைக் காணி' என்பர்.

கொங்கு மண்டலத் தனிப்பாடல் ஒன்றில் கொற்றனூர், சிவாயம், முருங்கத்தொழு, காகம், விளக்கேத்தி, பாலத்தொழு, சோழமாதேவி, இருகாலூர் என்ற எட்டு ஊர்களைப் பெரிய குலத்தார் காணியூர் என்று கூறுகிறது. அப்பாடல்,

'கொற்றை சிவாயம் முருங்கைத் தொழுப்பதி கோகனத்தார்
சுற்றிய காகம் விளக்கேத்தி பாலத் தொழுவுடனே
நற்றமிழ்ச் சோழமா தேவி இருகாலூர் நானிலத்தில்
நிற்றம் பெரிய குலத்தோர்கள் வாழ்கொங்கு மண்டலமே''

என்பதாகும்.

இரத்தினமூர்த்தி விறலிவிடு தூது சிவாயம், இருகாலூர், முருங்கத்தொழு, காகம், விளக்கேத்தி, பாலத்தொழு, கொற்றனூர், நங்கபுரம், குகைமண்குழி, ஊதியூர், சோழமாதேவி, குறிச்சி (கம்புளியம்பட்டி), பொம்மநல்லூர் முதலிய ஊர்கள் பெரிய குலத்தார் காணியூர்கள் என்று கூறுகின்றது.

'இந்நிலத்தோர்

போற்றும் சிவாயம் புகழ்இருகா லூருடனே
சாற்றரிய நன்முருங்கைத் தன்பதியும் - மாற்றமுயர்

காகம் விளக்கேத்தி கற்புசித பாலத்தொழு
யோக மிகும்கொற்றை யூருடனே - பாகமுடன்

நங்கைகுகை மண்குழியும் நல்வளஞ்சேர் பொன்னூதி
தங்கமுயர் ஊதியூர்த் தன்பதியும் - இங்கிதம்சேர்

சோழமா தேவியுடன் சொற்குறிச்சி எந்நாளும்
வாழும் பொம்மநல்லூர் வளநகரை - ஆளவே

காணியென வந்துதித்த காண்டீப ராசதுரை
வாணி புகழ்பெரிய மாகேந்திரன்''

என்பது இரத்தினமூர்த்தி விறலிவிடு தூதுப் பகுதியாகும்.

நாட்டுப்பாடல் ஒன்று ''தனது வீராட்சியில் தழைத்திடும், பெரிய குலனே'' என்று கூறுவதால் வீராட்சிமங்கலமும் பெரிய குலத்தார் காணியூர் என்பது தெரிகிறது.

குருபரன் ஆற்றுப்படை என்னும் நூலில் கருவூர் பெரிய குலத்தார் காணியூர் என்று கூறப்படுகிறது.

''தெங்குயரும்
காகம் விளக்கேத்தி கருவூர் குறிச்சிகொற்றை
பாகம் செறிமுருங்கைப் பாலத்தொழு''

என்பது குருபரன் ஆற்றுப்படைப் பகுதியாகும்.

கொற்றனூர்க் காணியாளர்கள் காவலர், குழாயர், பெரியர், ஆந்தையர், சேரர், செம்பூத்தர், செட்டியார் ஆகியவர்கள் ஆவர். அக் குலத்தார்களைத் தொகுத்து இரண்டு பாடல்கள் கூறுகின்றன.

''காவல் குழாயன் கதித்த பெரியகுலன்
ஆவல்சேர் ஆந்தை அதிசேரன் - மேவியசீர்
செம்பூத்தன் செட்டியுடன் தென்கொற்றை மாநகர்க்கு
இன்புற்ற ஏழ்முதன்மை யே''

''ஞாயம் நிலைபெருக்கும் நற்கா வலன்குழையன்
நேயப் பெரியகுலன் நீள்ஆந்தை - ஆயன்
திருவளர் கொற்றைக்கு சேரன்செம் பூதன்
பெருகுசெட்டி யும்காணிப் பேர்''

என்பன கொற்றனூர்க் காணியாளர் பாடல்களாகும்.

குகைமண் குழிக்குப் பெரிய குலத்தாருடன், ஆந்தை குலத் தாரும், பூசகுலத்தாரும் காணியாளர்கள் என்று குகைமண் குழிக் காணிப்பாடல் கூறுகிறது.

''சாந்த குணம்தயவு தாங்கும் பெரியகுலன்
ஆந்தைகுலன் நானென்னும் நாமமே - ஈந்த
சுகசரீரன் பூசகுலத் தொண்டைமா னுக்கும்
குகைமண்நகர் காணியெனக் கூறு''

என்பது குகைமண்குழிக் காணிப்பாடலாகும். டி.எம்.காளியப்பா தென்சேரியையும், சேதுராமன் பிடாவூரைவும், மோகனசுந்தரம்

கனககிரியையும் காணியூர்களாகக் கூறுகின்றனர். தனிப்பாடல் களில்

''ஆற்றல்சால் பெரிய குலம்''

''சாந்தகுணம் தான்தங்கும் பெரிய குலம்''

''திகழ் பெரிய குலம்'' ''பார் போற்றும் பெரிய குலம்''

என்றெல்லாம் பெரிய குலம் புகழ்ந்து கூறப்படுகிறது.

**பெரிய குலத்தின் தனிச்சிறப்பு**

கொங்கு வேளாளரில் வேறு குலங்கட்கு இல்லாத தனிச்சிறப்பு ஒன்று பெரிய குலத்தார்க்கு உண்டு. அது பெரிய குலப் பெண்கள் (இளம்பெண்கள்) பொன்னூஞ்சல் ஆடுவதும், பெரியகுல மணமகன் பூந்தேர் ஏறுவதுமாகும். இரத்தினமூர்த்தி விறலிவிடு தூது.

''இங்கிதம்சேர்
பூந்தேர்பொன் ஊஞ்சல் புகழ்கீர்த்தி யாதிபதி
வேந்தன் புவியரசர்''

என்று கூறுகிறது.

வேணாடர் செய்த பல்வேறு உதவிகட்காகச் சோழ மன்னன் வேணாடர்க்கு முடிசூட்டினான். இதனை,

''வேணா டுடையான் வெள்ளோடு உலகுடையான்
ஆனூர்க்குச் சர்க்கரை மன்றாடி - வேணுபுகழ்
நாவேந்து பூந்துறைசை நண்ணா வுடையார்க்கு
மூவேந்தர் சூட்டும் முடி''

என்ற பாடல் விளக்குகிறது. முடிசூட்டிய நாளை மற்றொரு பாடல் தெரிவிக்கிறது.

''அமிர்தநிறை கலியுகம் சகார்த்தமது நாலா
யிரத்துத் தொளாயிரத்து
அய்ம்பத்தைந் துக்குமேல் செலாநின்ற பவவருடம்
ஆகுநன் கன்னிமாதம்

சமஸ்தானத் தோர்மெச்ச பதினொன்று தேதிதனில்
வருகதிர் வாரந்தனில்
தக்கபுகழ் ஏகாதசி அவிட்டநட் சத்திரமும்
தான்பெருகு பூர்வபட்சம்

நமதுபவ கரணமும் சுபநாம யோகமும்
நன்மைபெறும் சுபதினத்தில்
நட்பான அப்பிரமர் பெரியநா யகிஅருள்
பெற்றமக ராசனுக்கு

குமுதமலர் அணிமுத்து ரத்தினவே ணாடர்அருள்
குமணனே பெரியகுலனே
கொற்றைநகர் வருகுமார ரத்தினவே ணாடர்க்குக்
கூடிமுடி சூட்டினர்களே''

வேணாடர் சார்ந்த பெரிய குலத்தினர் அனைவர்க்கும் பெரும் சிறப்பளிக்கக் கருதிய சோழமன்னன் பெரியகுல மகளிர் பொன்னூஞ்சல் ஆடவும், பெரியகுல மணமகன் பூந்தேர் ஏறவும் உரிமையளித்ததுடன் பொன்ஊஞ்சலும், தேரும் கொடையாகக் கொடுத்தான். கொங்கு மண்டல சதகம் ஊஞ்சல் பற்றிக் கூறுகிறது.

''நெய்யினில் கையிட நாறபத்தெண் ணாயிரம் நீடுபெற
மெய்யினில் கங்கை குலத்தில்வே ணாடன் விளங்குமகள்
கய்யினில் நெய்யுயர் பொன்னூஞ்சல் சேரக் கனிந்தஅன்னை
வய்யிற் கனக முடிசூட்டி வாழ்கொங்கு மண்டலமே''

என்பது சதகப் பாடலாகும். காணிப்பாடல் ''செல்வமிகு பொன்னூஞ்சல்'' என்று கூறுகிறது.

மார்கழி மாதம் திருவாதிரை அன்று பொன்னூஞ்சல் நிகழ்ச்சி சங்கரண்டாம்பாளையம் வேணாடர் அரண்மனையில் நடைபெறும். கொங்கு நாடெங்குமிருந்து பொன்னூஞ்சலாட விரும்பும் பெற்றோர் தங்கள் மூத்த மகளை அழைத்துக்கொண்டு சங்கரண்டாம்பாளையம் வருவர். அவர்கட்கு பட்டக்காரர் வேணாடர் எல்லா வசதிகளையும் செய்து தருவார். ஆண்டுதோறும் பொன்னூஞ்சல் நிகழ்ச்சி நடைபெறுவதில்லை. குருக்கள், புலவர் ஆகியோரைக் கேட்டு இந்த ஆண்டு பொன்னூஞ்சல் ஆடும் நிகழ்ச்சி நடைபெறுமா? இல்லையா? என்பதை வேணாடர் முடிவு செய்வார்.

பொன்னூஞ்சல் ஆடும் பெண்ணை அமராவதியாற்றில் ஏழு புண்ணிய நீர்த்துறைகளில் நீராடச் செய்து புத்தாடை உடுத்தித் தென்னீசர், அகிலாண்டவல்லி, பெரிய நாச்சியார், இரத்தினமூர்த்தி, கருப்பராயன், கோட்டை முனியப்பன், நட்டாற்று ஈசுவரர், அப்பிரமேயர், பெரிய நாயகியம்மன் கோயிலில் வழிபாடியற்றச் செய்வர். பெண்ணை மணப்பெண் போல அலங்கரித்துப் பட்டம் கட்டி மாமன் அழைத்துச் சென்று ஊஞ்சலில் அமரச் செய்வார். பொன்னூஞ்சல் நிகழ்ச்சிச் செலவை மாமன் வீட்டாரே ஏற்பது வழக்கம். பட்டக்காரர், குலகுரு, உற்றார் உறவினர் முன்னிலையில் புலவர் பெரிய நாயகியம்மனின் ஊஞ்சல் பாட்டைப்பாடி ஊஞ்சலையாட்டுவார். அரண்மனைப் பெண்கள் முதலில் ஆடுவர். எந்தெந்தக் காணியூர்க்காரர்கள் எவ்வரிசையில் ஆடவேண்டும் என்ற வரையறையுண்டு.

பொன்னூஞ்சல் ஆடும் முன் புங்கங்கால் கொண்டு வந்து தென்புறம் நடுவர். முகூர்த்தக்கால் நட்டுப் புளியமரத்திற்குப் பூசை செய்து புளியங்கால் கொண்டு வந்து வடபுறம் நடுவர். தூரி ஆசாரி வீட்டுக்கு எடுத்துச் செல்லப்பட்டுத் தங்கத் தகடு அடித்துப் பூசை செய்து கொண்டு வரப்படும். தூரியை ஏற்ற ஆசாரியும் ஊஞ்சல் பாட்டுப் பாடும் புலவரும் பொங்கல் வைப்பர். பொன்னூஞ்சல் ஆடுவோர் காணிக்கையுடன் பச்சரிசி, தேங்காய், பழம், வெல்லம்,

பூ, வெற்றிலை, பாக்கு, மஞ்சள் ஆகியன கொண்டு செல்ல வேண்டும். புண்ணியார்ச்சனை, கோயில் அய்யர், பண்டாரம், ஆசாரி, மேளகாரர், மாணிக்கத்தி, புலவர் ஆகியவர்கட்குப் பரம்பரையாக அளிக்கவேண்டும் காணிக்கைகளை அளிக்க வேண்டும். இவர்கட்கும் வண்ணான், நாவிதன், குயவர்கட்கும் பட்டக்காரர் அரிசியும் பணமும் கொடுப்பார்.

மூவேந்தரால் கொடுக்கப்பட்ட பூந்தேர் பட்டக்காரர் அரண்மனையில் உள்ளது. பெரிய குல மணமகன் பூந்தேர் ஏறுவார். தேர்க்கலசம் பட்டக்காரரிடம் பெற்றுக்கொள்ளவேண்டும். முதல் பல்லக்கில் குருசுவாமிகளும், இரண்டாவது மேனாவில் பட்டக்காரர் வர மணமகன் தேர் மூன்றாவதாக வரும். புலவர் நாடு, காணி, குலம், குலதெய்வம் பற்றிய பாடல்கள் பாடுவார். புலவர்க்குப் புத்தாடை கொடுக்கவேண்டும்.

பொன்னூஞ்சல் ஆடும்போது புலவர் பெரியநாயகியம்மன் மீது பாடப்பட்ட ஊஞ்சல் பாடலைப் பாடுவார்.

''சீரான வயிரத்தால் கால்கள் நாட்டி
சிறந்தவயி டூரியத்தால் வளைகள் பூட்டி
நேரான பவளத்தால் பலகை சேர்த்து
நித்திலத்தால் பந்தலிட்டு நிழல தாக
ஏராள மாணிக்கம் புருட ராகம்
இலங்குபசும் பொன்னினால் வடங்கள் தூக்கி
பேரான அப்பிரமர் பங்கில் வாழும்
பெரியநா யகித்தாயே ஆடீர் ஊஞ்சல்''

என்பது ஊஞ்சல் பாட்டில் ஒரு பாடலாகும்.

## பெரியகுலக் கல்வெட்டுகள்

பெரியகுலக் கல்வெட்டுகள் சங்கரண்டாம்பாளையம், முருங்கத்தொழு, ஈரோடு, வெள்ளோடு, பிரமியம் ஆகிய இடங்களில் உள்ளன.

1794ஆம் வருடம் பெரியநாச்சியம்மன் திருக்கோயிலை (கர்ப்பக் கிரகம், அர்த்த மண்டபம், மகாமண்டபம்) ஆகியவற்றைப் ‘பூந்தோர் பொன்னூஞ்சலுக்கு அதிபரான பெரிய குலம் வேணாடுடையார் கட்டியதாகவும், சிறுக்கிணறு ஆந்தை குலம் பெரியணன் பங்கு உள்ளதாகவும் குறிப்பிடுகிறது. பாப்பனாசாரி என்பவர் கோயில் கட்டும் பணி மேற்கொண்டதாகவும் கூறுகிறது.

சுந்தரபாண்டியன் காலத்தில் முருங்கத்தொழு பிரமபுரீசுவரர் கோயில் திருப்பணி செய்தவர்கள் பெரியகுலம் முருங்கத்தொழுக் காணியாளர்கள் நம்பி நம்பியான நல்லமங்கை பாகன், சிறுநம்பி நம்பியான நம்பியாரூரன், நம்பி நம்பியான பிள்ளை ஞானசம்பந்தன் என்பவர்கள். பெரிய குலத்தார் அனைவரும் கொடைநிலம் கொடுத்தனர். இப்பெயர்கள் மூலம் பெரிய குலத்தாரின் சைவசமய ஈடுபாடு நன்கு தெரிகிறது.

முருங்கத்தொழு அருகில் உள்ள அணியரங்கப் பெருமாள் கோயிலை 1548ஆம் ஆண்டு கட்டியவர்கள் முருங்கத்தொழு பெரிய குலச் செல்லப்ப கவுண்டர் மகன் பெரியதம்பிக் கவுண்டர், கந்தப்ப கவுண்டர் மகன் வேணுடையாக் கவுண்டர், கல்லாக் கவுண்டர் மகன் கந்தப்ப கவுண்டர், செல்லப்ப கவுண்டர் மகன் நல்லிக் கவுண்டர் ஆகியோரும் ஊர்க் கணக்குப் பிள்ளை நஞ்சபிள்ளையும் பங்கு கொண்டுள்ளனர். இத்திருப்பணியில் வெள்ளோடு சாத்தந்தை குலம், முதலியாக்கவுண்டர் மகன் பெரியண கவுண்டர் பங்கு கொண்டுள்ளார். இவர் பெயர்தான் முதலில் எழுதப்பட்டுள்ளது. ஒரு கல்வெட்டில் ‘குளத்தில் தண்ணீர் இல்லாதபோது நெல்லுக்குப் பதிலாகக் கம்பு தரலாம்’’ என்று எழுதப்பட்டுள்ளது சிறப்புக் குரியது.

ஈரோடு, வெள்ளோடு கல்வெட்டுகள் மூலம் பூந்துறை நாட்டுச் சபையில் முருங்கத் தொழுப் பெரியகுல பெரியபிள்ளைக் காமிண்டன், நல்ல பெருமாள் ஆகியோர் உறுப்பினராக இருந்த விபரம் தெரிகிறது.

பிரமியம் கல்வெட்டில் பெரியகுல சோழன், வீரசோழக் காமிண்டன், கொற்றனூர்க் கல்வெட்டில் பெரியகுல எல்லாம் வல்ல சோழ மூவேந்த வேளான் பெயர்கள் காணப்படுகின்றன. பெயர் அமைப்பிலிருந்து இவர்கள் அரசு உயர் அலுவலராக இருந்தனர் என்று தெரிகிறது.

**செப்பேடு பட்டயங்களில் பெரியகுலம்**

காலிங்கராயன் பவானியாற்றில் அணைகட்ட முயலும்போது அந்த அணை கட்டும் உரிமை எனக்கே உரியது என்று பொங்கலூர் நாட்டுத் தெய்வசிகாமணி கூறினார். 10 பேர் கொண்ட குழு விசாரித்து காலிங்கராயனுக்கே அந்த உரிமை உடையதென்று ஈரோடு கொங்கிலம்மன் கோயிலில் முடிவு செய்தனர். தலைவராக விளங்கியவர். ''பொன்னூஞ்சலும் பூந்தேரும் பூச்சக்கரக் குடையும் பெற்றருளிய கங்கா குலதிலகன், காராள சிரோமணி, மேழிக் கொடியோன், மின் குவளை மாலிகை மார்பன் நாற்பத்தி யெண்ணாயிரம் கோத்திரத்துக்கும் முதன்மையாயிருக்கும் தென்கரை நாட்டுச் செட்டி வேணாடுடையான்'' என்பவர் என்று காலிங்கராயன் அணைப்பட்டயம் கூறுகிறது.

குறுப்பு நாட்டுக் காணியாளர்கள், புலவர் நியமனப் பட்டயத்தில் ''பெரிய குல முத்துரத்தின வேணாடுடையார் கையெழுத்திட்டுள்ளார். கொங்குப் புலவர்கள் நியமனப் பட்டயம், கொங்கு காணியான பட்டயம், அனுமன்பள்ளி செங்குந்தர்கள் மாணிக்கி நியமனப்பட்டயம், அறச்சலூர்-காரையூர் எல்லைத் தகராறைத் தீர்த்து எழுதிய பூந்துறை நாட்டார் மேலோலை போன்ற பலவற்றில் வேணாடுடையாரும் அவரது பங்காளிகள் பெரிய குலப் பெரிச்சிக் கவுண்டர், ராசாக் கவுண்டர், சிதம்பரக் கவுண்டர், எளம்பிள்ளைக் கவுண்டர் ஆகியோரும் கையெழுத்திட்டுள்ளனர்.

# 74. பெருங்குடி குலம்

சமுதாயத்தில் மேன்மையுடையவர்களும், சிறப்புப் பெற்றவர்களும், உயர்வு உடையவர்களும், தலைமைப் பண்பு உடையவர்களும், செல்வந்தர்களும் 'பெருங்குடி' என்று அழைக்கப் பெறுவர். சிலப்பதிகாரத்தில்,

''இசைவிளங்கு பெருங்குடி மாசாத்து வாணிகன்''

''பெருங்குடி வாணிகன் பெறுமட மகளே''

என்ற தொடர்களைக் காணுகின்றோம். அதுபோல் கொங்கு வேளாளர் சமூகத்திலும் பெரும் சிறப்புடையவர்கள் 'பெருங்குடி குலம்' என்று அழைக்கப்பட்டனர். சீவக சிந்தாமணியிலும், நாலாயிர திவ்வியப் பிரபந்த உரையிலும் 'பெருங்குடியர்' ஆட்சி உரிமைக்கு உரியவர்கள் என்று கூறப்பட்டுள்ளது. சென்னைப் பல்கலைக் கழகப் பேரகராதி பெருங்குடியர் நாட்டாண்மைக்கு உரியவர்கள் என்று கூறுகிறது.

டி.எம்.காளியப்பா ''உயர்வும், தொன்மைச் சிறப்பும் உடையவர்கள் பெருங்குடி குலத்தார்'' என்று கூறுகிறார். நல்.நடராசன் ''பெருங்குடியர் தலைமையான குடியானவர்; அல்லது குடியானவர்களில் தலைமையானவர்கள்'' என்று கூறுகிறார். என்.கே.இராமசாமி ''மரியாதைக்கு உரியவர்கள் பெருங்குடியர், பெருமை+குடி என்பதில், பெருமை என்பதற்கு உயர்வு, சிறப்பு, மிகுதி என்ற பொருள் உண்டு'' என்று கூறுகிறார்.

வேட்டம்பாடி அ.பழனிச்சாமி 'பெருங்குடியர் சோழ அரசின் சார்பில் படைத் தலைவர்களாக, பொருள் பாதுகாப்பாளராக, வரிவசூல் செய்யும் தண்டத் தலைவர்களாக, ஊராளும் காணியுடையவர்களாக வாழ்ந்தனர்'' என்று கூறுகிறார். வே.ரா. தெய்வசிகாமணிக்கவுண்டர் தொகுத்த வேளாளர் 96 கீர்த்திப் பாடலிலும், அலகுமலைக் குறவஞ்சி, கொடுமணல் இலக்கியங்கள் ஆகியவற்றிலும் பெருங்குடி குலம் சிறப்பித்துக் கூறப்படுகிறது.

வேளாளர்களில் கொஞ்சம் நிலமுடையவர்கள் தாங்களாகவே உழவு செய்வர். அதிக நிலம் உடையவர்கள் பிறரைக் கொண்டு உழச் செய்து விவசாயம் செய்வர். இவர்களைத் தொல்காப்பிய உரை யாசிரியர்கள் 'உழுதுண்ணும் வேளாளர்' 'உழுவித்துண்ணும் வேளாளர்' என்று கூறுவர். உழுவித்துண்ணும் வேளாளர்களே பெருங் குடியர் எனப்பட்டனர் என்று வேட்டம்பாடி அ. பழனிசாமி கூறுகிறார்.

## கொங்கு நாட்டில் குடியேற்றம்

சோழநாட்டில் திருவாரூர்ப் பகுதியிலிருந்த வேளாளர்களில் 64 பேர் சங்கமாகச் சேர்ந்து சேரன் ஆட்சிக்குட்பட்ட கொங்கு நாட்டில் குடியேறி ஏரி, குளம் அமைத்துக் கோயில்கள் கட்டித் தரிசு, காடு கரடுகளை விட்டு நல்ல நிலங்களைப் பெற்று ஆலயத்திற்கு அளித்து கோயில் உரிமைகளையும் பெற்று காணி உரிமை பெற்றுப் பெருங்குடியர் என்று சிறப்புப் பெயரைப் பெற்றார்கள் என்று வகுரம்பட்டிப் பெருங்குடியர் குலதெய்வமான கொண்டிசெட்டிப்பட்டிக் காளியம்மன் ஊஞ்சல்பாட்டுக் கூறுகிறது.

''காவிரிநதி யால்சூழ்ந்த சோழ நாட்டில்
கனம்மிகுந்த திருவாலூர்ப் பதியை விட்டு
தங்கமெனும் சேரசோழ னுடனே கூடி
சேரமண் டலத்தில்வந்து தோன்றிய பேர்கள்
கங்கைகுலப் பெருங்குடியர்''

''திக்கஜங்கள் வரையதுவும் சத்த மேகம்
திடர்கரடு காடுகளர் தெரிந்து நீக்கி
முக்கியதே வாலயங்கள் குளங்கள் வாவி
முதல்தரிசு புறம்போக்கு அறிந்து சேர
தக்கநிலம் கண்டெழுதி வரிசை பெற்றுத்
தற்பரர்கள் மகிழ்வுபெறும் சமர்த்தர் ஆகி
விக்கிரமார்க்கம் ஓங்கியகங் காகுல நாட்டார்
வேந்தர் எனும் பெருங்குடியர்''

''சங்கமெனும் அறுபத்து நாலு பேர்கள்
கொங்குமண் டலம்வந்து தோன்றி யோர்க்கு
செங்குவளை விழிகருணை பொழியும் வேளிர்
மட்டுலவும் பெருங்குடியர்''

என்ற பாடல் பகுதிகள் அதனை விளக்கும். பின்னாளில் பெருங்குடி குலத் தலைவர்கள் தங்கள் பூர்வீகம் பற்றிக் குறிப்பிடும்போது 'வடக்கே வெகுதூரம் வாழவந்தி நாடு'' என்று கூறுகின்றனர். வேட்டம்பாடி அ.பழனிசாமி பெருங்குடி குலத்தார்கள் 'வாழவந்த இடம்' 'வாழவந்தி' என்று பெயர் பெற்றிருக்கலாம் என்று கருதுகிறார்.

**வரகுண்ணாப் பெருங்குடியர்**

கொங்கு நாட்டுப் பெருங்குடியர் குலத்தார்கள் 'வரகுண்ணாப் பெருங்குடியர்' என்று அழைக்கப் பெறுகின்றனர்.

வரகு என்பது 18 வகையான தானியங்களில் ஒன்று. வரகு தானியம் மிகவும் சிறப்புடையது. அதிக சக்தி வாய்ந்தது. ஒரு வரகு தானியத்தை ஏழு தோல்கள் மூடியிருக்கும் என்பர். வரகைக் கோயில் விமானம், கோபுரக் கலசங்களில் நிரப்பி வைப்பது உண்டு. செப்புக் கலசங்களில் வரகு தானியத்தை நிரப்பிக் கோபுரக் கலசத்தைக் கிரீடம்போல் அமைப்பார்கள். செப்புக் கலசத்தில் உள்ள வரகுக்கு இடி, மின்னல் சக்தியைத் தாங்கி எதிர்த்து நிற்கும் ஆற்றல் உண்டு. வரகு நிரப்பப்பட்ட கலசங்கள் இடிதாங்கி போல் பயன்படுகிறது. வரகு கடும் வரட்சியைத் தாங்கி நிற்கும் பயிராகும். முளைப்புத் திறனும் அதிகம் உடையது. வறட்சி நிலத்தில் சாகுபடிக்கு ஏற்ற பயிர்.

நாட்டில் பெரும் பஞ்சம் வந்தால் விதைத்தானியம் மக்களுக்கு எங்கும் கிடைக்காது. மக்கள் கோயில் கலசங்களில் உள்ள வரகு தானியத்தை எடுத்து விதைத்து விளைச்சலைப் பெருக்குவர். இவ்வகையில் வரகு மிக முக்கியமான பயிராகும். திருப்பாதூர்

அகத்தீசுவரர் கோயில் திருப்பணி செய்து வழிபட்டுவரும் வேளாளரில் பெருங்குடியர் குலத்தார் வரகு தானியம் பயிரிடுவதில் சிறந்தவர்கள்.

திருப்பாதூர் அகத்தீசுவரர் கோயிலில் தேர்த்திருவிழா நடத்திப் பொங்கல் வைத்துப் பிரசாதம் வழங்கும்போது கோயில் மேளத்தார் களான கைக்கோளர்கட்கும், பெருங்குடி குல வேளாளர்கட்கும் சில உரிமைகள் பற்றித் தகராறு எழுந்தது.

மேளத்தார்கள் பெருங்குடியர் குலத்தில் ஒருவர் தம் பெண் குழந்தையைப் பொட்டுக்கட்டிக் கோயிலுக்கு விட்ட பின்னர்தான் பிரசாதம் பெறவேண்டும் என்றனர். ஒரு பெண்ணை விலைக்கு வாங்கிப் பொட்டுக்கட்டி விட்டபோது அப்பெண்ணை மேளத்தார்கள் கொன்றுவிட்டனர். அரசரிடம் வழக்குச் சென்றது. காவலர்கள் வந்து அழைத்தபோது பெருங்குடியர் குலத்தார் வரகு அடித்துக் கொண்டிருந்தனர். அப்படியே சென்றதால் உடம்பெல்லாம் வரகு தவிடாக இருந்தது. வெற்றிபெற்றுக் கோயிலுக்கு வந்த பெருங்குடியரிடம் திருப்பாதூர் அகத்தீசர் ‘இனிமேல் வரகைத் தொடக்கூடாது’ என்று கூறி ஆசீர்வதித்தார். அப்பெருங்குடியாருக்கு வரகுண்ணாப் பெருங்குடியர் என்று பெயரும் வைத்தார். இதனைப் பெருங்குடி குலச் செப்பேடு மிக விளக்கமாகக் கூறுகிறது.

> ‘‘ராசா எங்களை அழைத்துவரச் சொன்னார். ராசதானி சேவகர் எங்களை வந்துஅழைத்தார்கள். அக்காலத்தில் நாங்கள் மூனு பேர் வரகு அடித்து எங்கள் மேலெல்லாம் வரகுத் தவிடு அண்டியிருந்தது. அந்தப்படியே போன இடத்தில் ராசா எங்களுக்கு நல்ல வசனம் சொல்லி கோயிலுக்குப் போக உத்தரவு கொடுத்தார்கள். அந்தப்படி கோயிலுக்கு வந்த இடத்தில் சாமி வந்து உனக்கு இந்த அவஸ்தை வந்ததென்ன. இனிமேல் இந்த வரகைக் கைகளினால் தொடக்கூடாதென்று நம்பிக்கை வாங்கிக் கொண்டு ’’வரகு தின்னாப் பெருங்குடி’’ என்று பேரு கொடுத்து திருக்கொடியேறி வரகும் தந்து அந்தப்படிஇருக்கும் நாளில்’’

என்று செப்பேடு கூறுகிறது. இதன் மூலம் திருப்பாதூர் அகத்தீசுவர சுவாமி கொடுத்த பெயர் 'வரகுதின்னாப் பெருங்குடி' என்ற பெயராகும் என்பது தெரிகிறது. அரசன் அழைப்பின் பேரில் அரசவை சென்ற பெருங்குடி குலத்தார் பெயர் அம்மையப்ப கவுண்டர், பச்சை நாச்சிக் கவுண்டர் என்று செப்பேடு கூறுகிறது.

**காணியூர்கள்**

பெருங்குடியர் குலத்திற்கு இரண்டு காணிப்பாடல்கள் கிடைத்துள்ளன. முதல் பாடலில் வாங்கல், காங்கயம், புலுசைக் கரை, மணித்திடல், கடத்தூர், களத்தூர், சேலம், பிடாரமங்கலம், எருக்கிலைப் பாடி, கார்குழல், வளவநல்லூர், எருமைப்பட்டி, பீடம்பள்ளி, செவியூர், ஆரியூர், முருங்கத்தொழு, குடந்தை, திருமலை, விருப்பாட்சி, கொன்னையாறு, கண்டகுளம் ஆகிய ஊர்கள் பெருங்குடி குலக் காணியூர்கள் என்று கூறப்படுகிறது.

''சீர்மேவு திருவளர் வாங்கல்நகர் காங்கயம்
செய்புலுசைக் கரைநகருமாம்
செயமணித் திடல்கடத் தூர்களத் தூருடன்
சேலம் புடாரமங்கை

பேர்மேவு தென்எருக் கிலைப்பாடி கார்குழல்
பெயர்வளவ நல்லூருடன்
பெருமைஎரு மைப்பட்டி அதிகபீ டம்பள்ளி
பேரான செவியூருடன்

தார்மேவு ஆரியூர் தென்முருங் கைப்பதி
தழைத்திடும் குடந்தையுடனே
தரணிபுகழ்த் திருமலை விருப்பாட்சி கொன்றையார்
திருக்கண்ட குளமதுடனே

கார்மேவு கைத்தலன் மால்பெருங் குடிமோழை
கண்மணிய தாகவந்த

கனநல குமரதென் பிள்ளைக் குமாரனுட
கனிவுமிகு காணியிவையே''

என்பது பெருங்குடி குலக் காணிப்பாடலாகும்.

### இரண்டாவது காணிப்பாடல்

''சீர்பெருகு வாங்கல் திருவாலூர் வரகூரு
செப்புமெழில் இடையாறுடன்
செயமான கொங்கூரு புலியூரு புன்னம்
செப்பரிய பாப்பினிநகரம்

ஏர்பெருகு காங்கயம் வெள்ளியங் கிரிகாஞ்சி
இயல்புமடை வளாகமுடன்
இன்பமிகு கொடுமுடி கண்ணையூர் ஓடைநகர்
இதமான மொஞ்சனூரும்

தார்பெருகு ஒடுவந்தூர் கடத்தூரு நல்லூரு
தயவான ராக்கிநகரும்
சம்பிரமிகு சேலவள நாட்டரசு பெற்றிடும்
தயவுயர் பாண்டிவீரன்

ஆர்பெருகு சென்னகே சவராயர் வாங்கலாயி
இயல்புபடை வெட்டியம்மன்
அதிகவளர் வாங்கல்பெருங் குடியில்வளர் காராளர்
அருள்வாழி நீடூழியே''

என்பதாகும்.

### வாங்கல் பெருங்குடி

பொன்னர் சங்கரின் பாட்டனார் கோளாத்தாக் கவுண்டர் வாங்கலில் குடியேறிக் கோட்டையும், கோயிலும் கட்டிப் பெருங்குடி குலத்தாரைக் குடியேற்றிக் காணியாளர் ஆக்கினார். வாங்கலுடன், திருக்காம்புலியூர், சிற்றாலைப் பட்டணம் இவைகளையும் ஆட்சி

செய்தார். அதனால் கோளாத்தாக் கவுண்டர் 'வாங்கலான்' என்று அழைக்கப்பட்டார். அண்ணன்மார் பற்றிய பாடல் ஒன்று,

''வாங்கலான் பாட்டனவன் வாழ்வுதிருக் காம்புலியூர்
தீங்குசெய்த செல்லாத்தான் சிற்றப்பன் - ஓங்குதந்தை
நாமம்எழிற் குன்றுடையான் நண்ணுநகர்ச் சிற்றாலைத்
தாமரை நாச்சியார் தாய்''

என்று கூறுகிறது. வாங்கலில் இவர்கள் குலதெய்வம் வாங்கலம்மன். வாங்கலாயி என்றும் கூறுவர். கோளாத்தாக் கவுண்டர், கோயில் திருப்பணி செய்துள்ளார். வாங்கல் பெருங்குடி குலத்தார் தங்கள் குழந்தைகட்கு முன்பு வாங்கிலி, வாங்கலாயி என்று பெயர் வைப்பது வழக்கம். கோளாத்தாக் கவுண்டருக்குக் கொழந்தாக் கவுண்டர் என்று பெயர் உள்ளதால் கொழந்தசாமி என்றும் பெயர் வைப்பது வழக்கம். இக்கோயில் மக்கள் குடியேறிய சில ஊர்கள் வாங்கலான்பாளையம், வாங்கப்பாளையம், வாங்கலான்புரம் என்று அழைக்கப்பட்டன. முருங்கைப் பெருங்குடி குலத்தாரும், வகுரம்பட்டிப் பெருங்குடி குலத்தாரும் வாங்கலம்மன் கோயில் வழிபாட்டிலும், திருப்பணியிலும் பங்கு கொள்வர்.

கரூருக்கு வடக்கே 11 கிலோ மீட்டர் தொலைவில் காவிரியின் மேற்குக் கரையில் வாங்கல் கிராமம் உள்ளது. அங்கு கோட்டை மேட்டின் கிழக்கிலும், அக்கிராமத்திற்கு மேற்கிலும் நன்செய் நிலப்பகுதியில் வாங்கலம்மன் கோயில் உள்ளது. வரகுண்ணாப் பெருங்குடியர் குலதெய்வக் கோயிலான இதற்குக் கோளாத்தாக் கவுண்டர் திருப்பணி செய்ததால் கோயிலில் அவர் சிலையும் உள்ளது. பூசாரிகளும், பிற குடிகளும் தொடர்ந்து கொடுத்த தொல்லைகளின் காரணமாக 2000க்கு மேற்பட்ட பெருங்குடி குலத்தார் இணைந்து வாங்கல் புன்செய்ப்பகுதியில் பழைய கோயில் அமைப்பிலேயே புதுவாங்கலம்மன் கோயிலை 1887ஆம் ஆண்டு கட்டிக் குடமுழுக்கு விழாச் செய்தனர். ஆனால் பழைய

வாங்கலம்மன் கோயிலுக்குக் குப்பிச்சிபாளையம், பெரிய பட்டிப் பெருங்குடி குலத்தார் தொடர்ந்து காணியாளர்களாக உள்ளனர்.

வாங்கல் காணியாளர்களான பெருங்குடி குலத்தாருடன் பசுபதிபாளையம், கருப்பம்பாளையம், ஓடையூர், பூலாம்பாளையம், குப்பிச்சிபாளையம், அத்திப்பாளையம், கிடைக்காம்பாளையம், புன்னம், வாணிக்கரை, ஆலமரத்துப்பட்டி, குப்பம், வீரராக்கியம் முதலிய பல ஊர்களில் உள்ளவர்கள் பிடாரமங்கலம் காளியம்மன் கோயில், முருங்கை நாச்சியார் கோயில், செல்லாண்டியம்மன் கோயில், வகுரம்பட்டி-கொண்டிசெட்டிபட்டிக் காளியம்மன் கோயில், கடம்பங்குறிச்சி பாவளியம்மன் கோயில், பஞ்சமாதேவி காமாட்சியம்மன் கோயில், மின்னாம்பள்ளி காமாட்சியம்மன் கோயில் ஆகியவைகளின் குடிபாட்டுக்காரர்களும் புதுவாங்கலம்மன் கோயில் வழிபாடு, விழாக்களில் கலந்து கொள்கின்றனர். பொதுவாகப் பெருங்குடி குலத்தாரின் தலைத்தெய்வமாக வாங்கலம்மன் கோயிலைக் கருதுகிறார்கள்.

காங்கயத்தின் முதல் காணியாளர்கள் பெருங்குடி குலத்தாரே. காங்கயம் பகவதியம்மன் கோயிலையும், வீரணம்பாளையம் ஆயி அம்மன் கோயிலையும் குலதெய்வமாகக் கொண்டு சிறப்புடன் வாழ்கின்றனர். பெருங்குடி குலப் பெண்ணை மணந்த செங்கண்ண குலத்தார் முதற்காணியுரிமையுடையவர்கள் ஆயினர். மற்றும் வேந்தன், தூரன், பதுமன், வாணி, சாத்தந்தை, பதரி குலத்தாரும் காணியாளர்கள் காங்கயம் காணிப்பாடலில் இவை கூறப்படுகிறது.

> ''பெருங்குடி வேந்தன் செங்கண்ணன் தூரன்நற் பேர்பதுமன்
> விரும்பிய வாணி சாத்தந்தை பதரி விரைகுடிலூர்
> அரும்பணி நாதர் அகத்தீச ரும்அகி லாண்டவளும்
> கருங்குழல் மாது பகவதி வாழ்கின்ற காங்கயமே''

என்பது காங்கயம் காணிப்பாடலாகும். சிலர் வேந்தன் என்பதைத் தனிக் குலமாகக் கொள்ளாமல் பெருங்குடி குலத்தாரின்

அடைமொழியாகக் கருதிக் கூறுவர். வேந்தன் நிலையில் உள்ள பெருங்குடியர் என்பது அவர்கள் கூற்று. வேந்தன் என்பது தனிக்குலமேயாகும்.

## பிடாரமங்கலம் பெருங்குடியர்

முசிறி வட்டத்தில் பிடாரமங்கலம் பெருங்குடியர் பிடாரி காளியம்மனைக் குலதெய்வமாக வழிபட்டு வருகின்றனர். மிகப் பழமையான கோயில். இக்கோயிலை நிறுவிய 'பாட்டப்பன்' சிலை வணங்கப்படுகிறது. அவர் இக்கோயிலைக் கட்டியதாகக் கூறப்படும் கோளாத்தாக் கவுண்டராக இருக்கலாம். முப்பாட்டுக்காரர்கள் பெருங்குடி குலத்தாரேயாவர். பிடாரமங்கலம் சுற்று வட்டாரத்தில் சுமார் 300 குடும்பத்தினர் காணியாளர்களாக உள்ளனர். வெண்டுவன் குலத்தார்க்கும் காணியுரிமையுண்டு.

## முருங்கைப் பெருங்குடியர்

பிடாரமங்கலத்தின் வடபுறம் 5 கிலோ மீட்டர் தொலைவில் உள்ள முருங்கை என்னும்கிராமத்தில் உள்ள செல்லாண்டியம்மனைக் குலதெய்வமாகக் கொண்டு பெருங்குடி குலத்தார் சிறப்பாக வாழ்கின்றனர். பெருங்குடி குலத்தாரே பரம்பரை அறங்காவலர்களாக உள்ளனர். சித்திரை மாதம் திருவிழா நடைபெறுகிறது. பெருங்குடியர் குலத்தார் சுமார் 250 குடும்பத்தார் உள்ளனர். மாரியம்மன் கோயிலும் உள்ளது. அருகில் உள்ள எட்டுக் கிராமத்தார் இணைந்து விழா நடத்துகின்றனர்.

முருங்கைப் பெருங்குடியினர் நாச்சியார் கோயிலையும் குடிப்பாட்டுக் கோயிலாகக் கொண்டு வணங்கி வருகின்றனர். நாச்சியார் ஒரு கன்னிமார் வடிவில் வணங்கப்படுகிறார். ஏறக்குறைய ஆயிரம் பெருங்குடியர் குடும்பங்கள் காணியாளர்களாக உள்ளனர். வரகுண்ணாப் பெருங்குடியாரே பூசாரியாக உள்ளார்.

## வகுரம்பட்டிப் பெருங்குடியர்

நாமக்கல் மோகனூர் சாலையில் நாமக்கல்லிலிருந்து இரண்டு கிலோமீட்டர் தொலைவில் சாலைக்கு மேல்புறம் கொண்டிசெட்டிப்பட்டியில் உள்ள காளியம்மன், குன்னிமரம் கருப்பண்ணசாமி, மாரியம்மன் கோயில்களைக் குடிப்பாட்டுக் கோயிலாகக் கொண்டு வணங்கி வருகின்றவர்கள் வகுரம்பட்டிப் பெருங்குடியர். காளியம்மன் கோயிலில் அம்மையப்பன் காராளரைப் பாட்டப்பன் என்ற பெயரில் வணங்கி வருகின்றனர். ஏறக்குறைய 550 பெருங்குடியர் குடும்பத்தினர் காணியாளர்களாக உள்ளனர். சித்திரை மாதம் கோயில் திருவிழா நடைபெறும். வகுரம்பட்டி, கொண்டிசெட்டிப்பட்டி, சிங்கிலிப்பட்டி மூன்று கரைக்கட்டு ஊர்களும் முதன்மைக் காணியூர்கள் ஆகும். இக்கோயில் விழாவில் தான் பெருங்குடியர் குடியேற்ற வரலாறு கூறும் சிறப்புமிகும் ஊஞ்சல்பாட்டுப் பாடப்படுகிறது.

## புலியூர்ப் பெருங்குடியர்

புலியூர்ப் பெருங்குடியர் குடியேற்றத்திற்கு ஒரு வரலாறு கூறப்படுகிறது. சோழநாட்டுப் பூவாளூரில் வாழ்ந்த பெருங்குடியர் மக்கள் அங்குள்ள மேளத்தாருடன் ஏற்பட்ட கருத்து மாறுபாடு காரணமாக வெளியேறிக் கொங்குநாடு வந்தனர். அவர்களில் ஒரு குடும்பம் கரூர் வட்டம் மேலப்பாளையம் கிராம நத்தத்தில் குடியேறியது. அங்கு குடியேறியவரின் ஐந்து ஆண்மக்கள் காளிபாளையம், மேலூர், கீழூர், வடக்குப்பாளையம், அரிக்காரம் பாளையம் ஆகிய ஊர்களில் குடியேறி பல வம்சமாகப் பெருகினர். இவர்கள் அனைவரும் புலியூர்ப் பெருங்குடியர் என்று கூறப்படு கின்றனர்.

புலியூர் இரயில் நிலையத்தின் வடக்கே இரண்டு கிலோ மீட்டர் தொலைவில் அமராவதியாற்றின் தென்கரை ஓரமாக உள்ள காளியம்மன் கோயில், சனப்பிரட்டி இரயில் நிலையத்தின் அருகில்

உள்ள மேலப்பாளையம் முச்சிலியம்மன் கோயில், கருப்பண்ணசாமி கோயில், எல்லை அரசு கோயில், காமாட்சியம்மன் கோயில் ஆகியவை புலியூர்ப் பெருங்குடி குலத்தாரின் காணியுரிமைக் கோயில்களாகும். கோயில்பாளையத்தின் அருகில் இருந்த பழைய காளியம்மன் கோயிலுக்குப் பதிலாகப் புதுக்காளியம்மன் கோயில் கட்டியுள்ளனர்.

புலியூர்க் காளிபாளையம், வடக்குப்பாளையம், வெள்ளாளப் பட்டிக் கீழூர், வெள்ளாளப்பட்டி மேலூர் பெருங்குடியர் பரம்பரை நிர்வாகிகளாக உள்ளனர். புலியூர்ப் பெருங்குடியர் மேல் கரை, கீழ்க்கரை என இரண்டு பிரிவாக அழைக்கப்படுகின்றனர். மேல்கரையார் முச்சிலியம்மன் கோயிலிலும், கீழ்க்கரையார் காளியம்மன் கோயிலிலும் விழாக் கொண்டாடுவார்கள். இருவரும் இணைந்து காமாட்சியம்மன் கோயில் பொங்கல்விழாக் கொண்டாடுவர்.

மின்னாம்பள்ளி காமாட்சியம்மன் கோயில், தாளாம்பாடி பெருமாள் கோயில், சேடப்பட்டி செல்லாண்டியம்மன் கோயில், வாங்கல் மாரிக்கவுண்டம்பாளையம் இராக்கியண்ணன் கோயில், கன்னிமார்கோயில், வாங்கல் படுகை காமாட்சியம்மன் கோயில், கடம்பங்குறிச்சி பாவளியம்மன் கோயில், பஞ்சமாதேவி காமாட்சியம்மன் கோயில், ஊதியூர் குள்ளம்பாளையம் அருகில் உள்ள அப்பிபாளையம் பெரியக்காண்டி, கரிச்சிக்குமாரர் கோயில், பேரோடு கரிச்சிக்குமாரர், கன்னஞ்சியம்மன் கோயில், காடாம்பாடி செல்லாண்டி யம்மன் கோயில் முதலிய பல கோயில்களில் பெருங்குடியர் குலத்தார் தனியாகவும், பிறகுலத்தாருடன் இணைந்தும் காணியுரிமை கொண்டு சிறப்புடன் வாழ்ந்து வருகின்றனர்.

### பெரும் சிறப்பு

கொங்குச் சமுதாயத்தின் தேசிய தெய்வமாக விளங்குபவர்கள், வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து வான் உறையும் தெய்வங்களாக

வணங்கப் பெறும் அண்ணன்மாராகிய பொன்னர் - சங்கர் வரகுண்ணாப் பெருங்குடியர் குலம் சார்ந்தவர்கள் என்பது பெருமைக்குரியதாகும்.

**தென்னிலைக்காணி பெறல்**

சிறுத்தலை வேட்டுவர், மாகாளி வேட்டுவர், வெங்கச்சி வேட்டுவர், மாந்தக் கவுண்டர், குட்டியாக் கவுண்டர் ஆகிய ஐவரும் தென்னிலைக் காணியுரிமையுடைய வேட்டுவ சமூகத்தினர். பெருங்குடி வெள்ளாளன் திருமலைக் கவுண்டரிடம் ஆயிரம் பொன் வாங்கிக் கொண்டு தென்னிலையில் கால் காணியைப் பெருங்குடி குலத் திருமலைக் கவுண்டருக்கு உரிமையாக்கினர்.

''ஆதிகருவூர்'' என்று சிறப்பிக்கப்படும் கருவூர் ஆநிலை யப்பர் கோயில் அபிடேகத்திற்குப் பால் கொடுக்கும் உரிமை பெருங்குடியர் குலத்திற்கு உண்டு.

## 75. பைதலை குலம்

கல்வெட்டில் மட்டுமே பயின்று வரும் இக்குலம் பற்றிக் குலவரலாறு எழுதியோர் எவரும் எழுதவில்லை. இலக்கணப் புணர்ச்சி விதிப்படி பசுமை+தலை=பைதலை என ஆகும். வளமும் தலைமையும் உடைய குலமாக இருக்கலாம். பால வேளாளரில் பைத்தலை குலம் உண்டு. ஆனால் இக் கல்வெட்டில் பால வேளாளர் என்று குறிப்பிடாமல் வெள்ளாளர் என்று மட்டும் குறிக்கப்பட்டுள்ளது. பிற பாலவேளாளர் ஆவணங்களில் பாலவேளாளர் என்ற குறிப்பு இருக்கும்.

போசள மன்னன் வீர சோமேசுவரன் காலத்தில் (1283) சேவூர் வெள்ளாளன் பைதலையில் நடுவன் உடையான் சேவூர் கபாலீசுவர முடையார் கோயிலில் சந்தியா தீபம் வைத்ததை இக் கல்வெட்டுக் கூறுகிறது.

> ''ஸ்வஸ்திஸ்ரீ வீர சோமீஸ்வர தேவர்க்கு பிருத்விராஜ்யம் பண்ணி யருளாநின்ற நல்லியாண்டு சுபானு வருஷத்துக் கார்த்திகை மாதம் 2 தியதி வடபரிசார நாட்டுச் சேவூரான செம்பியன் கிழானடி நல்லூரில் உடையார் திருக்கபாலீசுவரம் உடையார்க்கு மேற்படியூரில் வெள்ளாளன் பைதலையரில் நடுவன் உடையானேன் வைத்த சந்தியா தீபம் ஒன்றுக்கு குடுத்த பணம் 10 இப் பணம் பத்தும் கைக்கொண்டோம்.''

இக்கபாலீசுவரரை 'வாலீசுவரம்' என்று கொண்டு 'வாலி' வணங்கியதாகக் கூறுவர். சைவ சமயப் பிரிவில் ஒன்றாகிய 'கபாலிகர்' தங்கி வழிபட்ட காரணத்தால் 'கபாலீசுவரம்' என்று பெயர் பெற்றதென்பர்.

## 76. பைய்யர் குலம்

கொடுமணல் இலக்கியங்களிலும், கல்வெட்டுகளிலும் மட்டுமே குறிக்கப்படும் பையர் (பைய்யர்) குலம் பற்றி எவரும் எழுதவில்லை. பை என்ற சொல்லுக்கு பசுமை, இளமை, அழகு முதலிய பல பொருள்கள் உள்ளன. இடிகரை, அன்னூர், சேவூர் ஆகிய ஊர்களில் மட்டும் பையர் குலக் கல்வெட்டுகள் உள்ளன.

கோவை வட்டம், இடிகரை வில்லீசுவரமுடையார் கோயிலில் சந்தியா தீபம் வைத்தவர்கள்.

1) இடிகரை வெள்ளாளன் பைய்யரில் உடையான் சிறியான் (சோழர் 1258)

2) இடிகரை வெள்ளாளன் பைய்யரில் பிள்ளன் சிறியான் (பாண்டியர் 1270)

3) இடிகரை வெள்ளாளன் பைய்யரில் இடையன் நெறியான் பறையன் (பாண்டியர் 1277)

4) இடிகரை வெள்ளாளன் பைய்யரில் செம்மண் காவன் (பாண்டியர் 1280)

5) கொற்ற மங்கலம் வெள்ளாளன் பைய்யரில் பறையன் பறையன் (பாண்டியர் 1273)

இடிகரை வில்லீசுவரமுடையார் கோயிலில் வீரபாண்டியனின் 5 ஆம் ஆட்சியாண்டில் 1270ல் சந்தியா தீபம் இரண்டு வைக்க 20 வராகன் பணம் கொடையாக அளித்த பிள்ளன் சிறியான் 1258ஆம் ஆண்டு வில்லீசுவரமுடையார் கோயில் திருப்பணியில் பங்கு கொண்டு கோயில் துவார வாசலில் வைக்க இரண்டு நிலை கால்களைக் கொடையாக அளித்துள்ளார். இப்பிள்ளன் சிறியான் இரண்டு சந்தியா தீபம் அளித்தபோது ஒரு சந்தியா தீபம் சிறுகாலைப் பூசையின்போதும், மற்றொரு விளக்கு உச்சிவேளைப் பூசையின் போதும் வைக்க ஏற்பாடு செய்துள்ளார்.

இவர்கள் கொடையாக அளித்த பொன்னைக் கொண்டு விளக்கு எரிக்க ஒப்புக்கொண்டவர் வில்லீசுவரம் கோயில் காணியுடைய சிவப்பிராமணன் காசிப கோத்திரத்து திருநட்டன் அகத்தீஸ்வரம் உடையானான சித்திரமேழிபட்டன் என்பவர். 'சித்திரமேழி' என்று இவர் பெயர் பெற்றிருப்பதால் வேளாளரால் சிறப்பிக்கப்பட்ட அல்லது வேளாளருக்குரிய அர்ச்சகராக இருக்கலாம்.

வீரசோழன் ஆட்சிக்காலத்தில் வடபரிசார நாட்டில் உள்ள கங்கைப்பள்ளி, சேவூர், வெள்ளைப்பாடி ஆகிய மூன்று ஊர்களில் உள்ள அன்னூர் மன்னீசுவரர் கோயில் நிலங்கள் ஐந்து மன்றாட்டாகப் பிரித்துப் பலருக்கு அளிக்கப்பட்டது. மன்றாட்டுப் பெற்றவர்கள் தங்கள் மன்றாட்டில் உரிய வரிகளை வசூல் செய்து அவற்றைக் கோயில் பண்டாரத்தில் அளிக்க வேண்டும்.

இம்மன்றாட்டில் ஒரு பங்கைப் பெற்றவர்கள் வெள்ளாளர் பைய்யர் குலத்தார் சிலர். அவர்கள் ''வெள்ளாளன் பைய்யரில் வரைய நம்பனும் சடையன் மக்களும் புளிய நம்பனும் வடபரிசார நாட்டுச் சேவூரிலிருக்கும் வெள்ளாளன் பைய்யரில் பொல்லான், சிறியான் மூப்பன்'' ஆகியோரும் ஆவர்.

சுந்தரபாண்டியன் ஆட்சிக்காலத்தில் சேவூரான செம்பியன் கிழானடி நல்லூரில் கபாலீசுவரர் கோயிலில் சந்தியா தீபம் வைக்கப் பத்துப் பணம் கொடையாக அளித்தவர் ''சேவூர் வெள்ளாளன் பைய்யரில் நடுவன் உடையான்'' என்பவர்.

எல்லாக் கல்வெட்டுகளிலும் 'பைய்யர்' என்றே எழுதப் பட்டுள்ளது.

## 77. பொருளந்தை குலம்

கொங்கு வேளாண் பெருமக்களில் 'பொருளன்' என்னும் சிறப்பான குல முதல்வரின் தந்தை கால்வழி தோன்றிய மக்கள் 'பொருளந்தை' குலத்தினர் எனப்பட்டனர். பொருளன்+தந்தை என்ற இரு சொற்கள் சேர்ந்து பொருளந்தை என மாறும் என்று தொல்காப்பியம் இலக்கண விதி கூறுகிறது.

டி.எம். காளியப்பா, நல்.நடராசன் போன்றவர்கள் இக் குலத்தை 'பிறழாந்தை' எனக்கொண்டு 'ஆந்தை குலத்திலிருந்து பிறழ்ந்த குலம்' என்று கூறுகின்றனர். எந்த இடத்திலும் இக்குலப் பெயர் பொருளந்தை - பிறழாந்தை என்று அழைக்கப்படவில்லை. சிலர் திருத்தமாகக் கூறுவதாக எண்ணிப் 'பொருள்தந்த குலம்' என்று கூறியும் எழுதியும் வருகின்றனர். இப்பெயர் சில ஆவணங் களிலும், இலக்கியங்களிலும் சிறுபான்மை பயின்று வருகிறது.

பொருளந்தை குலம், பொருள்தந்த குலம், புறளந்தை குலம், பிரளந்தை குலம், புரளந்த குலம், பெரளந்தை குலம், பெரளந்த குலம், பேரிழந்தான் குலம் என்று பலவாறு அழைக்கப்படுகிறது. இவை வேறு வேறு குலங்கள் அல்ல. ஒரே குலம்தான்.

டி.எம். காளியப்பா, பொருளந்தை, பெரளந்தை, பேரிழந்தான் என்ற மூன்றையும் தனித்தனிக் குலங்களாகக் கொள்ளுகிறார். இரா. இரவிக்குமார், பேரிழந்தான், பொருள்தந்த குலத்தைத் தனித்தனிக் குலங்களாகக் கூறுகிறார். கு. சேதுராமன் பிரளந்தை, பொருளந்தை குலங்களை வேறுவேறு குலங்களாகக் கருதுகிறார். இவையனைத்தும் ஒரே குலமாகும். மக்களின் உச்சரிப்பு வேறுபாட்டால் ஒரே குலம் இவ்வாறு அழைக்கப்படுகிறது என்பதே உண்மையாகும்.

தலையநல்லூர்ப் பொருளந்தை குலத்தார் உச்சரிப்புத் தவறால் தங்களைப் 'பிராந்து குலம்' எனக் கொண்டு பருந்தைத் தங்கள் குல அடையாளமாகக் கொண்டுள்ளனர். பருந்தைப் புனித மாகக் கொண்டு வணங்குவர். தீங்கு செய்ய மாட்டார்கள்.

புலவர் குழந்தை, மடந்தை - குழந்தை போல தை விகுதி பெற்ற பெயர்ச் சொல் என்று கூறுவார். 2000 ஆண்டுகட்கு முற்பட்ட தொல் எழுத்துப் பொறிப்புக்களில் 'அந்தை' என்ற சொல் பல இடங்களில் வருகிறது. பொருளந்தை என்ற சொல் ஈற்றில் அந்தை என்ற சொல்லை ஏற்றதாகவும் இருக்கலாம்.

''பொருளந்தை குலம்''
''மேவு பொருளந்தை குலம்''

என்று நல்லதம்பிச் சர்க்கரை காதல் இலக்கியத்திலும்,

''பெருமைபெறு பொருளந்தை குலம்''
''நேர்மையது தவறாத பொருளந்தை''

என்று தனிப்பாடல்களிலும்,

''கனத்த பொருளந்தை குலம்''
''பெருகு பொருளந்தை''

என்று வேளாளர் 96 கீர்த்திப் பாடலிலும்,

''பெரிய பொருளந்தை''

என்று மரபாளர் உற்பத்திக் கும்மியிலும்,

''அன்னதான பொருளந்தை''
''அதிக சௌக்கிய பொருளந்தை''
''முதலான பொருளந்தை''

என்று காங்கய நாட்டுப் பாடல்களிலும் சிறப்பிக்கப்படுகிறது.

**காணியூர்கள்**

பொருளந்தை குலத்திற்கு இரண்டு காணிப்பாடல்கள் கிடைத்துள்ளன. முதற் காணிப்பாடல் கருமாபுரம், காடையூர், பெருமாநல்லூர், ஆதியூர், விசயமங்கலம், அமுக்கயம், பரமத்தி, புன்னம், தோடயம், ஆலாம்பாடி, ஆறுதொழு, ஏழூர், கொங்கணாபுரம், கரூர், முத்தூர், மதுரை, உறையூர், நல்லூர், பிடாரியூர், மாம்பூண்டி,

மாவுரட்டி, சேமூர், தலையூர், தூரம்பாடி, பிள்ளைக்கரை ஆகிய ஊர்களைக் காணியூர்கள் என்று கூறுகின்றது.

''ஆதிகரு மாபுரம் காடையூர் தென்பழனை
ஆதியூர் விசயமங்கை
அமுக்கயம் பரமுத்தி புன்னமது தோடயம்
ஆலாம்பாடி ஆறைஏமூர்
சோதிபெறு கொங்கணா புரம்வஞ்சி முத்தூரும்
சொக்கர்வாழ் மதுரைஉறையூர்
சுயமான நல்லூர் பிடாரியூர் மாம்பூண்டி
சொற்பொருளின் மாவுரட்டி
தாதுலவு இட்டமா நேமிசே மூருடன்
தலையூர்நல் தூரம்பாடி
தமிழ்பெற்ற பிள்ளைக் கரைக்கதிப ராகவளர்
தார்பெற்ற கொங்குவேளிர்
நீதியுள மன்னவர்கள் சிற்றம் பலத்தாரை
நினைக்கின்ற கங்கைகுலமன்
நேர்மையது தவறாத பொருளந்தை கோத்திரர்
நிலைமையுடன் வாழ்கநன்றே''

என்பது முதல் பாடலாகும்.

இரண்டாம் காணிப்பாடல் கருமாபுரம், காடையூர், மதுரை, திங்களூர், ஆதியூர், குன்னத்தூர், முத்தூர், அமுக்கயம், விசயமங்கலம், புன்னம், பவித்திரம், தோமூர், ஆலாம்பாடி, மாவுரட்டி, பெருமாநல்லூர், பழனி, பிடாரியூர், பரமத்தி ஆகிய ஊர்களைக் குறிக்கிறது. முதல் பாடலில் உள்ள சில ஊர்கள் நீக்கப்பட்டுச் சில ஊர்கள் சேர்க்கப்பட்டுள்ளன.

''திருமரபு கருமா புரம்காடை யூர்மதுரை
திங்களூர் ஆதியூரும்
திறமான குன்னத்தூர் முத்தூர் அமுக்கயம்
செயவிசய மங்கைநகரம்

திருவுலவு புன்னம் பவித்திரம் தோழூர்
　　தழைத்தஆ லாம்பாடியும்
தாதவிழ் மலர்ந்தபஞ் சூளைமா விரட்டியூர்
　　திருபெருமா நல்லூருடன்

கருதரிய பழனியும் பிடாரியூர் பரமுத்தி
　　காணியென வேபடைத்தாய்
கமலமலர் அருள்வதன சென்னியங் கிரிமுருகர்
　　கழலிணையை மறவாதவர்

பெருமைபெறு பொருளந்தை குலதிலகன் எனவந்த
　　விபேகன் குழந்தைவேலன்
பெற்றகண் மணியான பழனிமலை நாயகன்
　　பிரபுடிக மகராயனே''

என்பது இரண்டாம் பாடலாகும்.

பொருளந்தை குலத்தார் பிடாரியூர்க் காணிபெற்ற வரலாறு அவ்வூர்ச் செப்பேட்டில் கூறப்பட்டுள்ளது. பிடாரியூரின் காணி யாளர்கள் ஈஞ்சன் குலத்தினர். பிடாரியூர் ஈஞ்சன் குலம் கூத்தக் கவுண்டர் மகள் வெள்ளைப் பழனியம்மாளைக் கருமாபுரம் பொருளந்தை குலம் பள்ளிக்கூடத்தான் குழந்தை வேலப்பகவுண்டர் மணம் முடித்துப் பிடாரியூரில் காணி பெற்றார். பிடாரியூர்ப் பொருளந்தை குலத்தினர் சிலர் கோபி-கள்ளிப்பட்டிப் பகுதியில் குடியேறினர்.

சாத்தந்தை குலத்தாரோடு சம்பந்தம் செய்துகொண்டு பொருளந்தை குலத்தார் விசயமங்கலத்தில் காணிபெற்றனர். விசயமங்கலத்தில் பொருளந்தை குலத்தார் அரசு அதிகாரிகளாக வாழ்ந்தனர். அவர்களில் வாரணவாசி, வடமலை, சீரங்கன் ஆகிய சகோதரர்கள் விசயநகர ஆட்சியில் அச்சுதராயன் படைத் தலைவராய் விளங்கினர். இவர்கள் திருமலை நல்லான் என்பார் மக்கள். அரசுக்கு எதிராக இருந்த வேட்டுவர்களை அடக்கினர். தமிழ்ப் புலவர்களை

ஆதரித்தனர். அரசனால் மதிக்கப்பட்டு ''வேளாளர் கோன்'' என்று பட்டம் பெற்றனர். விசயமங்கலத்தில் முதல்வராக விளங்கிய இவர்கள் பட்டக்காரர்கள் என்றும் சிறப்புப் பெற்றனர். காங்கய நாட்டில் முதலில் 12 ஊர்கள்தான் இருந்தன. பொருளந்தை குலத்தார் ஆறுதொழு, ஆலாம்பாடி ஆகிய ஊர்களை ஏற்படுத்தினர்.

விசயமங்கலம் பொருளந்தை குலத்தார் பற்றிய வாலசுந்தரக் கவிராயரின் கொங்கு மண்டல சதகப் பாடல்கள்.

''ஆணவர் என்று பனிரெண்டு பட்டங்கள் ஆகத்திக்கு
வேணுமென்று அச்சுத ராயர்சிம் மாசனம் வேளாளர்கோன்
காணவு மேவும் திருமலை நல்லான் கனகரத்னம்
வாரண வாசிமெய் மன்றாடி வாழ்கொங்கு மண்டலமே''

''படைமுனை வெல்லவும் அச்சுத ராயர் படைத்தலைவர்
திடமுனை வீரர் பொருள்தந்த கோத்திரன் செருநர்முடி
இடர்செய்த தாளவன் இம்முடி வாரண வாசிஎங்கள்
வடமலை முன்னவன் சீரங்கன் வாழ்கொங்கு மண்டலமே''

''பூரண மானநல் சந்திரோ தயமும் பொருள்தந்தகோன்
நாரணன் கமல வல்லி குறுப்புநல் நாட்டவர்கள்
ஆரணன் தாதி கனதன கும்பம் அழித்துச்செம்பொன்
வாரண வாசிநன் மன்றாடி வாழ்கொங்கு மண்டலமே''

விசயமங்கலம் பொருள்தந்தகுல வாரணவாசிக்கும் விசயநகர மன்னன் கிருஷ்ணதேவராயருக்கும் உள்ள தொடர்பை கம்பநாத சுவாமிகள் சதகப் பாடல் கீழ்வருமாறு கூறுகிறது.

''கொங்கார் நிதியும் புகழ்கிருஷ்ண ராயர் கொலுச்சபையில்
சிங்காரம் ஆகிய வேளாண் மகள்எனச் சென்றுவளர்
சங்கரன் கச்சியில் வாழ்திறக் குத்தித் தள்ளிவைத்தே
மங்காத கீர்த்தி புகழ்படைத் தான்கொங்கு மண்டலமே''

வாரணவாசி என்னும் இவ்விசயமங்கலம் பொருளந்தை குலத்தலைவர் மன்றாடி என்று பட்டம் பெற்றவர். சங்கப் புலவர்களை ஆதரித்ததும், விசயமங்கலத்தில் வேட்டுவர் படைகளை வென்றதும் ஆகிய நிகழ்ச்சிகளை இரண்டு பாடல்களில் வால சுந்தரக் கவிராயர் விளக்குகிறார்.

''சங்கப் பலகை வரும்புல வோர்தமைத் தான்தடுத்துக்
கங்கைக்கு உரியவன் காத்தவன் காண்கற்ப காலத்திலே
கொங்கில் பொருள்தந்த பெம்மான்காங் கேயன் கொற்றநகர்
மங்கைக்கு வாரண மன்றாடி வாழ்கொங்கு மண்டலமே!''

''கூடுவர் கம்பளர் சோனகர் வீரர் குருகுலத்தோர்
ஆடுவர் வெம்பரி வீரர்எல் லாம்புக ஐவர்மங்கை
நீடிய வாரணன் சீரங்கன் வடமலை நீண்மைபெற
வாடியல் வேடுவர் தம்மைவென் றார்கொங்கு மண்டலமே''

என்பவை அப்பாடல்களாகும். இப்பொருளந்தை குலத்தார் படைத் தலைப் பிரிவில் தங்களை இணைத்துக் கொண்டவர்கள்.

**சிவமலைத் திருப்பணி**

காடையூர், ஆலாம்பாடி, ஆறுதொழு பொருளந்தை குலத்தார் சிவமலைக்கும் பிற கோயில்கட்கும் கொடுத்த கொடையைச் சிவமலைக் குறவஞ்சி விளக்கமாகக் கூறுகிறது.

'காடை நகர்' என்று சிறப்பிக்கப் பெறும் காடையூரில் பொருளந்தை குலப் பச்சையப்பன், காங்கேயன், அழைப்பிச்சான் ஆகியோர் மண்டபக் கட்டளை நடத்தியதுடன் நாகவாகனம் செய்து கொடுத்துக் கொடையளித்துச் சிவமலையாண்டவரை வணங்கிய செய்தி கூறப்படுகிறது.

'வாகன் திருமால் மருகன் சிவனாகன்
வள்ளிபங்கன் குகன்மண் டபக்கட்டளை
தியாகமும் வாகன நாகமும் தந்து
தரிசனம் செய்யும் பொருளந்தை கோத்திர

நாகரீகன் அழைப்பிச்ச மகீபனும்
நல்பச்சை ராயனுடன் காங்கேயேந்திரனும்
யோகமிகுந்திடு காடைநகர்''

என்பது அப்பாடல் பகுதியாகும்.

பாப்பினி பச்சோட்டு ஆவுடையார் தேவஸ்தானம் என்று எல்லோரும் அறிந்த ஆலாம்பாடிப் பொருளந்தை குல முத்துக் குமாரன், நல்லகுமாரன் வயல்கட்கும், சந்தனத் தோப்புக்கும் உரியவன். அவரும் சிவமலையை வழிபடும் அன்பர்.

''செஞ்சடை ஈசர் சிவன்பச்சோ டேசர்தன்
தேவஸ்தானம் என்று திக்கெட்டிலும் சூலம்
மிஞ்சுமா லாம்பாடிப் பொருளந்தை கோத்திர
வேளாளன் முத்துக் குமாரன் திருத்தின
நஞ்சை யிடத்திலும் சந்தனத் தோப்பிலும்
நல்ல குமார விதுரன் வயிலிலும்''

என்பது அப்பாடல் பகுதியாகும்.

ஆறு தொழுவைச் சேர்ந்த பொருளந்தை குலம் பழனி என்பவர் ஆறுதொழுவில் கருமலை மீது உள்ள பழனிமுருகன், சிவமலை வேலவர், பாப்பினி பச்சோடை நாதர் ஆகியோரை வணங்கிப் பேறு பெற்றவர்.

''ஆறு தொழுவில் கருமலை மீதில்
அருளாய் வளர்ந்த பழனி முருகனை
கூறிப் பணிந்து சிவமலை மீதில்
குழந்தை வடிவேல் குகனை நினைந்துமே

நீறு புனைந்து சகல சம்பத்து
நிறைந்த பொருளந்தை கோத்திரன் பழனிமால்
பாறுபதி யூரில் பச்சோடை நாதர்
படித்தரத் துக்கும் கொடுத்த வயல்''

என்பது சிவமலைக் குறவஞ்சிப் பகுதியாகும்.

## கட்டி மகிபன் பள்ளு

ஏழூரில் பொருளந்தை குலப் பழனிவேல் கவுண்டர் மகன் கட்டியண்ணன் என்பவரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு நரசிங்கன் என்னும் புலவரால் பாடப்பட்ட இலக்கியம் கட்டி மகிபன் பள்ளு. பாட்டுடைத் தலைவர்,

''விள்ளுபுகழ் ஏழூரன் வேள்பழனி வேல்புதல்வன்
வள்ளல்பொரு ளந்தைகுலன் மால்கட்டி பூபதி''

எனப் பாட்டுடைத் தலைவர் புகழப்பட்டுள்ளார். மற்றும்

''ஒருசொல் வாசகனாகிய உயர்ந்த கட்டிவேள்''

''வடித்த செந்தமிழ் புனைந்த வண்புகழ்
நடத்தும் ஏழூர் நாட்டினான்
வண்மை யாகவ ராமன் ஆகிய
தர்மக் கட்டிவேள்''

என்றும் ஏழூர் பொருளந்தை குலத்தலைவர் கட்டியண்ணன் புகழப் படுகிறார். அங்குள்ள அண்ணன்மார் கோயில் கட்டியண்ணன் கோயில் என்றே அழைக்கப்படுகிறது. ஏழூர்ப் பண்ணையம்மன் கோயிலிலும் பொருளந்தை குலத்தாருக்குக் காணியுரிமை உண்டு.

## பொருளந்தை குல மெச்சன்

நாடு, ஊர்கட்குத் தனிக் காணிப்புலவர்கள் நியமனம் செய்துகொள்ளும் வழக்கம் உண்டு. பொருளந்தை குலத்தார் தங்கள் குலத்திற்கென்றே தனிப்புலவர் ஒருவரை நியமித்துக் கொண்டதை ஒரு செப்பேடு கூறுகிறது.

ஒரு முறை பொருளந்தை குலத்தாரின் ஆதிக் காணியூர் ஆகிய கருமாபுரத்தில் காடையூர், ஏழூர், தோட்டக்குறிச்சி, நல்லூர், முத்தூர், பருத்திப்பள்ளி ஆகிய ஊர்களைச் சேர்ந்த பொருளந்தை குலத்தார் கூடினர். லோக காங்கேயன் என்பவர் தலைமை தாங்கினார்.

தங்கள் குலப் புலவராக தீத்தாப் பெருமகன் பொன்னாலிப் புலவனுக்குப் ''பொருளந்தை குல மெச்சன்'' என்று பெயரிட்டு நியமித்தனர். அப்புலவருக்குப் பல சிறப்புக்கள் செய்தனர்.

## கல்வெட்டுகள்

பொருளந்தை குலக் கல்வெட்டுகள் காடையூர், வேட்ட மங்கலம், வெள்ளோடு, முன்னூர் ஆகிய இடங்களில் உள்ளன.

விக்கிரம சோழன் காலத்தில் கி.பி.1263ஆம் ஆண்டு காடையீசுவரர் கோயில் கட்டும்போது பொருளந்தை குல சோழன் காளி திருமடைப்பள்ளி, மதில், நிர்மாலியத் தொட்டி இவைகளைத் தன் உபயமாகக் கட்டினார். கி.பி.1170 ஆம் ஆண்டு பொருளந்தை குல சிலம்பன் முதலியும் மற்றொரு பொருளந்தை குலத்தாரும் சந்தியா தீபம் வைத்துள்ளனர். பொருளந்தை குலப் பிள்ளையாரான உடையான் என்பவர் கி.பி. 1283ஆம் ஆண்டு பொருட்கொடை வழங்கியுள்ளார்.

வேட்டமங்கலம் புட்பவனமுடையார் கோயிலில் கிழங்க நாட்டுப் பகுமாபுரத்து வெள்ளாளன் பொருளந்தைகளில் நாடு கொண்டான் தொண்டைமான் கவுண்டர் செய்த திருப்பணி குறிக்கப்படுகிறது. வெள்ளோட்டுக் கல்வெட்டில் பிடாரியூர் வெள்ளாளன் பொருளந்தைகளில் உலகுடையான் என்பவர் பூந்துறை நாட்டுச் சபையில் உறுப்பினராக இருந்த விபரம் கூறப் படுகிறது. முன்னூர் மலையில் பொருளந்தை குல மோளக்கவுண்டர் மகன் காரியணகவுண்டர் கி.பி.1758 ஆம் ஆண்டு கல்லுக்கட்டுக் கட்டியுள்ளார்.

## செப்பேடுகளில்

கத்தாங்கண்ணிக் கண்ணகுலப் பட்டயத்தில் திருப்பூரில் பொருளந்தை குல நல்லிக்கவுண்டர் மணியகாரராக இருந்தார் என்று கூறப்பட்டுள்ளது. கொங்குப் புலவர் பட்டயத்தில் மேல்கரைப் பொருளந்தை சார்பில் சூரியாண்டாக் கவுண்டரும், கீழ்க்கரைப்

பொருளந்தை குலம் சார்பில் சூரிய நாராயணக் கவுண்டரும் கையெழுத்திட்டுள்ளனர். பொருளந்தை குலத்தில் சமயகாரியங் களுக்காக பச்சை என்னும் மாணிக்கன் நியமிக்கப்பட்டிருந்தார்.

பாசூர் இம்முடி அகிலாண்ட தீட்சிதரைக் குலகுருவாக ஏற்றுக்கொண்டு கொங்குச் சமுதாயத்தில் பலர் எழுதிக் கொடுத்த செப்பேட்டில் பொருளந்தை குலம் சார்பாகக் கையெழுத்திட்டவர் பிடாரியூர் பெரிய தம்பிக் கவுண்டர் என்பவர். காடையூர்ப் பட்டக்காரர் செப்பேட்டில் சாட்சிக் கையொப்பம் இட்டவர் திருப்பூர் பொருளந்தை குல மணியகாரர் நல்லிக் கவுண்டர் என்பவர். குறுப்பு நாட்டில் பொருளந்தை குலப் பெருமக்களுக்கு இரண்டாவது காணி என்று குறுப்புநாட்டுக் காணிச் செப்பேட்டில் கூறப்படுகிறது.

## முழுக்காது பொருளந்தை

பொருளந்தை குலத்தாரில் ஒரு பிரிவினராகிய முழுக்காது குலத்தாரை ''முழுக்காது பொருளந்தை'' என்று நல்லூர்க் கல்வெட்டு, நாரணாபுரம் செப்பேடு போன்ற வரலாற்று ஆவணங்கள் கூறுகின்றன. முழுக்காது பொருளந்தை குலத்தைத் தனிக்குலமாகக் கருதும் குல ஆய்வாளர்கள் பல காரணங்களை இக்குலத்தோற்றம் பற்றிக் கூறுகின்றனர்.

டி.எம். காளியப்பா மதுரை சுல்தானின் ஆட்சியை ஏற்றுக் கொண்டு காதுகுத்துக் கல்யாணம் என்ற சீரைச் செய்தும் பிறை தொழும் பழக்கம் உடையவர்கள் ''முழுக்காதன்'' என்று பெயர் பெற்றதாகக் கூறுகிறார்.

தே.ப. சின்னசாமி முழுக்குகின்ற ஆவை வளர்ப்பவர்கள். ஆக்களை (பசு) முழுக்குச் செய்பவர்கள் முழுக்காது குலத்தார் ஆயினர் என்று கூறுகிறார். இரா. இரவிக்குமார் முழங்குகின்ற ஆவை வளர்ப்பவர்கள் முழுக்காது குலத்தார் ஆயினர். மதுரை சுல்தான் ஆட்சியை ஏற்றுக் கொண்டதால் காது குத்தும் சீரை நடத்துவதாகக் கூறுகிறார்.

கு.சேதுராமன் வழக்குகளில் முக தாட்சண்யம் பாராமல் கண்களை மூடிக் கொண்டு, காதுகளை விரிவாக்கிக் கூர்மைப் படுத்திக் கொண்டு தீர்ப்பளிப்பவர்கள் 'முழுக்காதர்கள்' எனப் பட்டனர் என்று கூறியுள்ளார்.

வேளாள புராண ஆசிரியர் வீராட்சிமங்கலம் கந்தசாமிக் கவிராயர் ஒரு சமயம் வெள்ளப்பெருக்கில் எல்லோரும் மூழ்கி விட்டனர். ஒரே குடும்பம் மட்டும் வெள்ளப் பெருக்கில் முழுகாமல் இருந்தனர். அவ்வாறு முழுகாது இருந்தவர்கள் முழுக்காது குலத்தார் ஆயினர் என்று கூறுகிறார்.

முழுக்காது குலத்தோற்றத்திற்கு அடிப்படை ஆதாரமான புலவர் கண்ணாடிப் பெருமாள் நமக்கு அளித்த ''வெள்ளையம்மாள் காவியம்'' என்னும் வரலாற்றுப் பாடல் முழுக்காதுப் பிரிவு ஏற்பட்ட காரணத்தை விளக்கமாகக் கூறுகிறது. (இக்காவியத்தை முதலில் அச்சாக்கி 30.06.1991 அன்று வெளியிட்ட பெருமை முழுக்காது குலத்தைச் சேர்ந்த தாராபுரம், புதுப்பாளையம், காமதேனு துரைசாமி அவர்களைச் சாரும்).

கீழ்க்கரைப் பூந்துறை நாட்டின் 32 ஊர்களில் கருமாபுரம் 14ஆவது ஊர். பொருளந்தை குலத்தாரின் முதல் காணியூர், கருமாபுரம் பகுதியில் பல ஆண்டுகள் மழை இல்லாத காரணத்தால் கால்நடை கட்கு மேய்ச்சல் நிலம் தேடி வந்த கருமாபுரம் பொருளந்தை குல இளைஞர் காங்கய நாட்டு நட்டூர் வனத்தில் நிறைய மேய்ச்சல் நிலம் இருப்பதைக் கண்டு நட்டூர் சேடகுலத் தலைவர் அனுமதிபெற்று மீண்டும் கருமாபுரம் சென்று கால்நடைகளை ஓட்டிக் கொண்டு வந்து நட்டூரில் மேய்த்தார்.

நட்டூர்ச் சேட குலத் தலைவர்க்கு நான்கு ஆண் மக்கள். ஒரு பெண் குழந்தை. பெண் குழந்தை வெள்ளை நிறமாகப் பிறந் திருந்தாள். இதனை நிறப்பாளை என்று வெள்ளையம்மாள் காவியம் கூறுகிறது. காங்கேய மன்றாடியார் வம்சாவளி வெள்ளை

நிறப்பெண் என்று கூறாமல் முடப்பெண் என்று கூறுகிறது. இன்றும் வெள்ளையம்மாள் என்றே வணங்கப்படுவதால் காவியம் கூறுவதே சரியானதாக இருக்கலாம்.

கருமாபுரக் காங்கேயன் வெள்ளையம்மாளை மணந்து கொண்டால் நட்டூரில் கால் காணி கொடுப்பதாகச் சேட குலத் தலைவர் கூறினார். தன் உறவினர் அனுமதி பெற்றுக் காங்கேயன் வெள்ளையம்மாளை மணம் செய்து கொண்டார். மாமனார் வீட்டிலேயே காங்கேயன் தங்கியிருந்ததால் தனியாகக் கால் காணி கேட்டுப் பெறவில்லை.

வெள்ளையம்மாள் பெற்றோர் மரணமடைந்த பின் வெள்ளை யம்மாள் சகோதரர்கள் கால் காணியும் கொடுக்காமலிருக்கச் சதி செய்தார்கள். ஒரு நாள் மாப்பிள்ளை காங்கேயனை அழைத்துக் கொண்டு நாடு சுற்றிப் பார்க்கச் செல்லும்போது காட்டாற்றில் காங்கேயனைத் தள்ளிக் கொன்று விட்டார்கள். வீடு திரும்பி வந்த சகோதரர்கள் ''காங்கேயன் வேலை உள்ளதெனக் கூறி முன்னரே வந்து விட்டான்' என்று கூறித் தேடுவதைப் போலப் பாவனை செய்தார்கள். நான்கு சகோதரர்களும் அவர்கள் மனைவிமார்கள் கூறியபடி வெள்ளையம்மாள் ஒழுக்கம் தவறிக் கர்ப்பம் அடைந்ததால் அவமானம் தாங்காமல் காங்கேயன் தற்கொலை செய்து கொண்டான் என்று கூறிக் காணிகேட்ட வெள்ளையம்மாளுக்கு அளிக்காமல், தந்தை கால்காணி கொடுப்பதாகக் கூறியது எங்களுக்குத் தெரியாது என்று கூறி ''நீ குழந்தைகளோடு உன் கணவன் ஊராகிய கருமாபுரம் போ'' என்று துரத்தி விட்டனர்.

காங்கயம் கோட்டை அகிலாண்டபுரம் அருகே வரும்போது ஒரு இஸ்லாமிய சர்தார் குதிரைப் படையோடு வந்து கொண்டிருந்தார். ஒரு பெண் மூன்று சிறுவர்களோடு பயந்து ஒதுங்கி நிற்பதைக் கண்ட சர்தார் நின்று விசாரித்த போது வெள்ளையம்மாள் எல்லா விபரமும் கூறினாள். அகிலாண்டபுரத்தில் வெள்ளையம்மாளும்,

குழந்தைகளும் பத்திரமாகத் தங்க வைக்கப்பட்டனர். தான் வரி வசூலித்து வந்தபின் விசாரிக்கிறேன் என்றார்.

அவ்வாறே வந்த சர்தார் வெள்ளையம்மாளையும், குழந்தைகளையும் அழைத்துக்கொண்டு வந்து விசாரணைக்கு ஏற்பாடு செய்தார். வெள்ளையம்மாள் சகோதரர்கள் எங்கள் தந்தை கால்காணி கொடுப்பதாகச் சொல்லவில்லை என்றனர். ஊர் மக்களும் அவ்வாறே கூறினர்.

சகோதரர்கள் சதிப்படி ஊரார் மூன்று சோதனைகளைக் கூறினர்.

1) பச்சை மண் குடத்தில் தண்ணீர் எடுக்கவேண்டும்.

2) அந்தத் தண்ணீரை மண் குதிரை உருவாரத்தின்மேல் தெளித்தால் குதிரை கனைக்க வேண்டும்.

3) பட்டுப்போன வறண்ட கழுமரத்தின் மீது நீர் தெளித்தால் கழுமரம் தழைக்க வேண்டும்.

இம்மூன்று சோதனைகளிலும் வெள்ளையம்மாள் தோற்றால் கழுமரத்தில் ஏற்றப்படுவாள்.

சர்தார் வேண்டாம்; இது உன்னைக் கொல்லச் சதி என்று கூறித் தடுத்தார். ஆனால் வெள்ளையம்மாள் அதை ஏற்காமல் அங்குள்ள கல்வாவிக் குளத்தில் முழுகி மதுரை மீனாட்சி சுந்தரேஸ்வரரை வணங்கி பச்சை மண் குடத்தில் தண்ணீர் எடுத்தாள். கரையவில்லை; மண் குதிரை மீது தெளித்தாள்; குதிரை கனைத்தது. பட்ட கழுமரத்தில் தெளித்தாள். அது தழைத்து விடர்த்தலை மரம் என்று தெரிந்தது. ஊரார் தெய்வீகப் பெண் வெள்ளையம்மாள் என வணங்கி மன்னிப்புக் கேட்டனர். சேட குலத்தார் முழுக்காணி கொடுப்பதாகக் கூறி ஊரை விட்டு வெளியேறி விட்டனர். சர்தாரும் கற்பரசி என்று வணங்கினார். கடவுளைப் போல வந்து காப்பாற்றிய தற்கு வெள்ளையம்மாள் நன்றி தெரிவித்துக் கொண்டாள். நன்றி மறவோம் என்று சர்தாரை அனுப்பி வைத்தாள்.

பின்னர் குலகுரு ஆலோசனைப்படி நன்றிக் கடன் ஆற்றத் திட்டம் வகுக்கப்பட்டது. முஸ்லிம் பெருமக்கள் காது குத்தும் வழக்கம் இல்லாதவர்கள். அதுபோல் நாம் நம் மூத்த குழந்தைக்குச் சில ஆண்டுகள் காதுகுத்தாமல் ''முஸ்லிம் போல வளர்த்து'' பின் முஸ்லிம்கள் சுன்னத் என்னும் சீரைச் செய்வது போல் காது குத்தும் சீரைத் திருமணம் போல் மங்கலச் சீராகச் செய்ய வேண்டும். இது இஸ்லாமியராக இருந்து இந்துவாக மாறுவதை நினைவூட்டும் சடங்காகச் செய்யக் குலகுரு திட்டம் வகுத்தார்.

''முஸ்லிம் சமுதாயம் முறையுடனே செய்வதுபோல்
தலைமுறை தத்துவமாய் தங்கள் குழந்தைகளை
முஸ்லிம் குழந்தைகள்போல் முறையுடனே வைத்திருந்து
இந்துக்க ளாக இதமுடனே மாற்றவென்று
சுன்னத் எனும்சீரைத் துலுக்கர்கள் செய்வதுபோல்
நாமும் குழந்தைகட்கு நாயகியே காதுகுத்தி
வாக்குறுதி கப்பாற்றும் வகையுடனே செய்திட''

குருக்கள் திட்டம் வகுத்தார். பரம்பரை பரம்பரையாக இவ்வாறு தவறாமல் நடத்தவேண்டும் என்று கூறப்பட்டது. குத்திவிட்டால் அது குறையுடைய காது. காது குத்தாமல் இருக்கும் காதே ''முழுக்காது'' என்று கூறப்படும். காதுகுத்திக் கலியாணச்சீர் நடக்கும் வரை ''முழுக்காதாக'' இருக்கும் காரணத்தால் வெள்ளை யம்மாள் மக்கள் நால்வர் வழிவந்த பொருளந்தை குலத்தார் ''முழுக்காது குலம்'' என்று அழைக்கப்படுகின்றனர். நான்கு மக்கள் பெயருக்கு ஏற்ப அவர்கள் வழிவந்த முழுக்காது பொருளந்தை குலத்தாரும் நான்கு பிரிவாக அழைக்கப்படுகின்றனர்.

சோதனைக்குப் பின்னர் தான் வெள்ளையம்மாளுக்கு நான்காவது குழந்தை பிறந்தது. குழந்தைகட்கு வெள்ளையம்மாள் காவியம் (1) சோமன் காங்கேயன் (2) தடியன் காங்கேயன் (3) வேண்டாங் காங்கேயன் (4) கழுவேறி காங்கேயன் என்று பெயர் கூறி அதற்குக் காரணமும் கூறுகிறது.

''சோமன் உடுத்திவந்த சுந்தரனைத் தான்பார்த்து
சோமன் காங்கேயன் என்று சொல்லிவைத்தார்''

''தடித்தனமாய் வந்தவனைத்
தடியன் காங்கேயனென்று சாற்றியே தான்அழைத்தார்''

''மூன்றாவது மகனை முறையுடனே கூட்டிவந்தார்
வேண்டாம்மா என்றுசொல்லி வீறிட்டுத் தான்அழுக
வேண்டாங் காங்கேயனென்று வையுமென்றாள்''

''கழுமரச் சத்தியத்தைக் கற்பரசி செய்கையிலே
கற்பமாய்த் தானிருந்த கடைசிமகன் ஆனவர்க்கு
கழுவேறி காங்கேயன்என்று காசினியோர் தானழைத்தார்''

என்று பெயர்கட்கு விளக்கத்தையும் வெள்ளையம்மாள் காவியம் கூறுகிறது.

ஆனால் காடையூர் காங்கேய மன்றாடியார் வமிசாவளி வெள்ளைப் பெண் வெள்ளையம்மாளை முடப்பெண் என்று கூறுவதுடன் கழுமரத்தின் கூர்மையான முனையில் கையறைய வேண்டும்; காயம் ஏற்படக் கூடாது என்று ஒரு சோதனையை மட்டும் கூறுகிறது.

வெள்ளையம்மாள் மக்களை

1) கழுவறஞ்ச காங்கேயன்
2) சோமன் காங்கேயன்
3) தடிக்காளி காங்கேயன்
4) சேனியன் காங்கேயன்

என்று வரிசைப்படுத்துகிறது.

டி.எம். காளியப்பா மக்களை (1) கழுவில் ஏற்றும் காங்கேயன் (2) சோமன் காங்கேயன் (3) சனியன் காங்கேயன், (4) தடியன் காங்கேயன் என்று வரிசைப்படுத்திப் பெயர்க் காரணமும் கூறுகின்றார்.

நல். நடராசன் சோதனைகளில் மூன்றை வேறுபடுத்திக் கூறுகிறார்.

> ''இரண்டு ஆண்டுகள் ஏர்க்காலில் உழவுக்குப் பயன்படுத்தப்பட்ட வேம்புத் தடியை நிலத்தில் நட்டுத் தண்ணீர் ஊற்றாமல் தளிர்க்கச் செய்ய வேண்டும்.
>
> ''தனக்கு எதிரே மகனை நிறுத்தி இருவருக்கும் இடையில் திரையைக் கட்டி தன் கணவனுக்கே அவன் பிறந்தான் என்பதை நிரூபிக்க தாயின் மார்பகத்தில் சுரந்த பால் மகன் மீது பீறிட்டு அடிக்கவேண்டும்''
>
> ''அன்று செய்த பச்சை மண்பாண்டத்தில் நீர் கொண்டு வந்து நாட்டார் சபை முன் வைக்கவேண்டும்''

இது வம்சாவளியிலும், காவியத்திலும் காணப்படாதது.

முழுக்காது குலத்தாரின் காதுகுத்திக் கல்யாணச்சீர் முன் ஏழு நாட்கள் நடக்குமாம். இப்போதுகோயிலில்ஒரே நாளில் நடை பெறுகிறது. இன்றும் தொடர்ந்து சீர் செய்து வருகின்றனர்.

## ஆறைநாட்டில் முழுக்காது குலத்தார்

பரமநயினார் மன்றாடியார் மக்கள் இராக்கிஷ மன்றாடியார், நயினா மன்றாடியார் இருவருக்கும் வீரசோழமகாராசா ஆறை நாட்டை அளித்து ஆட்சிபுரியுமாறு கூறினார். இவர்கள் பால வேளாளர்கள். பால வேளாளர் பூர்வீகமான பாலை நதியிலும், திருத்தவத்துறையிலும் உள்ள பால வேளாளர்களை அழைத்து வருமாறு சோழ ராசாவும், இராக்கிஷ மன்றாடியாரும் நயினா மன்றாடியரிடம் கூறினர்.

அவ்வாறு நயினா மன்றாடியார் சோழநாடு சென்று தங்கள் மக்களை அழைத்துக்கொண்டு காங்கய நாட்டு எல்லைக்கு வரும்போது தென்திசை வேளாளரில் முழுக்காது குலக் காளியண்ண கவுண்டர் தங்கள் எல்லையை மிதிக்கக் கூடாது என்று கூறினார்.

நயினா மன்றாடியார் முழுக்காது குலக் காளியண்ணன் ஆட்களை வென்று காணியண்ண கவுண்டரை கைது செய்து குடும்பத்தோடு அழைத்து வந்து தன் அண்ணன் இராக்கிஷ மன்றாடியார் முன்னிலை யில் நிறுத்தினார்.

இராக்கிஷ மன்றாடியார் முழுக்காது குலக் காளியண்ண கவுண்டரை செலவுக்குப் பணம் கொடுத்துத் தங்க வைத்தார். முழுக்காது காளியண்ண கவுண்டர் கவசை கோயில்பாளையத்தில் உள்ள கவைய காளியம்மனைக் குல தெய்வமாக ஏற்று மக்களுக் கெல்லாம் அம்மன் பெயர் வைத்து வாழ்ந்து வந்தார்.

கவைய நாட்டுக் காணியாளராகிய புல்ல வேட்டுவரும், பூலுவ வேட்டுவரும் ஆகிய 18 பேரும் அவர்களைச் சேர்ந்தவர் களும் அனைவரும் சேர்ந்து ஒரு ராத்திரியில் முழுக்காது காளியண்ண கவுண்டர் தலையை வெட்டிக் கவைய காளிக்குப் பலி கொடுத்து விட்டார்கள்.

இதைக் கேள்விப்பட்ட பாலவேளாளர் தலைவர் இராக்கிஷ மன்றாடியார் வெள்ளமடையிலிருந்த புல்ல வேட்டுவர்கள் ஒன்பது பேரையும், காளிபாளையத்திலிருந்த பூலுவ வேட்டுவர்கள் ஒன்பது பேரையும் கொன்றுவிட்டு அவர்கள் குடியிருப்புக்களையெல்லாம் முழுக்காது காளியண்ண கவுண்டர் மக்களுக்கு அளித்துக் குடியிருக்குமாறு கூறி ஆதரித்தார்.

## 78. பொன்னர் குலம்

குல வரலாறு எழுதிய அனைவரும் பொன்னர் குலத்தைப் பொன்னோடு தொடர்புபடுத்திக் கூறுகின்றனர்.

கருநாடக மாநிலம் கோலார்ப் பகுதியை உள்ளடக்கிய நாடு 'பொன்குன்ற நாடு' எனப்பட்டது. கங்கர்கள் ஆட்சியின் போது பொன்குன்ற நாட்டுப் பகுதியிலிருந்து கொங்கு நாட்டில் குடியேறிய வேளாளர்கள் தங்கள் நாட்டின் நினைவாகப் 'பொன்னர் குலம்' என்று தங்களைக் குறித்துக் கொண்டதாக நல். நடராசன் கூறுகிறார்.

பொன் நகைகள் அணிந்தவனைக் குலமுதல்வனாகக் கொண்ட மக்கள் பொன்னர் குலத்தார் எனப்பட்டனர் என்று மோகனசுந்தரம் கூறுகிறார். தே.ப. சின்னசாமி ''பொன்குன்ற நாட்டுக்கும் பொன்ன குல வேளாளர்கட்கும் தொடர்பு இல்லை. பொன்அமராவதி, பொன்பரப்பி, பொன்களத்தூர், போன்னேரி, பொன்னம்மாபுதூர் எல்லாம் கொங்கு நாட்டு வேளாளர் காணியூர்கள் தாம். சின்னப்பொன்னான், பெரியபொன்னான், பொன்னுசாமி, பொன்னம்மாள், பொன்னாச்சியம்மன் என்ற பெயர்களை அறியுங்கள். பொன்னர் குலத்தினர் கொங்கு நாட்டு வேளாளர்களே. நெல்லைப் பொன்னாகக் கருதி விளைவிப்பவர்கள் பொன்னங் குலத்தினர்'' என்று கூறுகிறார். பொன்னின் தனிச்சிறப்புக் காரணமாகப் பொன்னர் குலப் பெயர் ஏற்பட்டதாக டி.எம். காளியப்பா கூறுகிறார். பொன் குன்ற நாட்டுத் தொடர்பை கு. சேதுராமனும் கூறுகிறார். பொன் விளைந்த நாட்டிலிருந்து பொன் அணிகலன்களுடன் வந்ததால் பொன்னர்குலம் எனப் பெயர் ஏற்பட்டது என்றும் கூறுகிறார்.

செங்கம் பகுதி நடுகற்களில் ''பொன்னந்தியார்'' ''பொன் மாந்தனார்'' என்ற பெயர்கள் குறிப்பிடப்படுகின்றன. இவர்கள் பொன்னர் குல வேளாளர்களே என்கிறார் நல். நடராசன்.

சோழநாட்டின் ஒரு பகுதியான ராஜகம்பீர வளநாட்டில் குளித்தலைக்கு அருகில் 'கடம்ப நகர்' அல்லது கடம்பாபுரி என்று

அழைக்கப்பட்ட ஊரைத் தலைநகராகக் கொண்டு பொன்னர் குலத் தலைவராகிய பெரியணன் என்பவர் ஆட்சிபுரிந்தார். சோழ மன்னர்கட்கு உட்பட்டு அவர்கள் அதிகாரம் செய்தனர்.

கொங்கு மண்டலத்தில் பொங்கலூர்ப் பகுதியில் வேட்டுவ சமூகத்தார் சேரன் ஆட்சிக்காலத்தில் தொல்லை கொடுத்து வந்தனர். சேர மன்னனால் அவர்களை அடக்க இயலவில்லை. சேரன் தன் உறவினரான சோழமன்னனின் உதவியை நாடினார். சோழமன்னன் ஓதாள குலப் பெரிய பெருமாள் என்பவரைச் சேர மன்னர்க்கு உதவியாகப் போரிட்டுப் பொங்கலூர் நாட்டு வேட்டுவர்களை அடக்குமாறு வேண்டிக் கொண்டார்.

ஓதாள குலப் பெரிய பெருமாள் தன் மைத்துனன் முறையுடைய கடம்ப நகர் பொன்ன குலப் பெரியணனைத் துணைக்கு வருமாறு கேட்டுக் கொண்டார். அவ்வாறே பெரியணன் தன் படையோடு பொங்கலூர் நாட்டுக்கு வந்து கண்டி நாயகி என்னும் பொங்கலூர் அம்மனை வணங்கிப் போர் செய்தார். பொன்னர்குலப் பெரியணன் வெற்றியை,

''சொல்லிடப் பகைவர் துடிது டித்திட
கண்டி நாயகியைத் தண்டமே செய்து
கண்டித மாக அண்டர்கள் நெருங்க
மாவலர் படையை மாட்டியே பெரியண
காவலன் பொங்கலூர்க்கு அரசுவீற் றிருந்தான்''

என்று ஓதாளர் அலகுமலைக் குறவஞ்சி கூறுகிறது.

போர் வெற்றியின் பின்னர் வெற்றி பெற்றவர்கட்குச் சேரன், சோழன் ஆகியோர் பாராட்டிப் பட்டங்கள் அளித்தனர். பொங்கலூர்ப் பொன்னர்குலப் பெரியணனுக்கு ''வாலைமன்றாடி'' என்று பட்டம் அளித்தனர்.

''பொங்கலூர் போற்றும் பொன்னர்தம் குலம்வாழ்
பெரியண னுக்குப் பேர்முன்ன தாக
மருவிலா வாலைமன் றாடியாம் பட்டம்''

என்பது ஓதாளர் அலகுமலைக் குறவஞ்சித் தொடர்களாகும். அருகில் உள்ள மாதப்பூரிலும் காணி பெற்றனர்.

பொங்கலூரில் ஆட்சி உரிமை பெற்று ஆட்சி நடத்தும் போது முருகன் தலமான அலகுமலைக் கோயிலுக்குக் கொடை பல தந்து பொன்னகுலத் தலைவர் சிறப்புப் பெற்றனர்.

''பொங்கலூர் மாதை புரிவளர் தலைவர்
மருவிலா வாலைமன் றாடியாம் பட்டம்
பெற்றிடும் பொன்னர் பெருமைசேர் அலகு
நற்றிரு மலைவளர் நாரணன் மருகற்கு
பொன்ஆல வட்டமும் பூச்சக்ரக் குடைகளும்
நன்மையால் விளங்க நலம்பல புரிந்தனர்''

என்று அவர்களின் அலகுமலைக் கொடையைக் குறவஞ்சி கூறுகிறது

பொங்கலூர் கண்டியம்மனை வணங்கிச் சென்ற காரணத்தால் போரில் வெற்றி பெற்றதாகக் கருதிய பொன்ன குலத்தார் அந்தக் கண்டியம்மனைக் குல தெய்வமாக ஏற்று வணங்கினர். இன்று நீலகண்டியம்மன் என்று அம்மன் பெயர் வழங்குகிறது.

மாதப்பூரில் வாழ்ந்த பொன்னர் குலத்தார் குடிப் பெருக்கம் ஏற்படவே புது ஊர்கள் அமைத்துக் குடியேற விரும்பினர். ஒரு நாள் மாதப்பூர் பொன்ன குலத்தினர் வேட்டைக்குச் சென்றனர். 'நாயின்றி வேட்டை யாடாதே'' என்பது கொங்கு நாட்டு ''நீதி ஒழுக்கம்'' என்ற நூல் கூறியபடி நாய்களுடன் வேட்டைக்குச் சென்றனர். சென்று கொண்டிருக்கும்போது வேட்டை நாயை ஒரு முயல் எதிர்த்துத் துரத்தியது. நாய் முயலைக் கண்டு பயந்து ஓடியது. வீரம் மிக்க இந்த இடமே தாங்கள் ஊர் அமைக்கத் தகுதியான இடம் என்று கண்டு அங்கு ஊர் ஏற்படுத்திப்

'பொன்னர் புரம்' என்று பெயரிட்டனர். செல்வச் செழிப்புடன் சீரும் சிறப்புமிக்கு வாழ்ந்த - வாழும் அவர்களைக் கொங்கு மக்கள் 'பொன்னாபுரத்து அரண்மனையார்'' என்றே அழைத்து வருகின்றனர்.

கொங்கு நாட்டில் குடியேறிய கொங்கு வேளாளர் குலங்களைச் சின்னத்தம்பி நாவலரின் ஓதாளர் அலகுமலைக் குறவஞ்சி தொகுத்துக் கூறுகிறது. நூற்று நாற்பத்திரண்டு குலங்களைக் கூறும் அந்நூலில் முதல் குலமாகக் குறிக்கப்படும். சிறப்பைப் பொன்னர் குலம் பெற்றுள்ளது.

தாராபுரம் வட்டத்தில் ஆலாம்பாளையம், போகம்பட்டி, சின்னக்காம்பாளையம், நெய்க்காரப்பட்டி, பொன்னாக்காணி போன்ற ஊர்களில் வாழும் பொன்ன குலத்தார் காவிலிபாளையம் ஊஞ்ச வலசில் எழுந்தருளியுள்ள பொன்னாச்சியம்மனைக் குல தெய்வமாக வணங்கிவருகின்றனர்.

கம்பர் இயற்றியதாகக் கருதப்படும் கொங்கரின் முதல் காணிப்பாடலில் பொன்னர் குலம் இடம் பெற்றுள்ளது.

''சேரன் பாண்டி யன்பனகன்
செங்கோல் பெரியன் செம்பவளன்
தூரன் ஆந்தை காடைகுலம்
துலங்கு முடியன் ஓதாளன்
பாரம் சுமந்த பண்ணைகுலம்
படியளந்து உண்ணும் பயிரகுலம்
கீரன் வேந்தன் கோவேந்திரன்
கூறை பொன்னர் கொங்கினரே''

என்ற முதல் காணிப்பாடல் கொங்கு காணிப்பட்டயத்தில் காணப் படுகிறது.

சோழர் காலத்தில் கொங்கு வேளாளர்கட்கு நியமிக்கப்பட்ட புலவர் வழக்கம் இடைக்காலத்தில் நின்று விட்டது. விசய நகர மன்னன் பிரபுடதேவ மகாராயர் காலத்தில் வேளாளர்கள் வேண்டிக்

கொள்ள 24 நாடுகட்கும் காணிப் புலவர்களும் அஞ்சு படிக்காரரும் நியமிக்கப்பட்டனர். அதற்காக எழுதப்பட்ட பட்டயத்தில் பல கொங்கு வேளாண் தலைவர்கள் கையெழுத்திட்டனர். அவர்களில் ''பொங்கலூரு நாடு பொன்ன குலத்தில் முத்துநல்லாக் கவுண்டர்'' என்பார் ஒருவர்.

பொன்ன குலத்திற்கு ஒரு காணிப்பாடல் கிடைத்துள்ளது. அலகுமலை, பொங்கலூர், அங்கித்தொழு, கருதாணி, ஊதியூர், பட்டிலூர் ஆகியவை காணி ஊர்கள் என அக்காணிப்பாடல் கூறுகிறது.

''அத்திமுக வனையீன்ற கயிலாச நாதரும்
அலகுமலை வடிவேலரும்
அழகுதென் பொங்கலூர் உமைகண்டி யம்மனும்
அங்கிநகர் கருதாணியூர்

பத்தர்புகழ் பெரியபெரு மாள்மங்கை பலதேவர்
பாருலகில் அனைவரும்
புத்ரனைய பணிக்கடன் லட்சுமக் குமாரமால்
புனிதனே பூவுலகில்

வித்வசனர் கொண்டாடும் பொங்கலூர் நாடனே
வெற்பூதி யூர்பட்டிலூர்
விதரணக் கெடிமன்னர் கண்டஉத் தண்டனே
வீரவிக்ர மாதித்தனே

புத்தரவின் மணிதந்த அவிநாசி பூபனே
புண்ணிய தருணகுமாரா
பொன்னகுல மேருவே பெரியண மகீபனே
பூதலப் பிரக்யாதியே''

என்பது காணியூர்களைத் தொகுத்துக் கூறும் தனிப்பாடலாகும்.

ஒரு முறை சிவாலயத்தில் தேவாதிதேவர்களும் எழுந்தருளி யிருக்க சேர சோழ பாண்டியர் மூவேந்தரும் கூடியிருந்தனர். ஆலயச் சிவலிங்கத்திற்கு அலங்காரம் செய்து பொன்முடி சூட்டப் பொன் முடியும் தயாராக இருந்தது. அனைவரும் பொன்ன குலாதிபனை அழைத்துச் சிவனுக்குப் பொன்முடி சூட்ட நீயே தகுதியானவன் என்று கூறினர். பொன்ன குலத்தாரும் பொன்முடி சூட்டிப் புகழ்பெற்றார். இந்த நிகழ்ச்சியை வாலசுந்தரக் கவிஞரின் கொங்கு மண்டல சதகம் புகழ்ந்து கூறுகிறது.

> ‘தென்னவர் தேவரும் மூவர் இராசர் சிவன்சபையில்
> அன்னவன் நீயென்று அழைத்துவந் தார்செய் அழல்கணற்குப்
> பொன்ன குலாதிபன் பொன்னையும் வாரிச்செம்
> பொன்முடிப்பான்
> மன்னுயிர் காக்க முடிசூட்டு வோன்கொங்கு மண்டலமே’’

என்பது சதகப் பாடலாகும்.

## 79. மணியன் குலம்

இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட கொங்கு நாட்டுப் பழந்தமிழ்க் கல்வெட்டில் 'மணியன்' என்ற பெயர் குறிக்கப் பட்டுள்ளது. மணியன்பாளையம் என்ற ஊரும் உள்ளது. மணியனூர் (மணியன் + ஊர்) என்றும் ஓர் ஊர் உள்ளது. பத்தாம் நூற்றாண்டுக் கல்வெட்டு ஒன்றில் 'காமிண்டன் மணியன் மணியனார்' என்ற தொடர் காணப்படுகிறது. எனவே 'மணியன்' என்ற குல முதல்வரைக் கொண்டு மணியன் குலப் பெயர் ஏற்பட்டிருக்கலாம். மணியன் குலம் பேச்சு வழக்கில் 'மணிய குலம்' என்றும் அழைக்கப்பெறும்.

டி.எம்.காளியப்பா 'மணி' என்பது நெல் முதலிய தானிய மணிகளைக் குறிக்கும். மணிகளை விளைவித்தவர்கள் மணியன் குலத்தார் எனப் பெயர் பெற்றனர் என்று கூறுகிறார். அவரே 'மணியம்' என்பது ஊர் ஆட்சி செய்யும் உரிமையையும், மணியகாரர் என்பது அவ்வாறு ஆட்சி செய்பவர்களையும் குறிக்கும். மணியம் செய்தவர்கள் மணியன் குலத்தார் என்று பெயர் பெற்றிருக்கலாம் என்றும் கூறியுள்ளார். இரா. இரவிக்குமார் ''மணியங்குறிச்சி'' காணியாளர்கள் ஆனதால் 'மணியன்குலம்' என்று பெயர் பெற்றதாகக் கூறுகிறார். நல். நடராசன் தானிய மணிகளை உற்பத்தி செய்வதில் வல்லவர்கள் மணியன் குலத்தார் என்று கூறுகிறார். கு.சேதுராமன் 'மணியம்' என்பது அதிகாரப் பெயர். அதிகாரம் செய்தவர்கள் மணியன் குலத்தார் எனப்பட்டனர் என்று கூறுகின்றார்.

கோடந்தூர் மணியன் குலத்தினர் வவ்வாலைக் குலக்குறியாகக் கொண்டுள்ளனர். கோடந்தூர் இராசாக்கோயிலில் வவ்வாலை அழைக்கும் சடங்கு இன்றும் நடைபெறுகிறது. சில ஊர் மணியன் குலத்தார் மணிப்புறாவைக் குலக் குறியாகக் கொண்டுள்ளனர்.

டி.எம்.காளியப்பாவும், கு.சேதுராமனும் 'மணியன்' என்பதற்கு 'வவ்வால்' என்று பொருள் கூறி வவ்வாலை அடையாளச் சின்னமாக

உடையவர்கள் மணியன் குலத்தார் என்று கூறுகின்றனர். மற்றொருவர் பச்சை, நீலம் போன்ற 'மணிக்கற்களை' அணிகலன்களாக அணிவதில் பெரிதும் விருப்பம் உடையவர்கள் 'மணியன்குலத்தார்' என்று கூறுகின்றார். 'மணி' என்பதற்குச் சிறப்பு என்ற பொருளும் உண்டு. 'மணியான பையன்' 'மணியாக வேலை செய்கிறான்' என்ற இடங்களில் சிறப்பு என்னும் பொருளில் மணி என்ற சொல் வருகிறது. எனவே சிறப்புடையவர்கள் மணியன் குலத்தார் என்றும் கூறுகின் றனர்.

தமிழ்ப் பேரகராதி 'மணியம்' என்பதற்கு கிராமம், கோயில், மடம் இவைகளை நிர்வாகம் செய்து மேற்பார்வையிடும் தொழில் என்று கூறுகிறது. தொல்காப்பிய உரையிலேயே 'மணியகாரன்' என்ற சொல் வருகிறது. கொங்குச் சமுதாயத்தில் 'மணியகாரர்' உயர்ந்த நிலையில் உள்ளவராகவும், மணியம் என்பது பொறுப்பான உயர்ந்த தொழில் என்றும் கருதப்பட்டது.

கொங்கு நாட்டில் தான் பல வண்ண மணிக்கற்கள் விளை கின்றன. உழும் போது கலப்பைக் கொழுவில் மணிக்கற்கள் வெளிப் படும் என்று பதிற்றுப்பத்துக் கூறுகிறது.

''நாஞ்சில் ஆடிய கொழுவழி மருங்கில்
இலங்கு கதிர்த் திருமணி பெறூஉம்''

என்று பதிற்றுப்பத்துக் கூறுகிறது. மணிக்கற்களைக் கொண்டு மணிகள் என்னும் அணிகலன் செய்வோரும் மணியன் என்று அழைக்கப்பட்டிருக்கலாம்.

**காணியூர்கள்**

மணியன் குலக் காணிப் பாடலில் மோகனூர், ஆரியூர், மணியனூர், பாலமேடு, முத்தூர், திங்களூர், மருதுறை, கிடாரம், நிரவியூர், மணப்பள்ளி, அயிலூர், புன்னம், அலகுமலை, இறையனூர், கூடலூர், பெருச்சாணி, மானூர், காரையூர், வாணியம்பாடி, விசயமங்கலம், ஏழூர், காங்கயம், எண்ணமங்கலம், மணத்திடல்,

கடத்தூர், வடிவுடையமங்கலம், வேம்பத்தி, ஆத்தூர், அத்திப் பாளையம், சென்னிமலை, குடந்தை, வயிரூசி, துக்காச்சி ஆகிய ஊர்கள் காணியூர்களாகக் குறிக்கப்பட்டுள்ளன.

''சென்னெல்செறி முகவனூர் ஆரியூர் மணியனூர்
சீர்பாலை முத்தூருடன்
திங்களூர் மருதுறை கிடாரமது நிரவியூர்
திகழ்மணப் பள்ளிஅயிலூர்

புன்னநகர் அலகுமலை இறையனூர் கூடலூர்
புகழ்பெருச் சாணிமானூர்
பேரான காரையூர் வாணியம் பாடியும்
பெருவிசய மங்கைஏழூர்

மன்னர்வளர் காங்கயம் எண்ணமங் கலமதும்
மணத்திடல் கடத்தூருடன்
வடிவுடைய மங்கையும் வேம்பநகர் ஆத்தூர்
வடிவுடைய விதரிதனையும்

சென்னிகிரி குடந்தைவயி ரூசியும் துர்க்கைநகர்
செம்மைபெறு மணியகுலனே
செம்பபூ பதிஉதவும் பெரியண மகீபனே
செகமண்ட லாதிபதியே''

என்பது அவ்வூர்களைக் குறிக்கும் காணிப்பாடலாகும்.

## முத்தூர்க் காணி

முத்தூரின் முதல் காணியாளர் முத்தன் குலத்தார். முத்தன் குலத்தார் பெண்ணை மோகனூர் மணியன் குலத்து இளைஞன் திருமணம் செய்து கொண்ட காரணத்தால் முத்தன் குலத்தார் மணியன் குலத்தாருக்கு முதல் உரிமை அளித்தனர் என்பது தலச் செய்தி. முத்தூரில் மணியன் குலத்தார் காணி குறிக்கப்படு கிறது.

''முத்தன் மணியன் முதற்சேரன் வெள்ளம்பர்
மெத்துபொரு ளந்தையுடன் மேலான - சித்திபெறும்
காவலியர் நன்முதலிக் காமருடன் ஏழ்முதன்மை
தாவுபுகழ் 'முத்தூர்த் தலம்''

என்பது முத்தூர்க் காணிப்பாடலாகும். காங்கய நாட்டுப் பொதுக் காணிப் பாடலிலும் மணிய குலத்தாரின் முத்தூர்க்காணி சுட்டிக் கூறப்பட்டுள்ளது.

'அழகான முத்தூரில் வளர்கின்ற முத்தனை
அய்யமிகு மணியகுலனை
அகளங்க சேரனை தனபதிவெள் ளம்பனை
அனதான பொருளந்தையை'

என்பது அப்பாடல் பகுதியாகும்.

கொங்கு வேளாளரில் முத்தன், மணியன், சேரன், வெள்ளம்பர், பொருளந்தை குலத்தாருடன் காவலியர் என்னும் வேட்டுவர்களும், செங்குந்த முதலியார்களும் முத்தூர்க் காணியாளர்கள் ஆவர். ''முத்தூர்த் தல மாண்பு'' என்னும் நூலில் எம்.வி.குப்புசாமிக் கவுண்டர் முத்தூரை முத்தன் குலத்தார் உருவாக்கியதாகவும், முத்தன் குலத்தார் பெண் கொடுத்து மணியன் குலத்து மாப்பிள்ளைக்கு முதல் உரிமை கொடுத்ததாகவும் வரலாற்றை மிக விரிவாக எழுதி யுள்ளார்.

திருப்பூர் க.பழனிசாமிப்புலவர் 'முத்தன் கூட்டத்தாரை வென்று மணியன் குலத்தார் முத்தூரைத் தமதாக்கினர்' என்று தன் 'கொங்குச் செல்வி' என்னும் நூலில் எழுதியுள்ளார் (1949). இதைப் பார்த்த டி.எம். காளியப்பா 'மணிய குலத்தார் போர்புரிந்து முத்தூரைக் கைப்பற்றியதாக நினைக்கத்தக்க ஆதாரங்கள் உள்ளன'' என்று தன் 'கொங்கு வேளாளர் வரலாறு' என்னும் நூலில் எழுதியுள்ளார். நல். நடராசன் 'முத்தர்களின் முத்தூர்க் காணியை மணியன் குலத்தினர் கைப்பற்றிக் கொண்டதால் முத்தன் குலத்தார் கொங்கின் பிற

பகுதிகளுக்குக் குடிபெயர வேண்டிய தாயிற்று'' என எழுதியுள்ளார். இம்மூவர் கருத்துக்கும் எந்தவிதமான ஆதாரமும் இல்லை.

கொங்கு நாடெங்கும் குடியமர்ந்து காணிகொண்ட குலத்தாரை வென்று ஊரை விட்டு விரட்டி விட்டு வேறு குலத்தார் குடியேறிக் காணி பெற்றதாக எந்தவொரு வரலாறும் இல்லை. பழங்குடிகள் புதியதாக வந்த வேளாண் பெருமக்களை ''சேர வாரும் செகத்தீரே'' என்று அன்புடன் அழைத்து இணைத்துக் கொண்டதாகவே கொங்குச் சமுதாய வரலாறு உள்ளது.

முத்தூரை விட்டு முத்தன் குலத்தார் வெளியேறவில்லை. இன்றும் நிலையாக வாழ்ந்து ஆலயத் திருப்பணியிலும், வழிபாடு, திருவிழாக்களிலும் கலந்து சிறப்பிக்கின்றனர். தென்னிலைப் போரில் முத்தன் குலத்தாரும் மணியன் குலத்தாரும் இணைந்து போர் செய்துள்ளனர்.

முன்பு கூறிய முத்தூர் ஏழு முதன்மைக் காணியாளருடன், பின் பூவலிய வேட்டுவர், மணிய வேட்டுவர், வெங்காஞ்சி வேட்டுவர், கொங்குச் செட்டியார், கொங்கு நாடார் ஆகிய ஐவரும் சேர்ந்து முத்தூர்க் காணியாளர் பன்னிருவர் ஆயினர்.

மடவளாகம் இலட்சுமண பாரதியார் (1765-1857) பாடிய சிவமலைக் குறவஞ்சியில் முத்தூரில் வாழ்ந்த மணியன்குல இராமசாமிக் கவுண்டர் நில உடைமையாளராகக் குறிக்கப்பட்டுள்ளார்.

நத்தக் காடையூரின் பழம்பெயர் காரையூர் என்பதாகும். அங்கு முதலில் மணியன் குலத்தார் மட்டுமே காணியாளராக இருந்தனர். தென்னிலை வெங்கச்சி வேட்டுவர் தலைவன் கொங்குராயனை வென்று, கொங்குச் சமுதாயத்தைக் காப்பாற்றிய காரணத்தால் காரையூர் முதன்மை பயிரன் குலத்தார்க்கு அளிக்கப்பட்டது. காரையூர்க் காணிப்பாடல்,

''அரசர்புகழ் தென்காரையூர்
அதனில்வரும் மணியனைக்
கியாதியுள்ள பயிரனை''

என்று குறிக்கிறது.

டி.எம்.காளியப்பா, நல். நடராசன் ஆகியோர், போரில் வல்லமையுடைய மணியன்குலத்தார் பயிரன் குலத்தாரின் பழைய கோட்டையைக் கைப்பற்றினர் என்றும், மைசூர் மன்னர் உதவியால் பழையகோட்டையைப் பயிரன் குலத்தார் மீட்டனர் என்றும் கூறுவதற்கு எந்த ஆதாரமும் இல்லை.

டி.எம்.காளியப்பா ''காரையூர் முதன்மைக் காணியாளர்களான மணியன்குலத்தாரைப் பயிரன் குலத்தார் வென்று துரத்திவிட்டு, காரையூரில் செயங்கொண்ட நாதர் கோயிலைக் கட்டி அதில் பயிரன்குலத்தினர் தங்கள் பெருமையைக் கல்வெட்டில் பொறித்துக் கொண்டனர்'' என்று எழுதியுள்ளார். செயங்கொண்ட நாதர் கோயிலில் பயிரன் குலக் கல்வெட்டுடன் மணிய குலத்தார் கல்வெட்டும் உள்ளது.

''ஸ்வஸ்திஸ்ரீமன் மகாமண்டலீசுவரன் ஸ்ரீவீர மல்லிகார்ச்சுன ராயர்க்குச் செல்லா நின்ற பிரபவ சம்வத்சரத்து வைகாசி மாதம் 23ம் தேதி காங்கய நாட்டுக் காரையூரில் வெள்ளாளன் மணியரில் பெற்றான் அல்லாளப் பெருமாள் இட்ட தூண்''

என்பது காரையூர் செயங்கொண்ட நாதர் கோயில் கல்வெட்டாகும். பயிரன், மணியன் இரு குலத்தாரும் இணைந்தே சிவன்கோயில் கட்டியுள்ளனர். பயிரன் குல அழகன் சர்க்கரையார்க்கு நஞ்சராயன் அளித்த காணியே பயிரன் குலத்தாரின் காரையூர்க் காணியாகும். பயிரன் குலத்தார் மணியன் குலத்தாரைப் போரிட்டு வென்றதாகவோ, மணியன் குலத்தார் பழையகோட்டையைப் போரிட்டு வென்று கைப்பற்றியதாகவோ கூற எந்தவொரு ஆதாரமும் இல்லை.

காரையூர்க் காணிச் செப்பேட்டில் பயிரன் குலத்தாரின் காணி உரிமையை ஒப்புக்கொண்டு ''காரையூர் மணிய குல ராவுத்தண கவுண்டர் மகன் வாரணவாசிக் கவுண்டர்'' என்பவர் கையெழுத் திட்டுள்ளார்

முத்தூருக்கான போராட்டத்தில் சிவன்சமுத்திரம் சிறையில் மணிய குலம் பெரிய நயினாக் கவுண்டர் மகன் குமரியப்பன் பன்னிரண்டு ஆண்டுகள் சிறையில் இருந்துள்ளார். தென்னிலைப் போரில் மணியகுலம் பெரிய நயினாக் கவுண்டரின் மற்றொரு மகன் சிவச்செல்லப்பன் வீரமரணம் அடைந்தார். தென்னிலைப் போருக்கு முன்பு வேட்டுவக் கொங்குராயனோடு தொடர்ந்து பின்சென்று போரிட்டதில் காரையூர் மணியகுல ராவுத்தக் கவுண்டர் மகன் வாரணவாசிக் கவுண்டர் மொஞ்சனூர்க் குளத்தருகே வீரமரணம் எய்தினார். இச்செய்திகளை முத்தூர்ப் பட்டயமும், காரையூர்ச் செப்பேடும் கூறுகின்றன.

முத்தூர்ச் சிவாலயம் சோழீசுவரம் என்று இன்று அழைக்கப் பட்டாலும் அக்கோயில் பெயர் 'குலோத்துங்க சோழீசுவரம்' என்பதாகும். அக்கோயில் திருப்பணியில் மணியன் குலத்தார் பங்கு பெற்றுள்ளனர்.

> ''ஸ்வஸ்திஸ்ரீ முத்தூரிலிருக்கும் வெள்ளாளன் மணியரில் பன்றன் மாராயனான தென்னவன் மூவேந்த வேளான் இட்ட கால்''

என்பது ஒரு முத்தூர்ச் சிவாலயக் கல்வெட்டாகும்.

காணியூர்கள் காரணமாகக் கரூர் மணியன், கோடந்துறை மணியன், மோகனூர் மணியன், துக்காச்சி மணியன், முத்தூர் மணியன், இடையாற்று மணியன் என்று கூறப்பட்டாலும் அவற்றுள் எந்தவொரு வேறுபாடும் இல்லை. ஒரே குலம் ஆகும்.

கொங்கு காணியான பட்டயத்தில் 'மணியகுல இராம கவுண்டர், முத்துக் கவுண்டர்' என்றும், திருமுருகன்பூண்டிக் கிரைய

சாசனத்தில் 'முத்தூரு மணிய குலத்தில் பொன் மேழித் தலைவனாகிய பெரிய செல்லியண கவுண்டர்' ஆகியோரும் குறிக்கப்படுகின்றனர்.

துக்காச்சி மணிய குலத்தார் ஆதி சடையப்பகவுண்டர் நொய்யல் ஆற்று வெள்ளப் பெருக்கின் காரணமாக அண்ட நாட்டுக் கோட்டூரில் குடியேறிப் பல்கிப் பெருகிய வரலாற்றை அவினாசி இரமேசுக்குமரன் விரிவான வரலாறாக எழுதச் செய்து நூலாக வெளியிட்டுள்ளார். (ஆசிரியர் புலவர் செ. இராசு), ஊத்துப்பட்டி வட்டாரத்தில் நெட்டை மணியன் குலமும், வண்டாரிபாளையம் பகுதியில் குட்டை மணியன் குலமும் வழக்கில் உள்ளன என்பர்.

**கல்வெட்டுகள்**

மணியன் குலம் தொடர்பான கல்வெட்டுகள் முத்தூர், பருத்தியூர், செங்கம், மோகனூர், நத்தக்காடையூர், சதுமுகை, நம்பியூர், கீரனூர் (பழனி) ஆகிய இடங்களில் உள்ளன.

கீழைக் கூடல் மணியன் குலப் புண்ணியதேவன் பருத்தியூர் நக்கீசுவரமுடையார்க்குச் சந்தியா தீபம் வைத்துள்ளார். கீட்பா நாட்டுத் தாவல் என்ற ஊரில் உள்ள மணியகுல கண்ணன் உய்ய வந்தான் என்பவர் ஆலத்துக் கோம்பையான சதுமுகை என்னும் ஊரில் இருந்த கைலாயம் உடையார் கோயிலுக்கு ஒன்றே கால் கழஞ்சு பொன் கொடுத்துச் சந்தியா தீபம் வைத்துள்ளார். நம்பியூரில் மேல் மணியர் பிரிவைச் சேர்ந்தவர் நீலன் புளியன் என்பவர் திருப்பள்ளியறை நாச்சியார்க்கு ஆடிப்பூரம் திருநோன்புக்காகவும், அம்மனை ஊர்வலமாக எடுத்துச் செல்லவும் ஆனை அமுதன் அச்சு என்னும் பொன் நாணயம் ஐந்தைக் கோயில் பண்டாரத்தில் சேர்த்தார்.

வெள்ளாளன் மேல் மணியரில் கீரனூர் ஆன கொழுமங் கொண்ட சோழநல்லூர் காவன் உடையான் வாகீசுவரர் கோயிலில் சந்தியா தீபம் வைக்கத் துளைகழஞ்சு மூலப்பொருளாக வைத்தார்.

### பெருமைச் சுவடுகள்

மற்ற கொங்குக் குலங்களுக்கு இல்லாத சில தனிப்பட்ட சிறப்புக்கள் மணியன் குலத்தாருக்கு உண்டு.

### தெய்வமாக மாறிய தேனாயி

மோகனூர் அருகில் உள்ள குமரிபாளையம் என்னும் ஊரில் மணியகுல வேளாளர் ஒருவர் இருந்தார். அவரிடம் கால்நடைச் செல்வம் மிகுதியாக இருந்தது. அவர்கள் வீட்டுத் தேவைக்குப் போக மீதியான பால், தயிர், வெண்ணெய், நெய் போன்ற பொருள் களைப் பிறர்க்கு விற்பர். மணிய குலச் செல்வர் மனைவி தேனாயி. தேனாயி பக்கத்து ஊர் சென்று அவைகளை விற்று வருவாள்.

தேனாயி மிகவும் பக்தியுடையவள். இறை நம்பிக்கை உடைய அவள் காலை எழுந்தவுடன் குளித்துப் பின்னர் இறைவனை வணங்கியே தன் செயல்களைத் தொடருவாள். ஒரு நாள் தயிர் முதலிய பொருள்களை விற்றுவிட்டுத் திரும்பும்போது காட்டு வழியில் வந்து கொண்டிருந்தாள். வில்வ மரங்கள் உள்ள பகுதியிலிருந்து ''எனக்கு ஒரு விளக்கு வை'' என்ற சத்தம் கேட்டது. திரும்பிப் பார்த்தாள். ஒருவரும் இல்லை. மீண்டும் நடந்தாள். மீண்டும் ''எனக்கு ஒரு விளக்கு வை'' என்ற அதே குரல் கேட்டது. குரல் வந்த திசைநோக்கிச் சென்று பார்த்தாள். ஒரு வில்வ மரத்தடியில் அழகான சிறு சிவலிங்கம் இருந்தது. அதைக் கண்டு பரவசம் அடைந்த தேனாயி விரைந்து வீடு சென்று வந்து விளக்கு வைத்து வழிபட்டாள். வழிபாடு தினமும் தொடர்ந்தது.

இந்நிலையில் தேனாயி கருவுற்றாள். பல ஆண்டுகள் மகப்பேறு இல்லாமல் இருந்த தேனாயி காட்டில் சென்று யாரோ ஒருவருடன் கூடிக் கருவுற்றாள் என்று எண்ணினர். ஒரு நாள் தேனாயி வில்வக் காட்டிற்கு விளக்கு வைக்கப் போகும்போது தொடர்ந்து பின் சென்று பார்த்தனர். உண்மை அறிந்தனர். அன்று பெரும் காற்று வீசியது. தேனாயி வைத்த விளக்கு, காற்றிலும்

அசையாமல் ஆடாமல் எரிந்தது. தேனாயியின் தெய்வத் தன்மையை அறிந்து போற்றினர். தேனாயிக்கு ஆண் குழந்தை பிறந்தது. வில்வக்காட்டுச் சிவலிங்கத்திற்குக் கோயில் கட்டினர். குமரி வழிபட்ட காரணத்தால் குமரீச்சுரம் என்று அழைத்தனர். 'அசையா விளக்கர்' என்று இறைவனுக்குப் பெயர் வைத்தனர். பின் 'அசல தீபேசுவரர்' என்று அழைக்கப்பட்டார். அம்மன் பெயரைக் குமரியம்மன் - தேனாயி என்று அழைத்தனர். மதுகரவேணி என்றும் அம்மன் பெயர் பெற்றார்.

தொன்மையான அக்கோயில் 'கொங்குக் குமரி' எனப்பட்டது. திருநாவுக்கரசர் தேவாரத்தில் குறிப்பிடும் 'கொங்கு தென் குமரித் துறை' இக்கோயிலே என்பர். தெய்வத்தன்மை பொருந்திய தேனாயிக்கு மகப்பேறு கொடுத்த காரணத்தால் அப்பகுதி 'மகவனூர்' என்று பெயர் பெற்றுப் பின்னாளில் 'மோகனூர்' ஆயிற்று என்பர்.

இக்கோயிலில் மணிய குலக் கறுப்ப கவுண்டர் மகள் கங்காத்தாள் கி.பி.1684 ஆம் ஆண்டு மார்கழித் திருமஞ்சன அபிடேகம் நடைபெறக் கொடை கொடுத்த கல்வெட்டு உள்ளது. குமரீசுவரமுடைய தம்பிரானார் என இறைவன் குறிக்கப் பெறுகிறார். வேளாளர் குலமகள் தேனாயி இன்றும் தன்னை வழிபடுவார்க்கு இன்னருள் சுரந்து வருகிறாள்.

வாலசுந்தரக் கவிராயரின் கொங்கு மண்டல சதகத்தில் இவ்வரலாறு தொடர்பான ஒரு பாடல் உள்ளது.

''நந்தூர் நெடுவயல் சூழ முகவை நகர்தனிலே
இந்தூர் சடையான் நசையால் விளக்குஒன்று ஏற்றுதற்கு
சந்தோச மாய்ஒரு பாவனை கொண்டு தயிருவிற்க
வந்தோர் குமரி அருச்சித்த தும்கொங்கு மண்டலமே''

என்பது அப்பாடலாகும்.

**மணியகுல மகான் செல்லக்குமாரர்**

முத்தூர் மணியகுலச் செல்லப்பகவுண்டர் - பாவை தம்பதியினர்க்குச் சிவன் அருளால் பிறந்த ஆண் குழந்தைக்குச்

'செல்லக்குமரன்' என்று பெயர் வைத்தனர். சோழீசர் கோயிலில் இறைபணியாற்றிவந்த முத்தன் குலக் குமராயி செல்லக்குமரனை வளர்ப்பதில் உறுதுணையாக இருந்தாள். சின்ன முத்தூரில் குமராயி தவச்சாலை என்னும் மடம் அமைத்து இறைபணியாற்றி வந்தார்.

இறையருள் பெற்ற செல்லக்குமரன் தேச சஞ்சாரம் சென்று பல தலங்களைத் தரிசித்து செஞ்சேரி மலையில் ஒரு குகையில் தங்கி யோக நிலையில் இருந்தார். ஏற்கனவே அங்கு தவம் இயற்றிய தொட்டியச் சின்னான், உபய குப்பன் இருவரும் செல்லக் குமரனுக்குப் பணிவிடை செய்தனர். அடியார் பலர் வந்து வணங்கினர். சிவராத்திரியில் தம்மிடம் வருமாறு கூறி அனுப்பி வைத்தார்.

முத்தூரில் குமராயி செல்லக்குமரனை எண்ணி ஏக்கமுற்றாள். அவள் திருமடத்தில் மணியகுல அத்தாய், முத்தாய், செல்லாய் ஆகியோர் குமராயி அருட்பணிகட்குத் துணையாக இருந்தனர். இவர்கள் மூவரும் துறவியாக உணவு தானியம் சேகரித்து வந்து குமராயியின் அன்னம்பாலிப்புக்கு உதவி செய்தனர்.

குமராயியால் ஞானாசிரியராகவும், குருநாதராகவும் ஏற்றுக் கொண்ட செல்லக்குமரனை முத்தூர்க்கு வரவழைக்க அத்தனூர் அம்மனிடம் வேண்டிக் கொண்டார். அத்தனூர் அம்மன் ஆலயக் காப்பாளன் ஆகிய குப்பண்ணன் மூலம் செல்லக்குமரனை முத்தூர் வரவழைத்தார். தொட்டியச் சின்னான், உபயகுப்பன், அடியார் களாகிய தெய்வீகப் பெண்கள் பஞ்ச கன்னியர் ஆகியோருடன் முத்தூர் வந்த செல்லக்குமரனைக் குமராயியின் மடத்தில் தங்க அத்தனூர் அம்மன் கேட்டுக்கொண்டார்.

செல்லக்குமாரர் குமராயி மடத்தையே கோயிலாகக் கொண்டார். செல்லக்குமாரரையே வணங்கிப் பணிபுரிந்த குமராயி அத்தாய், முத்தாய், செல்லாய் ஆகியோரைத் தொடர்ந்து அருட் பணியாற்றக் கூறி அமரர் ஆனார். செல்லக்குமாரர் உட்பட அனைவருக்கும்

குமராயி திருமடத்தில் சன்னதிகள் அமைக்கப்பட்டன. மாசிமகம் சிவராத்திரி விழாவிற்குத் தக்க ஏற்பாடுகள் செய்து விட்டு மணியகுல முப்பெண்களும் இறைநிலை அடைந்தனர். அவர்கட்கும் சின்னமுத்தூரில் கோயில் அமைக்கப்பட்டது.

சின்னமுத்தூர் செல்லக்குமாரர் முருகன் அவதாரமாகப் போற்றப்படுகிறார். மாசிமகம் பிரம்மோத்சவத்தின்போது செஞ்சேரி சென்று அங்கு குகையில் உள்ள திருவடிகட்கு வழிபாடு செய்து வந்த பின்னரே முத்தூரில் விழா தொடங்குகின்றது.

பூந்துறைச் சேமூரிலும் அவர் தங்கியிருந்த இடத்தில் வழி படப்படுகிறார்.

வேட்டுவரோடு ஏற்பட்ட போரில் செல்லக்குமாரர் தொண்டன் குப்பண்ணன் போரிட்டு மடியும் போது ''செல்லக் குமாரற்கே அடிமை ஆனேன்'' என்று கூறி மறைந்தான். குப்பண்ணனும் வணங்கப்படுகிறான்.

மணிய குலத்தாரும், மணியகுலத்தினரிடம் அன்புடையவர் களும் தெய்வநிலைக்கு உயர்ந்து வணங்கப்படுவது சிறப்புக்கு உரியதாகும்.

**கம்பநாதர் சதகத்தில்**

வணிகத்தில் ஈடுபட்ட மணியகுலக் குமாரமுத்து தேவேந்திர னிடம் பணிந்து ஆடைபெற்றதும், மணியகுலப் பிடாரன் உயர்ந்த நல்ல முத்துக்களை இரவலர்க்குக் கொடையாக அளித்ததும் கம்பநாத சுவாமிகள் சதகத்தில் புகழ்ந்து பாடப்பட்டுள்ளது.

'கொற்றூர் வணிகர் மணிய குலேந்திரன் குமாரமுத்து
பெற்றார் கலிங்கம் தேவேந் திரன்தன்முன் பாசையிட்டு
முத்தான முத்து முதிர்ஏறு முத்து முதிர்ந்தமுத்து
வைத்தான் பிடாரன் பிச்சையிட் டான்கொங்கு மண்டலமே''

**கத்தாங்கண்ணியில் செல்லக்குமாரசாமி கோயில்**

மணியகுலச் செல்வராகப் பிறந்து தெய்வீக நிலையடைந்த செல்லக்குமாரசுவாமி கோயில் சின்னமுத்தூரில் உள்ளது. குறுப்பு நாட்டுக் கத்தாங்கண்ணியில் குடியேறிய மணிய குலத்தார் கத்தாங்கண்ணியில் செல்லக்குமாரசாமி கோயில் கட்டி வழிபட்டு வருகின்றனர். முத்தூரில் உள்ளது போன்றே படைத்தலைவன் குப்பண்ணன், தெய்வீகப் பெண்கள் குமராயி, அத்தாயி, முத்தாயி, செல்லாயி மசரியாத்தாள் ஆகியோருக்கும் கோயில் எடுத்து மணிய குலத்தார் வணங்கிவருகின்றனர்.

பூந்துறை அருகில் உள்ள சேமூர், கொல்லன்கோயில், களிப் பாளையம் ஆகிய ஊர்களிலும் செல்லக்குமாரசாமி கோயில்கள் உள்ளன.

**ஒரு குடியேற்றம்**

மேல்கரை அரைய நாட்டில் துக்காச்சி நொய்யல் கரையில் உள்ள ஊர். அடிக்கடி நொய்யலாற்று வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட துக்காச்சி மணியன்குல சடையப்பகவுண்டர் தன் குடும்பத்தோடு தெற்கு நோக்கிப் பயணம் செய்து அண்ட நாட்டுக் குட்டம் என்னும் பழம்பெரும் ஊர் எல்லையில் உள்ள கோட்டூரில் குடியேறினார்.

ஆதி சடையப்பகவுண்டர் என்னும் முதல்வரின் மூத்த மகன் வழியில் சின்னப் பண்ணையம், பெரிய பண்ணையம் என இரு குடும்பம் பெருகி வாழ்கிறது. இவர்களைச் சின்னக் கொத்துக்காரர், பெரிய கொத்துக்காரர் என்றும் அழைப்பர். இளைய மகன் வழியினர் அஞ்சு பண்ணையம் என்று பெயர் பெற்று வாழ்கின்றனர். ஒரு குடும்பம் இன்று 25 குடும்பங்களாகப் பெருகியுள்ளது.

ஆதி சடையப்ப கவுண்டர் குடியேறும்போது தன் காவடியை உடன் எடுத்துச் சென்றார். காவடி வணக்கம் காலப்போக்கில் கோயில் கட்டி முருகன் கோயிலாக ஆண்டவர் கோயில் என உருவாகியுள்ளது.

## வீரபாண்டி மணியன்குலம்

சேலம் நாட்டு ஊர்களில் வீரபாண்டி ஒன்று. அங்கு காரூரம்மன் என்னும் அம்மனைக் குலதெய்வமாகக் கொண்டு வழிபடும் மணியன் குலத்தார் சிறப்புடன் வாழ்ந்து வருகின்றனர். நாட்டுக் கவுண்டர் குலப் பிரிவுகள் ஐந்தில் வீரபாண்டி மணியன் குலமும் ஒன்று. ஏறக்குறைய நூறு மணியன்குலக் குடும்பங்கள் காணியாளர்களாக உள்ளனர். நாட்டு வேளாளரில் கண்ணன் குலத்தைச் சகோதரக் குலமாகக் கொள்வர். செல்லன், பண்ணை, விழியன் குலத்தாரோடு திருமணத் தொடர்பு கொள்வர்.

இவர்கள் பூர்வீகம் காங்கய நாட்டு முத்தூர் ஆகும். அதற்கு அடையாளமாக சின்னமுத்தூர் மணியன்குல தெய்வம் செல்லக் குமாரரைக் காரூரம்மன் கோயிலில் எழுந்தருளச் செய்து வழிபட்டு வருகின்றனர். கோயில் திருவிழாவின்போது குப்பண்ணசுவாமிக்குப் பொங்கல் வைப்பர். குப்பண்ண சுவாமியும் முத்தூரில் எழுந்தருளி யுள்ள சுவாமி என்பது குறிப்பிடத்தக்கது.

## 80. மயிலன் குலம்

இலக்கியங்களிலோ ஆவணங்களிலோ அதிகம் பேசப்படாத குலம் மயில குலம். டி.எம். காளியப்பா மயிலின் அடிப்படையாக இக்குலம் பெயர் பெற்றது, மயில குலத்தாரின் அடையாளச் சின்னம் மயில் என்று கூறியுள்ளார். இரா. இரவிக்குமார் மயிலைக் காளை களைத் தன் வசமாக்கும் ஆற்றல் பெற்ற குலத்தார் 'மயிலைக் குலம்' எனப்பட்டு 'மயில குலம்' ஆயினர் என்ற பொருளில் எழுதியுள்ளார்.

தே.ப. சின்னசாமி காடை, குயில், செம்போத்து என பறவைகள் பெயரால் குலப் பெயர் அமைந்தது போல மயிலின் பெயரால் குலப்பெயர் ஏற்பட்டது என்று கூறியுள்ளார். ''கொங்கு வேளாளர் மகளிர் மயில் போன்ற சாயலில் இருப்பார்கள். மயிலைப் போல நடப்பார்கள்'' என்றும் தே.ப. சின்னசாமி கூறுகிறார். கு. சேதுராமன் எருது வகைகள் பில்லை, காரி, மயிலை என்பன. அவற்றுள் மயிலைக் காளையை மிகவும் இராசியுடையது என்று கருதி மதிப்பவர்கள், வளர்த்துப் பாதுகாப்பவர்கள் மயிலை குலத்தார் என்று கூறுகிறார். கொடுமணல் இலக்கியம் இக்குலத்தை 'மயிலை குலம்' என்றே அழைக்கிறது. ஆனால் தனிப்பாடல்கள் 'மயில குலம்' என்றே குறிப்பிடுகிறது.

இக்குலத்தை 'மயிலர் குலம்' எனக் குறிக்கும் நல். நடராசன் மயிலை என்பது இங்கு போர்முறைகளில் ஒன்றாகிய பசுநிரை கவர்தல் (ஆடு, மாடுகளைப் பிடித்துக்கொண்டு செல்லுதல்) என்ற வெட்சித்திணையைக் குறித்தது. இத்தகைய போர் முறையில் சிறந்த வேளாளர்கள் என்ற பொருளில் இவர்களுக்கு மயிலர் என்ற பெயர் வழங்கப்பட்டிருக்கலாம். அல்லது உழவுக்குப் பயன்படும் பில்லை, காரி, மயிலை ஆகிய வகை எருதுகளில் மயிலைக் காளைகளை மிகுதியாகக் கொண்டிருக்கும் வேளாளர்கள் என்ற பொருளில் மயிலை என்ற பெயர் ஏற்பட்டிருக்கலாம்' என்று கூறுகிறார். ஆநிரை கவரும் வெட்சித் திணையை மயிலை என்று கூறுவது எங்கும் வழக்கில் இல்லை.

கருமாபுரம், தூரம்பாடி, காடையூர், கரூர், மைவாடி, பழனி, சடையகுளம், மயிலாடி (மயில நகர்), விருப்பாட்சி என்பன மயில குலத்தார் காணியூர்களாகும். தென்கரை நாட்டுத் தூரம்பாடியில் மயில குலத்தார்க்கு நான்காவது காணியுண்டு.

''தூரன்வேட் டுவன்ஆந்தை சொல்லுநிலை அந்துவன்
வீரமுள மயிலன் மெய்ச்செட்டி - சீருநுதல்
தீட்டு முதலானும் செய்முதன்மை தென்கரைநல்
நாட்டிலுயர் தூரை நகர்''

என்பது தூரன்பாடிக் காணிப் பாடலாகும். தென்கரை நாட்டுக் காணிப் பாடல்

''கார்பரவு தூரைநகர் ஆந்தைகுல தீரனை
கனமான அந்துவகுலனை
காண்டீப மயிலகுலம் செட்டியும் வேட்டுவன்''

என்று கூறுகிறது. 'வீரமுள மயில குலம்' 'காண்டீப மயிலகுலம்' என சிறப்பு அடைமொழி பெற்றிருப்பது மயில குலத்தார்க்குச் சிறப்பளிப்பதாகும்.

## தூரன்பாடி ஆட்சி

தூரன்பாடியில் நான்காவது காணியாளராக இருந்தாலும் மயில குலத்தாருக்கே தூரம்பாடிக் கோட்டையும் ஊரதிகாரமும் இருந்தது. எதிர் ஒருவரும் இல்லை என்று தனியரசு செலுத்திய மயிலகுலத் தலைவரைப் பார்த்துப் பங்காளிகள் அண்ட நாட்டு வேட்டுவர் துணையுடன் தூரம்பாடிக் கோட்டையை இடித்து, மயிலகுலத் தலைவனையும் கொன்றனர்.

அப்போது மயில குலத் தலைவனின் துணைவி கருவுற்றிருந்தது கேள்விப்பட்டு கருவையும் அழிக்க முற்பட்டனர். மயில குலத் தலைவர் மனைவி மாறு வேடத்தில் அரண்மனையை விட்டு வெளியேறினாள். ஒரு ஐநூறு குல வணிகன் இல்லம் சென்று வேலை

செய்து வந்தாள். வேலைக்காரியாக உள்ளவள் தூரம்பாடித் தலைவன் மனைவி என்பதை அறிந்த ஐநூறு குல வணிகர் தனி வீட்டில் அப்பெண்ணைத் தங்க வைத்துப் பாதுகாத்தார்.

அப்பெண் ஈன்றெடுத்த ஆண் குழந்தை வளர்ந்து ஆளானவுடன் ஐநூறு குல வணிகருடன் சென்று தூரை நகரில் தன் மகனுக்குக் கோட்டை நிர்வாகமும் ஆட்சியும் கேட்டாள். தூரன் பாடியார் ''நீ யார் என்பதே தெரியாது, உரிமையெல்லாம் எவர் என்று அறியமுடியாத உன் மகனுக்கு எப்படிக் கொடுப்பது'' என்று மறுத்தனர். ஐநூறு குல வணிகர் அப்பெண்ணின் வரலாறு கூறினர்.

எல்லோரும் வெள்ளகோயிலில் கூடுவோம். அங்கு வந்து உன் வழக்கை உரை என்று கூறினர். வெள்ளகோயில் கூட்டததில் அப்பெண் காய்ச்சிய மழுவைக் கையில் எடுத்து நிரூபிக்க வேண்டும் என்றனர். அப்பெண் அவ்வாறே செல்லாண்டியம்மன் முன் மழுவெடுத்து உரிமை பெற்றாள். பூசகுலத்தலைவர் நல்லதம்பித் தொண்டைமான் அப்பையனுக்கு ''தூரை நகர் மயில குலக் கவுண்டைய நராதிபதி'' என்று பெயரிட்டு முடி சூட்டுவித்தார். தூரன்பாடியில் மீண்டும் மயில குலத்தார் ஆட்சி நடைபெற்றது. இந்நிகழ்ச்சியை நீண்டதொரு பாடல் விளக்குகிறது.

**காடையூர்க்காணி**

காங்கய நாட்டுக் காடையூரில் மயில குலத்தார் காணி உரிமை பெற்று ஆட்சி புரிந்தனர். பகைவர்களை அழித்து ஊரைக் காத்து நல்லாட்சி புரிந்தனர். சேட குலத்தார் காடையூர் தங்கள் காணி உரிமையுடைய ஊர் என்றும் தங்களுக்கே முதல் காணியும் ஆட்சி உரிமையும் வேண்டும் என்று போராடினர். இருவர் வழக்கும் வரகுண பாண்டியன்முன் மதுரையில் விசாரணைக்குச் சென்றது, பாண்டியன் அவையில் மயில குலத்தாருக்கே காடையூர்க் காணி உரிமையுடையது என்று தீர்ப்பளிக்கப்பட்டது. இதனை ஒரு தனிப்பாடல் விளக்குகிறது.

''அம்புவியில் வாழைமா கனிபலாக் கனியுடன்
ஒழுகுதேன் ஆறதாக
அலையெறிந் தேவயல் நிறைவளர் சாலிவிளை
அதிககாங் கயநன்னாட்டில்

அந்திவண் ணன்காடை யீசுவரன் விளங்கியே
அருள்பெருகு காடைநகரில்
அரசுநெறி முறைமைதவ றாமலே அனுதினம்
ஆதிபத் தியம்செலுத்த

கும்பிக் கொதிக்கவரும் சத்துரரை வெட்டிக்
குலத்துடன் கருவறுத்தாய்
குடல்நிணம் தசைவேறு தலைவேறு கால்வேறு
துண்டம் படக்குத்தியே

கொம்புதவில் முரசுடன் விருதுகள் பருத்துநீ
கோளரியென வாழுநாள்
கோமளி வராகிதிரி சூலிகரிய காளிஅடியினும்
கொண்டதிரு வாழ்வதனிலே

வம்பினொடு சேடர்குலம் முப்பாடு நான்எனவும்
மயிலகுலம் நானெனவும்
வழக்காய் இருவோர் களும்மதுரை தனில்வளர்
வரகுணராம பாண்டியனிடம்

வரன்முறைமை யுடன்இவர்கள் சொல்லவும் கேட்டுமே
மதிமந்திரி வழுதிதானும்
மயிலகுலன் முந்தினவன் என்றுதான் மெச்சியே
மகரடால் கனகடாலும்

கொம்புடன் சிவிகைவெண் சாமரை சுருட்டியும்
துலங்குபவு சுகள்கொடுத்து
தொல்புவியில் மதுரைதனில் ஊர்வலம் செய்துநீ
சுகமாக வாழ்ந்திரென்றார்

குலமா ணிக்கமுனர்க் கோதைமுடி சூட்டியே
துலங்கிவாழ் சடையுமீந்து
தொல்லுலகில் அதிகபுகழ் பெருங்காங் கயத்துறை
செற்றலார்க் கெரச்சிங்கமே''

என்ற பாடல் காடையூர்க் காணியை மயில குலத்தார் பெற்றதை விளக்குகிறது.

## சடையகுளம் அடைத்தது

மயில குலத்தார் விருப்பாட்சியைத் தலைநகராகக் கொண்ட அண்ட நாட்டிலும் காணி பெற்றனர். அங்கு சடைய குளம் என்னும் ஊரில் நிலையாக வாழ்ந்து வந்தனர். மயிலகுலச் சின்னா மகீபன் சடைய குளத்தில் பெரும்புகழுடன் வாழ்ந்து கொண்டிருந்தார். அவ்வூரில் 'சடையகுளம்' என்ற குளமும் இருந்தது. அப்போது திருமலை நாயக்கர் ஆட்சிக்காலம். ஒரு நாள் சடையகுளம் பெருமழை பெய்து உடைந்து விட்டது. பலர் முயன்று அடைத்தும் உடைப்பு நிற்கவில்லை.

உடைப்பின் காரணம் புரியாமல் பலரும் திகைத்தனர். அண்ட நாட்டில் மக்களும், பிறரும் எந்தக் குறையிருந்தாலும் 'பெரிய கோடங்கி' என்பவரிடம் குறி (சோதிடம்) கேட்பர். அவர் நரபலி கொடுத்தால் குளம் நிற்கும் என்றார்.

மக்கள் விருப்பாட்சியை ஆட்சிபுரியும் நாயக்கப்பாளையக் காரரிடம் இது பற்றிக் கூறினர். அவர் ''சடையகுளம் நின்றால் என்ன போனால் என்ன'' என்று அலட்சியமாய்க் கூறி விட்டார்.

இதைக் கேள்விப்பட்ட சடையகுளம் மயிலகுலச் சின்னா மகீபன் தன் மனைவியறியாமல் தன் மகன் சடையப்பனைப் பூசை செய்து குளம் நிற்க நரபலியாக்கிவிட்டார். உடைந்த குளம் நின்றது. இதைக் கேள்விப்பட்ட நாயக்க மன்னர் மயிலகுலச் சின்னாமகீப னுக்குப் பல விருதுகள் வழங்கினார்.

## துட்டர்களை வெட்டியவர்

கொங்கு நாட்டில் 'கள்ளர் மலையாளர் தொழுவர்' ஆகியோர் கூடி வந்து கொள்ளையிட்டனர். கால்நடைகளைக் கவர்ந்தனர். தாலி, சீலை எது கிடைத்தாலும் ஒன்று விடாமல் கொள்ளை யடித்தனர். மயில குலச் சின்னா மகீபன் கொள்ளைக்காரர்களை ஒழித்து மக்களைக் காப்பாற்றினார். அதற்காகச் சின்னாமகீபன் என்ற மயில குலத் தலைவருக்கு அரசர் பல பட்டங்களை வழங்கிப் பெருமைப்படுத்தினார். இதை விளக்கும் பாடலில் மயில குலத்தார்களின் காணியூர்கள் சில கூறப்பட்டுள்ளன.

''கதிரிரவி இலகுபுகழ் கொங்குதே சம்தனில்
கள்ளர்மலை யாளர்தொழுவர்
கனபவிசு கூடியே அனுதினம் கொள்ளையும்
கலகம்இப் படிநடாத்தி

கன்றுகா லித்திரள்கள் தாலிபறி சேலைபறி
கனகொள்ளை தான்குடுத்துக்
கஷ்டப் படும்துயரம் போறாமல் சனமெலாம்
கனகொல்லி மலைநடந்தார்

மதிவதன மனுநீதி ராயரது கேட்டந்த
மருவலரை வென்றபேர்க்கு
மாநிலந் தனில்அதிக விருதுதரு வோம்என்று
வசனித்த வகையறிந்து

வாதிட்டு வருதுட்டர் களைவெட்டி யவர்களிட
வளர்பதிகள் தூள்படுத்தி
மறுபடி சனங்களை நிலைநிற்க வேசெய்த
வகைகேட்டு ராயர்மெச்சி

குதிரைகள் கழுத்தில்மணி குஞ்சரக் கொப்புமணி
குலவுமுத் துச்சிவிகையும்

கூறரிய முன்சல்லி பின்சல்லி முகசல்லி
குணரத்தின ரேக்குமிட்டு
குடகுடையும் மேற்குடையும் மகரடால் கெருடடால்
குந்தம்நெற் றியில்சுட்டியும்
கோகனகம் ஆயிரம் தீவட்டி இதுவெலாம்
கொடுக்கநீ வாழ்வுபெற்றாய்
கதிருலவு கருமா புரம்காடை யூர்வலிமை
தருவஞ்சி மைவாடியும்
தமிழ்ப்பழனி யூர்சடைய குளம்மயில நகர்வாழ்
எழில்பரவு தூரைநகர்
தமிழ்வல்லோர் புகழவரு மயிலகுல திலகனே
சர்ச்சனர்க் குபகாரனே
தண்குவளை மாலைபுனை சின்னண மகீபனே
தரியலர் பணிசிங்கமே''

என்பது அதற்குரிய பாடலாகும்.

## புலவருக்கு ஆதரவு

மயில குலப் பெருமக்கள் தமிழ்மீது பற்றுக் கொண்டு புலவர்களை ஆதரித்த புகழாளர்கள். திருக்கைவேல் புலவர் என்பவருக்கு மயிலகுலப் பெரு மக்கள் அனைவரும் ஏருக்கு நான்கு வள்ளம் தானியம் கொடுத்து வந்தனர். இடையிலே இவ்வழக்கம் நின்றுவிட்டது. மீண்டும் அவ்வாறு தானியம் தரவேண்டும் என்று மயிலகுலத் தலைவர், சடையகுளத்தில் ஆட்சி நடத்திய நயினா மகீபன் மக்கள் சொக்கயன், பெரியணன் ஆகியோருக்குப் புலவர் எழுதிய நீண்ட பாடல் கிடைத்துள்ளது. அதன் பகுதியைக் கீழே காணலாம்.

'மண்டலம் மதிக்கவரு சடையநகர் அரசுபுரி
வளர்மயில குலமேருவாய்
மதிமந்திரி எனவந்த நயினா மகீபன்அருள்
வந்தசொக் கயதீரனும்

தண்டமிழ்க் கறிவான பெரியண மகீபனும்
தன்மனதில் அன்புவைத்து
தாரணியில் உனதுகவி மாலையென் றெண்ணியே
தந்துமுன் னாள்நடந்ததை

தவறாமல் ஏருக்கு நால்வள்ள மும்தந்த
தானியம் நீகொடுத்து
சகலஅபி மானமும் வைத்துத் தரித்தே
தயவுடன் காத்தருள்வாயே''

என்பது திருக்கைவேல் புலவர் பாடலாகும்.

## 81. மலையர் குலம்

வேளாளர் 96 கீர்த்திப் பாடலிலும், கல்வெட்டுகளிலும் மட்டுமே மலையர் குலம் குறிக்கப்பட்டிருப்பதால் எவரும் தங்கள் வரலாற்றில் இக்குலம் பற்றிக் குறிப்பிடவில்லை. மலை வளங்களைப் பெற்றவர்களாகவோ அல்லது மலையில் உள்ள சமவெளிகளில் வேளாண்மை செய்தவர்களாகவோ இக்குலத்தார் இருந்திருக்கலாம். சமவெளியில் மட்டுமின்றி மலைக்கும் உரியவர் களாக மலையர் குலத்தார் இருந்திருக்கலாம்.

மலைய குல வேளாள தொடர்பான கல்வெட்டுகள் கவசை-கோயில்பாளையம், இடிகரை, கோயம்புத்தூர் ஆகிய இடங்களில் கிடைத்துள்ளன. எனவே கோயம்புத்தூரிலும், கோயம்புத்தூரைச் சுறறியுள்ள பகுதியிலும் காணியுரிமைகொண்டு மலையர் குலத்தார் வாழ்ந்துள்ளனர் என்பது தெரிகிறது.

கொங்குச் சோழ மன்னன் வீரராசேந்திரனின் 24ஆம் ஆட்சியாண்டில் (1231) வடபரிசார நாட்டுக் கவையன்புத்தூரில் காணி கொண்டு வாழ்ந்த வெள்ளாளர் மலைய குல கேசன் காவனான தமிழ வேளான் என்பவர் கவையன்புத்தூர் (கோயில் பாளையம்) சிவாலயமான காலகாலேசுவரர் கோயில் திருப்பணி நடைபெறும்போது தன்பங்காக பெரிய திருமண்டபத்தில் நாயகத் தூணைத் தன் கொடையாக அளித்தார்.

இம் மலைய குல வேளாளர் 13ஆம் நூற்றாண்டிலேயே தமிழ வேளான் என்று பெயர் பெற்றிருப்பது சிறப்புக்குரியதாகும். இவர் இயற்பெயர் கேசன் காவன் என்பதாக இருக்கலாம். மூவேந்த வேளான். மும்முடி வேளான் என்று அரசர் வேளாளர் தலைவர்கட்கு அளிக்கும் பட்டம் போலத் தமிழ வேளான் என்பது கொங்குச் சோழமன்னன் கொடுத்த பட்டப் பெயர் என்பதில் ஐயமில்லை. இவர் அரசு உயர் அதிகாரியாக இருந்திருக்க வேண்டும்.

விக்கிரம சோழ தேவனின் மூன்றாம் ஆட்சியாண்டில் (1258) வடபரிசார நாட்டு இடிகரையிலிருக்கும் வெள்ளாளர் மலைய குலச் சோழக் காமிண்டன் மன்றாடி என்பவர் இடிகரை வில்லீசுவர முடையார் கோயிலில் சந்தியா தீபம் வைப்பதற்காகப் பத்து வராகன் பணம் கொடையாகக் கொடுத்தார். இப்பணம் பத்தையும் கோயில் காணியுடைய சிவப்பிராமணன் காசிப கோத்திரத்து திருநட்டன் அகத்தீசுரம் உடையான் என்பவர் பெற்றுக்கொண்டு சந்தியா தீபம் வைக்க ஒப்புக்கொண்டார்.

மலையர்குல சோழக் காமிண்டன் மன்றாடி என்பவரும் கொங்குச் சோழ அரசனிடம் பட்டம் பெற்ற உயர் அலுவலராக இருந்துள்ளார். மன்றாடி பட்டம் சிறப்பு மிக்கதாகும். இவர் மன்றாட்டு உரிமையுடையவர் அல்லது நடுவராக இருந்திருக்க வேண்டும். இங்கு குறிக்கப்படும் காமிண்டன் என்ற பெயரே பிற்காலத்தில் கவுண்டர் என மாற்றம் பெற்றதாக ஆய்வாளர்கள் கருதுவர். (இன்றும் பழையகோட்டைப் பட்டக்காரர் பெயரில் இப்பெயர் பயின்று வருகிறது. நல்லசேனாபதிச் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார்).

கொங்கு நாட்டை ஆட்சிபுரிந்த வீரகேரள மன்னர்கள் கோயம்புத்தூருக்கு வீரகேரள நல்லூர் என்று பெயர் கொடுத்தனர். கல்வெட்டுகளில் 'கோவன்புத்தூரான வீரகேரள நல்லூர்' என்ற தொடர் காணப்படுகிறது.

வீரகேரள மன்னன் வீரநாராயண தேவனின் ஆறாம் ஆட்சியாண்டில் (1143) வீரகேரள நல்லூர் வெள்ளாளர் மலையகுல தோளன் பிள்ளனான திருஞான சம்பந்தன் என்பவர் ஆளுடையார் சங்கீசுவர முடையார் கோயிலில் கார்த்திகைக்கு எழுந்தருளவும், அன்றைய அமுதுபடிக்கும் ஒரு அச்சு பொற்காசு கொடையாகக் கொடுத்தார்.

''ஸ்வஸ்திஸ்ரீ வீர நாராயண தேவர்க்கு யாண்டு ஆறாவது வீரகேரளநல்லூர் வெள்ளாளன் மலையரில் தோளன் பிள்ளன் ஆன திருஞானசம்பந்தனேன் ஆளுடையார் சங்கீசுவர முடையார்க்குத் திருக்கார்த்திகைக்கு எழுந்தருளுகைக்கும் அன்றைக்கு அமுது வெஞ்சனாதிகளுக்கும் நான் ஒடுக்கின அச்சு ஒன்றும் சந்திராதித்தவரை நல்லூர் இருக்கின்ற திருஞானசம்பந்தர்''

என்பது அதைக்குறிக்கும் கல்வெட்டாகும். சங்கீசுவரமுடையார் என்ற பெயர் இன்று சங்கமேசுவரர் என்று மாறிவிட்டது. இம்மலைய குல வேளாளர் மிகவும் சிறந்த பக்தர் என்று தெரிகிறது.

## 82. மழுவர் குலம்

ஓதாளர் அலகுமலைக் குறவஞ்சியில்,

'பயிரன் பரமன் பஞ்சமன் பூதியன்
உயர்மழு வழகர் உறுகுல விரதர்'

எனக் குறிக்கும் இடத்தில் 'மழுவழகர்' என்ற குலம் குறிக்கப்படுகிறது. மழுவ குலத்திற்கு உயர் என்று முன்னும் அழகர் என்று பின்னும் சிறப்பு அடைமொழி சேர்க்கப்பட்டுள்ளது. டி.எம். காளியப்பா ''கொங்கரின் பழைய பட்டயத்தில் ''மழு அழகர்'' குலம் குறிக்கப்பட்டுள்ளது. 'அழகர்' தனிக்குலம் 'மழுவர்' தற்சமயம் தனிக்குலம்'' என்று கூறியுள்ளார். இக்குறவஞ்சியில் அழகன் குலம் தனிக்குலமாக வேறு இடத்தில் குறிக்கப்பட்டுள்ளது. 'மழுவழகர்' குலத்திலிருந்து பிரிந்தது அல்ல அழகர் குலம்.

இரா. இரவிக்குமார் 'மழுவழகர் குலம்' மழுவர் குலம் இரண்டையும் தனித்தனிக் குலங்களாகக் கொள்ளுகிறார். அழகன் குலத்திலிருந்து மழுஅழகர் குலம் பிரிந்திருக்கலாம் என்றும், மழு என்பதற்கு உயர்ந்த வீரன் எதற்கும் அஞ்சாதவன் பாதுகாவலன் என்றும் பொருள் கூறுகிறார். டி.எம்.காளியப்பா 'மழுவகுலம் மழு என்ற ஆயுதத்தின் வழியாக ஏற்பட்டிருக்கவேண்டும் என்று கூறி 'பரசு'என்னும் வடமொழி ஆயுதப் பெயரோடு தொடர்புபடுத்துகிறார்.

தொப்பம்பட்டி தேன்மொழியம்மனைக் குலதெய்வமாக உடையவர்கள் கணக்கன், காடை, மழுவகுலம் ஆகிய மூன்று குலத்தார் ஆவர். ஓதாளர் அலகுமலைக் குறவஞ்சி கூறும் மழுவழகர் குலமே மழுவன் குலமாகும். 'மழு அழகன்' என்பதே பின்னாளில் மழுவன் எனத் திரிந்திருக்க வேண்டும் என நல். நடராசன் கூறுகிறார். மூவேந்தர்கட்கு படைத்தளபதிகளாய், குறுநில மன்னர்களாய் கீர்த்தியுடன் வாழ்ந்த கொங்கு வேளாளர்கட்குப் போர்த்தொழில் அடிப்படையில் 'மழுவன் குலம்' என்ற பெயர் ஏற்பட்டதாகக் கருதுவது தவறில்லை.

''உருவக் குதிரை மழவர் ஓட்டிய'' என்ற தொடரில் வரும் 'மழவர்' என்பதையும், 'சோழன் மழவராயன்' என்ற இடத்தில் வரும் 'மழவராயன்' என்பதையும் இரா. இரவிக்குமாரும், நல். நடராசனும் 'மழுவர்' 'மழுவராயன்' என்று கொள்கின்றனர். மழுவன் குலத்தாரைப் பரசுராமன் வழிவந்தவர்கள் என்று இரா. இரவிக்குமார் கூறுகிறார். அதியமானை மழுவர் குலச் சிற்றரசன் என்று இரா. இரவிக்குமார் கூறுவது மழவரை - மழுவராகக் கொண்டதன் விளைவாகும்.

மழுவகுலத்தார் தொப்பம்பட்டி, நஞ்சையம்பாளையம், தாராபுரம், பொள்ளாச்சி புளியம்பட்டி, காளியாபுரம், வேட்டைக் காரன்புதூர், முத்தூர், வரப்பாளையம் முதலிய பல ஊர்களில் வாழ்வதாகக் குறிக்கப்பட்டுள்ளனர்.

## 83. மாடை குலம்

குல வரலாறு எழுதியவர்கள் எல்லோராலும் அதிகமாக விவாதிக்கப்பட்ட குலங்களில் மாடைகுலம் முதன்மையானது.

டி.எம். காளியப்பா ''ஒரு வகைப் பொன்னுக்கு மாடை எனப் பெயர். மாடைப் பொன் அணிந்தவன் கால் வழியாகப் பெருகிய மக்களுக்கு மாடை கூட்டம் எனப் பெயர் வந்திருக்கலாம்'' என்று கூறியுள்ளார்.

நல். நடராசன் ''மாடை குலம் என்ற பெயர் உழவுத் தொழில் அடிப்படையாகப் பிறந்தது. மா என்பது மாடு, குதிரை, யானை முதலிய விலங்குகளைக் குறிக்கும் பொதுப்பெயர். காளை மாடுகளைப் பயன்படுத்துபவன், பசு மாடுகளைப் பேணுபவன் என்ற பொருளில் மாடை குலம் (மா, மாடு, மாடை) என்று தோன்றியிருக்க வேண்டும். அல்லது '' 'மடை' என்ற சொல் மதகு, வாய்க்கால், நீரணை முதலிய உழவுத்தொழில் தொடர்பான பொருள்களைத் தருவதால் மடை என்பதே மாடை எனவும் வழங்கி யிருக்கலாம்'' என்று எழுதியுள்ளார். மோகனசுந்தரம் காளியப்பா எழுதியதை அப்படியே தந்துள்ளார்.

கு.சேதுராமன் ''பொன்னை ஆபரணங்களுக்குத் தகுந்தவாறு மாற்றுச் சேர்த்து மாடைப் பொன் தயாரிப்போர் மாடைகள் எனப்படுவர். கொங்குத் தங்கம் உலகப் புகழ் பெற்றது. அதை மாடையாகத் தயாரித்து வழங்கியவர்கள் மாடைகளாக இருக்கலாம்'' என்று கூறி சிதம்பரத்திற்குப் பொன்வேய்ந்த செய்தியையும், சோழர் காலத்தில் 'மாடை' பொன் நாணயத்தையும் கூறுகிறார்.

வி. இராமமூர்த்தி ''மாடை என்பது சோழர் - பாண்டியர் காலத்தில் வழக்கில் இருந்த ஒரு வகைப் பொன்காசாகும். பராந்தகன் மாடை, குலோத்துங்கன் மாடை என்ற பெயர் காண்க. தங்கத்தில் ஏதாவது மாற்றுச் சேர்த்து மாடைப் பொன் தயாரிப்பதில் வல்லவர்களாக மாடை குலத்தாரின் முன்னோர் இருந்திருக்கக்

கூடும்'' என்று கூறுகிறார். இரா. இரவிக்குமார் இக்கருத்தையே வழிமொழிகிறார்.

'மாடை' என்பதற்கு உளுந்து என்ற பொருள் உண்டு. அதனால் உளுந்து பயிரிடுவதில் மாடை குலத்தார் சிறந்திருந்ததால் குலப் பெயர் பெற்றனர். மாடப்புறாவை அடையாளச் சின்னமாகக் கொண்டவர்கள் மாடை குலத்தினர் என்றும் சிலர் கூறியுள்ளனர். பொன்னாலும், பொன் நாணயத்தாலும் பெயர் பெற்ற குலத்தார் 'மாடைகுலத்தார்' என்ற கருத்தே வலியுடைத்தாகும்.

தே.ப. சின்னசாமி ''மாடு-செல்வம்; மாடு+ஐ -மாடை, அழகிய மாடு வளர்த்தவர்கள், அதனைச் செல்வமாகக் கொண்டவர்கள் மாடை குலத்தினர் ஆயினர்'' என்று கூறுகிறார்.

காளியப்பா வெள்ளகோயில், தளிகை, முத்தாண்டி பாளையம், மயில்ரங்கம், பிள்ளைப்பதி, பிள்ளைக் கரையூர் ஆகியவை மாடை குலத்தார்களின் காணியூர்கள் என்று முதலில் கூற அனைவரும் அதையே வழிமொழிகின்றனர்.

**வெள்ளகோயில் காணிப்பாடலில்**

'மருவுவெள் ளையம்பதி யில்வளர் குருகுலனை
    வாகுசேர் ஆந்தை குலனை
வரிசைதிகழ் வில்லியைப் பிரபுடிக மாடையை
    மதுரமொழி ஓதாளனை
வலிமையது சேர்கின்ற அதிகவண் ணக்கனை
    மகராசர் யோகமருவும்
வாகுற்ற தனஞ்செயனை''

என்று கூறுகிறது. பிரபுடிக மாடை என்பதால் அவர்கள் அதிகாரம் தெரிகிறது.

வெள்ளகோயில் மாடை குலத்தார் சிவமலை முருகன் மீது மிகுந்த பக்தி உடையவர்கள். சிவமலைக் கோயிலுக்கு அவர்கள்

வெள்ளிச் சப்பரம், முத்துப் பந்தல், வெள்ளைக் குடை, வெண் சாமரம் இவற்றை அளித்த விபரத்தைச் சிவமலைக் குறவஞ்சி கூறுகிறது.

'துள்ளு மயிலின் துரைமுரு கேசர்
சுகந்த சிவமலை வேல்முரு கையற்கு
வெள்ளியில் சப்பரமும் வெண்முத்துப் பந்தலும்
வெண்குடை வெண்சா மரமும் தினம்தரும்
வெள்ளைகல் லூர்திரு மாடை கோத்திரம்''

என்பது சிவமலைக் குறவஞ்சிப் பாடலாகும்.

சின்னத்தம்பி நாவலரின் ஓதாளர் அலகுமலைக் குறவஞ்சியில் ''பிள்ளைப்பதி மாடைகுலப் பழனியப்பன்'' ''தளிகை மாடைகுல நல்லசாமி'' ஆகியோர் புகழ்ந்து கூறப்பட்டுள்ளனர்.

**கல்வெட்டுகள்**

மயில்ரங்கம் தீராவினை தீர்த்த தம்பிரான் கோயிலில் வெள்ளகோயில் ஊரார் அங்கரங்க வைபோகத்துக்குக் கொடையாக பொம்மநல்லூரில் 250 குழி நிலம் கொடுத்தனர். இதைக் குறிக்கும் கல்வெட்டு ஆவணத்தில் கையெழுத்திட்டவர்களில் ''வெள்ளாளர் மாடைகளில் மழவராயர், அவிநாசி மழவராயர்'' ஆகியோர் பெயர்கள் உள்ளன.

கவசை கோயில்பாளையம் காலகாலேசுவரர் கோயிலில் கொங்குச் சோழமன்னன் விக்கிரம சோழன் காலத்தில் திருப்பணி நடைபெற்றது. மாடை குல அரையன் காவன் பெரியமண்டபம் இரண்டாவது தூண் ஆகிய நாயகத் தூணைத் தன் கொடையாக அளித்தார் (1258).

'ஸ்வஸ்திஸ்ரீ விக்கிரம சோழ தேவற்கு யாண்டு மூன்றாவது வழலையூர் நாட்டுக் கருவலூரிலிருக்கும் வெள்ளாளர் மாடைகளில் அரையன் காவனேன் ஆளுடையார் காலகால

தேவர் கோயில் பெரிய திருமண்டபத்தில்

இந்நாயகத் தூண் என் தன்மம் ஸ்ரீபன்மாகேசுவரர் ரட்சை''

என்பது அதைக் குறிக்கும் கல்வெட்டாகும்.

வீரராசேந்திர சோழனின் இருபத்தைந்தாவது ஆட்சி யாண்டில் (1232) பொங்கலூர் நாட்டு நடுவில் பருத்தியூர், வெள்ளாளர் மாடை குல முழையன் தேவனான பொன்னம்பலச்சில செட்டி என்பவர் நாயனார் நக்கீசுவரமுடையார் கோயிலில் சந்தி விளக்கு ஒன்று வைக்க கோயில் காணியுடைய சிவப்பிராமணர் வசம் பழஞ்சலாகை அச்சு ஒன்று கொடையாகக் கொடுத்தார்.

## 84. மாப்புள்ளி குலம்

கல்வெட்டுகளில் மட்டுமே இக்குலம் குறிப்பிடப் பெறுவதால் இக்குலம் பற்றி எவரும் குறிப்பிடவில்லை. புள்ளி என்பது மதிப்புயர் பெரியவர்களைக் குறிக்கும் ஒரு பெயர். ''அவர் பெரிய புள்ளி'' என்பது அதைக் குறிக்கும். புள்ளிக் குளிகை, புள்ளி வராகன் என்று கூறும்போது செல்லத்தக்க மதிப்புடைய நல்ல நாணயம் என்பதைக் குறிக்கிறது. 'புள்ளிக்காரன்' என்ற சொல் செல்வம் மிக்கவரையும் குறிக்கும். சரியான அளவு என்பதையும் புள்ளி என்ற சொல் குறிக்கிறது. 'புள்ளி புக்க நிலம்' என்பது கல்வெட்டுத் தொடர். பெரிய தொகை, ஆள், பெரிய மலை (இமயம்) என்ற பொருளையும் புள்ளி என்ற சொல் தருகிறது. மேற்கண்டவற்றில் ஏதாவது ஒரு பொருளில் மாப்புள்ளி குலம் பெயர் பெற்றிருக்கலாம். மா என்பது அடை மொழியாகும்.

மாப்புள்ளி குலத்தாரின் கல்வெட்டுகள் பொள்ளாச்சி வட்டம் பெரிய களந்தை, அவிநாசி வட்டம் திருமுருகன்பூண்டி ஆகிய இடங்களில் கிடைக்கின்றன.

விக்கிரம சோழ தேவரின் 10 ஆம் ஆட்சியாண்டில் (1283) பெரிய களந்தை ஆதீசுவரர் கோயில் திருப்பணி நடைபெற்றது. களந்தை வெள்ளாளன் மாப்புள்ளிகளில் கோவன் தேவன் ஆன உதையபாலன் என்பவர் அத்திருப்பணியில் பங்கு கொண்டு ஒரு தூண் கொடையாக அளித்துள்ளார். இக்கல்வெட்டு அத்தூணிலேயே பொறிக்கப்பட்டுள்ளது என்பது சிறப்புக்குரியதாகும்.

> 'ஸ்வஸ்திஸ்ரீ விக்கிரம சோழதேவற்கு யாண்டு பத்தாவது களந்தையிலிருக்கும் வெள்ளாளரில் மாப்புள்ளிகளில் கோவன் தேவனான உதையபாலன் தன்மம் இத்தூண். இது பன்மாகேஸ்வரர் ரட்சை''

என்பது கல்வெட்டாகும். கோவன் தேவன் மாப்புள்ளி குலத்தாரின் இயற்பெயர் உதையபாலன் என்பது அவர் பெற்ற பட்டப் பெயராக இருக்கலாம். இக்கல்வெட்டு மூலம் களந்தை மாப்புள்ளி குலத்தாரின் காணியூர்களில் ஒன்று என்று தெரிகிறது.

விக்கிரம சோழதேவரின் 12 ஆம் ஆட்சியாண்டில் (1285) வாயறைக்கா நாட்டுப் பல்லவிடத்தில் வெள்ளாளன் மாப்புள்ளி களில் சோழன் பறையனான தனபாலன் என்பவர் திருமுருகன்பூண்டி நாயனாருக்கு அமுதுபடி படைப்பதற்காக இக்கோயில் காணியுடைய சிவப்பிராமணர் காஸ்யப கோத்திரத்து அவிநாசி முருகனான சோழியன் சார்ந்தாரைக் காப்பான் திருவேகம்ப முடையான் வசம் 10 அச்சு பொற்காசுகளை மூலப் பொருளாக வைத்தார். இக்கொடை சந்திர சூரியர் உள்ளவரை நடைபெற வேண்டும் என்றும், இக் கொடையை எதிர்காலத்தில் பல சிவனடியார்கள் காப்பாற்ற வேண் டும் என்றும் தன் விருப்பத்தையும் மாப்புள்ளி குல வேளாளர் தெரிவித்துள்ளார்.

இக்கல்வெட்டில் மாப்புள்ளி குல வேளாளர் தனபாலன் என்பவருக்கு ‘சோழன் பறையன்’ என்ற அடைமொழி கொடுக்கப் பட்டுள்ளது. ‘வெள்ளாளர் மாப்புள்ளி’ என்று குலமும் குடியும் குறிக்கப்பட்டு விட்டது. ‘சோழன் பறையன்’ என்பது கொங்குச் சோழன் விக்கிரம சோழன் காலத்தில் தனபாலன் வகித்த பதவிப் பெயராகும். சோழன் ஆணைகளை அறிவிப்பது அவர் பணியாக இருக்கலாம்.

## 85. முத்தன் குலம்

நவமணிகளில் ஒன்றான முத்தோடு தொடர்புடையவர்களாக முத்தன் குலத்தினர் கருதப்படுகிறார்கள். கடற்கரை முத்துக்களை கொங்கு நாட்டில் அறிமுகப்படுத்திய பெருமக்கள் வழிவந்தவர் களாக இருக்கலாம்.

டி.எம்.காளியப்பா 'முத்தன் என்னும் தமிழ்ச்சொல் சிறந்தவன், உயர்ந்தவன், 'பளிச்' என்று மேலான நிலையில் இருப்பவன் என்று பொருள் தரும். முத்துசாமி (காரியுண்டிக் கடவுள்) வழியாக ஏற்பட்ட பெயராகவும் இருக்கலாம் என்று கூறுகிறார். இதை அப்படியே மோகனசுந்தரம் வழிமொழிந்துள்ளார்.

''முத்துக்களால் ஆன அணிகலன்களை மிகவும் விரும்பி அணியும் இயல்பினர். அதனால் இவர்கள் முத்தர்-முத்தன் எனப் பெயர் பெற்றனர்'' என திருப்பூர் பழனிசாமிப் புலவர் தம் 'கொங்குச் செல்வி' என்னும் நூலில் எழுதியுள்ளார்.

நல். நடராசன் 'முத்தன் குலம் உழவுத் தொழிலால் பெயர் பெற்றது. முத்து என்பது ஆமணக்கு, பருப்பு போன்றவைகளைக் குறிக்கும் பொதுப் பெயர். இவ்வாறு இவைகளை விளைவிக்கும் உழவர்கள் இப்பொருளோடு தொடர்புகொண்டு முத்தன் குலம் என்ற பெயர் பெற்றனர்'' என்று கூறுகிறார்.

தே.ப. சின்னசாமி 'வெள்ளாளர்களில் முத்தாக முதன்மையாக வாழ்ந்தவர்கள் முத்தன் குலத்தார்' என்று கூறியுள்ளார்.

முத்தூரின் முதல் காணியாளர்கள் முத்தன் குலத்தார். காணிப் பாடல்,

'முத்தன் மணியன் முதற்சேரன் வெள்ளம்பர்
மெத்துபொரு ளந்தையுடன் மேலான - சித்திபெறும்
காவலியர் நன்முதலிக் காமருடன் ஏழ்முதன்மை
தாவுபுகழ் முத்தூர்த் தலம்'

என்று கூறுகிறது. இக்காணிப்பாடல் 'அருள்மிகு குப்பணசுவாமி கோயில் புணருத்தாரணம் காணிப்பாடலில் கண்ட காணியாளர் களால் செய்யப்பட்டது' என்ற முன்னுரையோடு முத்தூர் குப்பண்ண சுவாமி கோயிலில் கல்வெட்டாகவும் வெட்டப் பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

காங்கய நாட்டுக் காணிப்பாடல்,

''அழகான முத்தூரில் வளர்கின்ற முத்தனை
அய்யமிகு மணிய குலனை
அகளங்க சேரனை தனபதி வெள்ளம்பனை
அனதான பொருளந்தையை''

என்று கூறுகிறது. வேட்டுவர்களையும் (காவலியர்), முதலியார் களையும் இப்பாடல் குறிக்கவில்லை.

இன்று முதன்மைக் காணியாளர்களாக மணியன் குலத்தாரே உள்ளனர். முதலில் முத்தூரை உருவாக்கியவர்கள் முத்தன் குலத்தாரே யாவர். மோகனூர் மணியன் குலத்தார் இங்கு வந்தபோது முத்தன் குலத்தார் மணியன் குலத்தார்க்குப் பெண் கொடுத்து மாப்பிள்ளைக்கு முதற்காணியுரிமை கொடுத்தனர். இதனை முத்தூர் முன்னாள் மணியம் அமரர் எம்.வி.குப்புசாமிக் கவுண்டர் தான் எழுதிய 'முத்தூர்த் தல மாண்பு' என்ற நூலில் மிகத்தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார்.

ஆனால் திருப்பூர் பழனிசாமிப் புலவர் முத்தன் என்னும் கூட்டத்தாரை வென்று மணியன் கூட்டத்தார் முத்தூரைத் தமதாக ஆக்கினர் என்று எழுதியுள்ளார் (1949). இதைப் பார்த்த டி.எம்.காளியப்பா ''மணிய குலத்தார் போர் புரிந்து முத்தூரைக் கைப்பற்றியதாக நினைக்கத்தக்க ஆதாரங்கள் உள்ளன'' என்று எழுதினார்(1978). நல். நடராசன் ''முத்தர்களின் முத்தூர்க் காணியை மணியன் குலத்தினர் கைப்பற்றிக் கொண்டதால் முத்தர்கள் கொங்கின் பிற பகுதிகளுக்குக் குடிபெயர வேண்டிய நிலை ஏற்பட்டது'' என்று தம் நூலில் எழுதியுள்ளார்.

இவர்கள் மூவரும் கூறியவை மாறான செய்தியாகும். கொங்கு வேளாளரில் ஒரு குலத்தார் மற்ற குலத்தாருடன் போர் செய்து வெளியேற்றி விட்டு அவ்வூரில் காணியுரிமைபெற்றதாக கொங்குச் சமுதாய வரலாற்றில் எங்கும் நடக்கவில்லை. அவ்வாறு நடைபெற்ற நிகழ்ச்சிகட்கு எந்த ஆதாரங்களும் இல்லை. உள்ளூர்ப் பெரியவர் மணியகாரர் அமரர் எம்.வி. குப்புசாமிக் கவுண்டர் அவர்கள் கூறுவதே நடைபெற்ற உண்மையான நிகழ்வாகும்.

ஒரு ஊரின் காணியாளர்கள் புதியதாக வந்த வேளாளர்களை வரவேற்று தங்கள் குலத்தினராக இருந்தால் அண்ணன் தம்பி என்றும், வேறு குலத்தினராக இருந்தால் மாமன் மைத்துனன் என்றும் உறவுடன் உரிமை கொண்டாடி கிழ்வுடன் ''சேர வாரும் செகத்தீரே'' என்று இணைந்து வாழ்ந்ததாகவே கொங்குச் சமுதாய வரலாறு உள்ளது.

இன்றும் முத்தன் குலத்தார் காணியுரிமையோடு வாழ்ந்து முத்தூர் முன்னேற்றத்திலும், கோவில் திருப்பணியிலும் பங்கு கொண்டுள்ளனர். அவர்கள் முத்தூரை விட்டு வெளியேறவில்லை.

முத்தன் குலத்தாரோடு மணியன் குலத்தார் இணைந்து தென்னிலைப் போரில் ஈடுபட்டுள்ளனர். இணைந்து மாற்றாரை எதிர்த்துள்ளனர். இணைந்து சிறைப்பட்டுள்ளனர். வீர மரணத்தில் கூட இணைந்துள்ளனர்.

ஏழ்முதன்மை என்று முதலில் கூறப்பட்டது. பின்னர் வேட்டுவரில் பூவலியர், மணியவேட்டுவர், வெங்காஞ்சி வேட்டுவர், கொங்குச் செட்டியார், கொங்கு நாடார் ஆகியோரும் முத்தூர்க் காணியாளர் ஆயினர். இது முதல் காணியாளரான முத்தன் குலத்தாரின் சமூக ஒற்றுமையைக் காட்டுகிறது.

காங்கய நாடு, தென்கரை நாடு, பூந்துறை நாடு, அரைய நாடு ஆகிய 4 நாடுகளில் வாழும் கொங்கு வேளாளரிடம் தென்னிலை வேட்டுவர் தலைவன் கொங்குராயன் சவளக் காணிக்கை

(தலைவரி) வசூலித்து வந்தான். பல ஊர்களில் புகுந்து வெட்டிக்குத்தி ஆடு-மாடுகளைக் கொள்ளையிட்டான். நாட்டார் விருப்பப்படி பழையகோட்டை பயிரகுல அழகன் சர்க்கரை தென்னிலை மீது போர் தொடுத்து கொங்குராயனை வென்றார்.

தென்னிலைப் போரில் முத்தூரைச் சேர்ந்த 13 பேர் இறந்து போனார்கள். முத்தூர் முத்தன் குலத்தாரில் சோழியப்ப கவுண்டர் மகன் பாண்டியப்பன் வீரமரணம் எய்தினார். விசய நகர ஆட்சிக்காலத்தில் வரி கொடுக்காத பலர் சிறைப்பட்டனர். அவர்களில் முத்தன் குல சின்னாக் கவுண்டர் மகன் பொன்னாண்டான் என்பவர் ஒருவர். வரிக்கொடுமையால் பிற காணியாளருடன் முத்தன் குலத்தாரும் வாழவந்தி நாட்டில் குடியேறினர். 12 ஆண்டுகள் முத்தூர் பாழாகக் கிடந்தது. முத்தூர் மிகப்பெரிய வணிக நகரமாகத் திகழ்ந்தது. வணிக சமூகத்தவரின் பல கல்வெட்டுகள் முத்தூரில் உள்ளன.

முத்தன் குலத்தாருக்குக் கண்ணபுரம் காணியுண்டு என கண்ணபுரம் காணிப்பாடல் கூறுகிறது.

''அமரர்தொழும் கண்ணையில் அதனில்வளர் செங்கண்ணன்
அரசுபுரி அதியனவனை
அளப்பரிய ஓதாள குலவனை நலமிகும்
ஆசைமிகும் மால்பதரியை

அன்புமிகும் கணவாள குலதீரர் தங்களை
அச்சமிகு மாவெட்டியை
அனைவர்புகழ் செட்டியை முத்தன்வண் ணக்கனை
அற்புதக் கடுந்தூளியை''

என்பது கண்ணபுரக் காணிப்பாடலாகும். கண்ணபுரத்தில் உள்ள கரிய காளியம்மன் முத்தன் குலத்தார்க்குக் குலதெய்வம் ஆகும்.

வாரக்க நாட்டு நாரணாபுரம் செப்பேட்டில் அங்காள பரமேசுவரிக்குக் கொடுக்கும் கொடைகள் குறிக்கப்பட்டுள்ளன.

கொடை அளித்தவர்களில் முத்தூர் முத்தன் குலம் குழந்தைக் கவுண்டர், மழவராய நயினாக் கவுண்டர் என்போர் குறிக்கப் பட்டுள்ளனர். 'மழவராயன்' என்பது அரசன் கொடுத்த பட்டப் பெயராக இருக்கலாம். ஓடத்துறையிலும் முத்தூர் முத்தன் குலத்தார் குடியேறி வாழ்ந்ததாக நாரணாபுரம் செப்பேடு கூறுகிறது. முத்தகுலச் சின்னாரு கவுண்டர், குழந்தை கவுண்டர், சின்னப்ப கவுண்டர் ஆகியோர் குறிக்கப்படுகின்றனர்.

முன்னவர்கள் எழுதிய வரலாற்று நூலில் முத்தூர், உடையகுளம், கண்ணபுரம், சோமந்துறை சித்தூர், நாரணாபுரம், ஓடத்துறை, அன்னூர், இரணபுரம், சோமனூர், பல்லடம், முதலிய பல ஊர்களைக் காணியூர்கள் என்று குறிக்கப்பட்டுள்ளன.

## பெரியகோட்டைத் திருப்பணி

திண்டுக்கல் மாவட்டம், பழனி வட்டத்தில் உள்ள பெரியகோட்டை என்னும் ஊரில் சோழீசுவரர் கோயில் உள்ளது. விக்கிரம சோழனின் 20ஆம் ஆட்சியாண்டில் (1293) அண்டநாட்டுப் பொருளூர் என்னும் ஊரைச் சேர்ந்த முத்தன்குல முழையன் வேளான் தமிழதரையன் என்பவர் அக்கோயில் திருப்பணி நடக்கும்போது திருநிலைகால்களைத் தம் கொடையாகக் கொடுத் துள்ளார்.

> 'ஸ்வஸ்திஸ்ரீ விக்கிரமசோழதேவர்க்கு யாண்டு பதினேழாவதற் கெதிராவது மூன்றாவது அண்ட நாட்டுப் புலரியூரில் வெள்ளாளன் முத்தர்களில் முழையன் வேளான் ஆன தமிழதரையனேன் திருநிலைகால் என் தன்மம்'

என்பது அதைக் குறிக்கும் கல்வெட்டாகும். முத்தன்குல வேளாளர் 13ஆம் நூற்றாண்டில் 'தமிழதரையன்' என்று பெயர் பெற்றிருப்பது சிறப்புமிக்கதாகும். அரசு அலுவலர் ஆன அவருக்கு அரசன் அளித்த பட்டப் பெயராகலாம். புலரியூர் என்பது பொருளூரின் பழம் பெயராகும்.

முத்தூரில் மணியகுலச் செல்லப்ப கவுண்டர் மகனாகத் தோன்றித் தெய்வநிலைக்கு உயர்ந்து எல்லோராலும் வணங்கப் படுபவர் சின்னமுத்தூர் கோயிலில் குடிகொண்டுள்ள செல்லக் குமாரர். மணிய குலச் செல்லக்குமாரரை இளமையில் வளர்த்தவர் முத்தன்குலக் குமராயி. பின் குமராயி செல்லக் குமாரரைக் குருவாக ஏற்று அறப்பணிகள் பல செய்தார். குமராயி ஏற்படுத்திய மடத்தில் தான் இன்று செல்லக்குமாரர் கோயில் கொண்டுள்ளார். முத்தன் குலக் குமராயி மணியகுல அத்தாய், முத்தாய், செல்லாய் ஆகிய கன்னிப் பெண்களோடு இணைந்து ஆற்றிய சமயப்பணிகள் பற்பல. இவர்கள் எல்லோருக்கும் சின்னமுத்தூரில் கோயில் உள்ளது.

திருநாவுக்கரசர் சகோதரியார் திலகவதியார் போல முத்தூரில் முத்தன், மணிய குலப் பெண்கள் கன்னிப் பெண்களாக வாழ்ந்து சமயப்பணிகள் ஆற்றி இறைநிலை எய்தியது கொங்குச் சமய வரலாற்றில் மிக முக்கியமான நிகழ்ச்சியாகும்.

# 86. மூலன் குலம்

மூலன் என்பது சங்க காலத்தில் வழக்கிலிருந்த தொன்மையான பெயர். மூலனார், மாமூலனார், ஆவூர் மூலன்கிழார், ஐயூர் மூலன் கிழார் என்பன போன்ற பல பெயர்களைச் சங்க இலக்கியங்களில் காணுகின்றோம். ஆதி சைவ நூலாகிய திருமந்திரத்தை எழுதியவர் திருமூலர். திரு என்பது சிறப்பு அடைமொழி. அவர் பெயர் மூலர் என்பதேயாகும்.

நல். நடராசன் கொங்கு வேளாளரில் ''மூத்த குடியினர், முதன்மைக் குடியினர்'' மூல குலத்தார் என்று கூறுகிறார். மூல குலத்தாரில் 'கவறை மன்றாடி' என்பவர் ஒருவர் இருந்ததாகவும், அவர் தனக்குரிய அன்னக்கொடியை ஏற்றினார் என்றும் கூறப்படு கிறது. எனவே மூல குலத்தலைவருக்கு 'அன்னக்கொடி' இருந்தது என்று கூறப்படுகிறது. பழைய கோட்டைப் பயிரகுலச் சர்க்கரை மன்றாடியார்க்கும் அன்னக்கொடி உண்டென்று கூறப்படுகிறது.

நல். நடராசன், மோகனசுந்தரம், தே.ப. சின்னசாமி ஆகியோர் பழையகோட்டைப் பயிர குலத்தார் மூல குலத்தாரைத் தாக்கி அன்னக் கொடியைக் கைப்பற்றியதாகவும் அதனால் மூலகுலத்தார் தங்கள் காணியாட்சியூராகிய மூலனூரை விட்டு வெளியேறிக் கொங்கு நாட்டின் பல பகுதிகளுக்குச் சென்று விட்டனர் என்றும் கூறுகின்றனர். அவர்கள் கூறியபடியிருந்தால் மூலனூரில் பயிர குலத்தார் காணி கொண்டிருக்கவேண்டும். அங்கு பயிரன் குலத்தார் காணியாளராக இல்லை. கொங்கு வேளாளரில் போர் செய்து மற்றவர் காணியைக் கைப்பற்றியதாக ஒரு ஆதாரம் கூட இல்லை. மூலன், பயிரன் இருவரும் அன்னக்கொடியைத் தங்கள் கொடியாகக் கொண்டிருக்கலாம்.

தே.ப. சின்னசாமி கோயிலில் முதன்மைத் தெய்வத்தை 'மூலவர்' என்றும், முதல் நூலை 'மூல நூல்' என்றும் கூறுகிறோம். அதுபோல வேளாளரில் மூல குலத்தார் முதன்மையர் என்று

கூறுகிறார். அவர் திருமந்திரம் எழுதிய திருமூலர் கொங்கு வேளாளரில் மூல குலத்தைச் சேர்ந்தவர் என்றும், அவர் வழி வந்தவர்களே கொங்கு வேளாளரில் மூல குலத்தார் என்றும் கூறுகிறார்.

பெருமாநல்லூர், அவிநாசி, மூலனூர், புதுப்பாளையம் முதலிய ஊர்கள் மூலன் குலத்தார் காணியூர்கள் என்று கூறப்படுகிறது.

தென்கரை நாட்டின் மூலனூரில் முதல் காணியாளர்கள் மூல குலத்தார் ஆவர்.

'மூலகுல சேரிலான் முன்பூசன் செட்டியுடன்
சீலமிகு கம்பளத்தான் சீராளன் - மூலநகர்க்
காணிகொண்ட செல்வக் கருணை தழைத்தோங்க
வேணமுதன் மையைந்து மே''

என்பது மூலனூர்க் காணிப்பாடலாகும்.

## அமராவதியாற்றில் அணைகட்ட எதிர்ப்பு

மதுரை நாயக்கர் காலத்தில் கொங்கு 24 நாட்டு அதிகாரியாக இருந்த வீரப்பராயர் அனுமதியுடன் மூலனூர்ப் பூசகுலத் தொண்டைமானும் சங்கரண்டாம்பாளையம் வேணாடுடையாரும். அமராவதி யாற்றில் அணை கட்ட முயற்சி செய்தனர். மூல குலத்தாளி தலைமையில் சேரிலான் குலத்தார். குழாய குலத்தார், கம்பளத்தான், காவுலவன் (வேட்டுவர்) ஆகியோர் தங்கள் படையோடு வந்து எதிர்த்தார்கள் - விவாதம் செய்தனர். யார் சொல்லியும் சமாதானம் ஆகவில்லை. மதுரை நாயக்கரிடம் வழக்குச் சென்றது.

மீனாட்சியம்மன் சன்னதியில் இரு சாரார் பெயரையும் சீட்டு எழுதிப்போட்டு எடுக்க முடிவு செய்ததில் மூல குலத்தார் அணிக்குத் தோல்வி ஏற்படுகிறது. தென்கரை நாட்டுப் பட்டயம் கீழ்வருமாறு கூறுகிறது.

> ''முந்தி அந்த மூல குலத்தாளி வகையராப் பேர்களை ஸ்தானஞ் செய்து சுவாமிக்கு அபிஷேக தீபாராதனை ஆகும்போது உங்களுடைய சீட்டை வையுங்கள். நீங்கள் மாலை சந்தனம் போட்டுக்கொண்டு யிடம்பிரி வலம்பிரி சுத்தி வந்து நீங்கள் யெடுங்கள். உங்களுக்கே அந்த சீட்டு வந்தால் நீங்களே அணைகட்டலாமென்று சொன்னார்கள். யிவர்கள் அந்தப்படிக்கி நேம நிஷ்டையாய் வந்து கோயிலுக்குள் போயிக் கும்பிடும் போது சுவாமியிடத் திலிருந்த தீபம் மறைஞ்சு போச்சுது. பின்னும் சர்ப்பமானது சுவாமியிடத்திலிருந்து குறுக்கே விழுந்தது. பின்னும் அநேக காரியம் உண்டாச்சுது''

என்பது தென்கரை நாட்டுப் பட்டயச் செய்தியாகும். தொண்டைமான், வேணாடுடையார் பேருக்குச் சீட்டு வந்தது.

**கல்வெட்டுகள்**

பெருமாநல்லூரின் பழைய பெயர் ஒத்தனூரான பெரும்பழன நல்லூர் என்பதாகும். பெரும்பழனம் என்றும் கூறப்பட்டது. அங்குள்ள உத்தம சோழீசுவரர் கோயிலில் மூலன் குலத்தாரின் இரண்டு கல்வெட்டுகள் கிடைத்துள்ளன.

வீரபாண்டிய தேவனின் ஆறாவது ஆட்சியாண்டில் (1271) ஒத்தனூர் ஆன பெரும்பழனத்து வெள்ளாளன் மூலரில் அவிநாசி முதலியான சோழ நாராயணக் காமிண்டன் பெருமாநல்லூர் உத்தம சோழீசுவரமுடையார் கோயிலில் தீபம் வைக்க ஒரு அச்சு பொற்காசு கொடுத்தார். இவ்வாறு பொன் மூலப் பொருள் வைத்து எரிக்கும் விளக்கு நந்தா தீபம், சந்தியா தீபம் என்றுதான் கூறப்பெறும் இக்கல்வெட்டில் 'தூப தீபம்' என்று கூறுவது அரிய செய்தியாகும்.

மூல குல சோழ நாராயணக் காமிண்டன் அவினாசி ஊர்த் தலைவராக இருந்துள்ளார். அதனால் அவர் 'அவிநாசி முதலி' என்று

அழைக்கப்பட்டுள்ளார். இவர் சோழ அரசின் அதிகாரியாக இருந்துள்ளார். காமிண்டன் பட்டம் பெற்றவர்.

மதுரை திருமலை நாயக்கர் ஆட்சிக்காலத்தில் (1635) பெருமாநல்லூர் காணியுடைய மூல குலம் முத்தையன் என்பவர் பெருமாநல்லூர்ச் சந்தையில் கிடைத்த வருவாயைக் கோயிலுக்கு அளித்ததை ஒரு கல்வெட்டுக் கூறுகிறது. மூல குல உத்தமன் ஊர் அதிகாரியாக இருந்திருக்க வேண்டும். இதைக் குறிக்கும் கல்வெட்டு வாசகம் கீழே கொடுக்கப்படுகிறது.

> ''யுவ வருஷம் சித்திரை மாதம் ஸ்ரீமத் ராமப்பய்யரவர்கள் காரியத்துக்குக் கர்த்தரான சிதம்பரநாத பிள்ளை பாறபத்தியத்தில் வடபரிசார நாட்டு ஒத்தனூரான பெரும்பழனத்து காணியுடைய வெள்ளாளர் மூலர்களில் உத்தமன் மேற்படியூர் சந்தையில் மகமை கண்ட ஆதாயம் சுவாமி உத்தம சோழீசுரமுடையார்க்கு அபிஷேக நெய் வேத்தியம் நந்தாதீபம் சந்தியாதீபத்துக்கு அளித்த தன்மம் பரிபாலனமாக நடத்தின பேரெல்லாம் காசி ராமேசுவரம் சேவித்த பலன் பெறுவாராகவும், இந்த தன்மம் விலக்கினவர்கள் கங்கைக் கரையில் காராம்பசு, பிராமணன் மாதா, பிதா, குரு இவர்கள் அஞ்சு பேரையும் கொன்ற தோஷத்திலே போகக்கடவாராகவும்.''

# 87. மேதி குலம்

மேதி என்ற சொல்லுக்கு எருமை என்ற பொருள் உண்டு. அதனால் இக்குலம் எருமை குலம் என்றும் அழைக்கப்பெறும். எருமை என்ற பெயரிலும், எருமையூரன் என்ற பெயரிலும் சங்க காலத்தில் குறுநில மன்னர்கள் வாழ்ந்துள்ளனர். தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனோடு எதிர்த்துப் போர் செய்து தோற்ற ஐம்பெரும் வேளிருள் எருமையூரன் ஒருவன்.

எருமை வெளியனார் என்ற புலவரும், அவர் மகன் எருமை வெளியனார் மகனார் கடலனார் என்ற புலவரும் பாடிய பாடல்கள் சங்க இலக்கியங்களில் இடம் பெற்றுள்ளன. அவர்களை எருமை நாட்டு வெளியம் என்ற ஊரைச் சேர்ந்தவர்கள் என்றும், 'எருமை வெளி' என்பதே ஊர்ப் பெயர் என்றும் கூறுவர். எருமையூர் - இன்றைய மைசூர் என்று ஆய்வாளர் கூறுவர்.

மேதி குலத்தாரின் ஆதிக்காணி கீழ்க்கரைப் பூந்துறை நாட்டின் படைவீடு ஆகும். அங்கிருந்து மேல்கரைப் பூந்துறை நாட்டுப் பெருந்துறைக்கு வந்து கொங்குச் செட்டியாரிடம் பெருந்துறையை விலைக்கு வாங்கிக் குடியேறினர்.

படைவீட்டிலிருந்து மேதி குலத்தாருக்கு வெளியேற வேண்டிய நிலை வந்ததை தி.அ. முத்துசாமிக் கோனார் தம் 'கொங்கு நாடு' நூலில் குறிப்பாகக் கூறுகிறார். படை வீட்டில் கணவனை இழந்த ஒரு பெண் இருந்தாள். அவள் கருவுற்றிருந்தாள். மேதி குலத்தாரில் ஒருவன் அப்பெண்ணின் சொத்துக்களை அபகரிக்க வேண்டி அவள் ஒழுக்கம் கெட்டவள் என்றும் பிறரோடு கூடிக் கருவுற்றாள் என்றும் குற்றம் சாட்டினான். ஊர்ப் பெரியவர்கள் விசாரித்தனர். ''ஐயா, கோயிலில் வந்து விசாரியுங்கள்'' என்று அப்பெண் கேட்டுக் கொண்டாள். மேதி குலத்தான் குற்றம் சுமத்தினான். எனக்கு ஒன்றும் தெரியாது என்று அந்த அபலைப் பெண் தெய்வத்தை வேண்டினாள்.

குற்றம் சாட்டியவன் 'எனக்கு ஏதோ செய்கிறது' எனக் கூறி உடனே மரணம் அடைந்தான். எல்லோரும் திடுக்கிட்டனர். இறந்த மேதி குலத்தான் மனைவி ஓடிவந்து அழுது புலம்பி ''இப்பெண் கற்புடையவளாக இருந்தால் கற்புத் தன்மையால் இறந்த என் கணவனை எழுப்ப வேண்டும்'' என்றாள். முன்பு போலவே எனக்கு ஒன்றும் தெரியாது என்று கூறி அந்த அபலைப் பெண் தெய்வத்தை வேண்டினாள். இறந்த மேதி குலத்தான் தூங்கி எழுந்தவனைப் போல் உயிர் பெற்று எழுந்தான்.

அபலைப் பெண் மீது அபாண்டமாகப் பழி சுமத்திய மேதி குலத்தான் இச்சம்பவத்திற்குப் பின்தொடர்ந்து படைவீட்டில் வாழ விரும்பவில்லை. தன் பங்காளிகளோடு வெளியேறிப் பெருந்துறை யில் காணி விலைக்கு வாங்கிக் குடியேறினர்.

படை வீட்டில் இன்று வாழும் காடை குலத்தார் ஒருவர் 'இங்கு அந்தக் காலத்தில் மேதியாங் கூட்டத்தார் வாழும்போது ஊர் செழிப்பாக இருந்ததாம். அவர்கள்குடிபோனபின் ஊரே பாழாகி விட்டது'' என்று கூறினார்.

நசியனூரில் கண்ணகுலம் செங்கோடன் நல்லதம்பிக் கவுண்டர் என்பவர் இருந்தார். அவருக்கு ஆயி அம்மாள் என்ற பெண்மகள் இருந்தாள். அவள் வெள்ளைப் பிள்ளையாக இருந்ததால் எவரும் மணம் செய்து கொள்ள விரும்பவில்லை.

வெள்ளைப் பெண் ஆயி அம்மாளை பூந்துறைக் காடை குல வாரணவாசிக் கவுண்டர் மகன் தம்பி நல்லைய கவுண்டன் மணம் செய்து கொண்டார். நசியனூர்க் கண்ணகுலச் செங்கோடன் நல்லதம்பிக் கவுண்டர் தன் மாமன் மைத்துனன் முறையுடைய மேதிகுலம் பழனிக் கவுண்டருக்கு 500 பூநாகரம் பணம் கொடுத்து பெருந்துறையில் பாதிக் காணியை விலைக்கு வாங்கி தன் மருமகன் பூந்துறைக் காடை குலத் தம்பி நல்லைய கவுண்டருக்குச் சீதனமாகக் கொடுத்தார். தம்பி நல்லய்ய கவுண்டர் பெருந்துறைக் காடை என்று அழைக்கப்பட்டார்.

பெருந்துறையின் முதல் காணியுரிமை மேதி குலத்தாருக்கு என்றும், இரண்டாவது உரிமை காடை குலத்தாருக்கு என்றும் தீர்மானிக்கப்பட்டது. கோயில்களிலும் முப்பாட்டு உரிமை மேதி குலத்தார்க்கு என்றும், பிற்பாடு காடை குலத்தாருக்கு என்றும் முடிவாகியது.

''மேதி குலத்தாரும் காடை குலத்தாரும் இருவரும் அண்ணன் தம்பி போல கூடிப் பிழைக்கவும்'' என்று செப்பேட்டில் எழுதிய வண்ணம் இன்றும் பெருந்துறையில் மேதி-காடை குலத்தார் வேறு வேறு குலமாக இருப்பினும் இருவருக்குள் திருமண உறவு-சம்பந்தம் செய்து கொள்வது இல்லை.

பின்னர் ஏற்பட்ட காடை குலத்தார் தொடர்பான ஒரு வழக்கில் கூட உடன் இருந்து, வழக்கு முறையிடவும் உடன் சென்றதால் மேதி குலத்தார் காடை குலத்தார் செலுத்த வேண்டிய வெற்றிக் காணிக்கையில் சரி பங்குத் தொகையைச் செலுத்தியுள்ளனர். இன்றும் மேதி-காடை குலத்தார் இணைந்து அறக்கட்டளை தொடங்கி யிருப்பது மட்டுமல்ல பெருந்துறைக் கோயில் திருப்பணி- திருவிழா ஆகியவற்றில் சம உரிமையுடன் சிறப்பாக வாழ்கின்றனர்.

**ஆவணங்களில் மேதிகுலம்**

பெருந்துறைச் சிவாலயம் சோழீசுவரர் கோயிலில் திருப்பணி நடைபெற்றபோது மேதி குலச் சூரியன் செல்லப்பகவுண்டர் செய்த திருப்பணியை (1734) அங்குள்ள கல்வெட்டு கூறுகிறது.

'ஆனந்தவருஷம் ஆடி மாதம் 20 தியதி சண்டேசர் விக்கிரகம்
மேதி குலத்தில் சூரியன் செல்லப்ப கவுண்டர் உபயம்'

என்பது பெருந்துறை சிவாலயக் கல்வெட்டாகும்.

பூந்துறை நாட்டுச் சபையில் 'பெருந்துறையில் வெள்ளாளன் எருமைகளில் உலகுடையார்' என்பவர் உறுப்பினராக இருந்தது உம்மத்தூர்த் தலைவன் நஞ்சராசனின் வெள்ளோடு சர்வ லிங்கேசுவரர் கோயில் கல்வெட்டு மூலம் தெரிகிறது.

பரஞ்சேர்வழி ஓதாளன் குல குள்ள காளியப்பகவுண்டர், வெள்ளகோயில் ஆந்தைகுலம் சென்னிமலைக் கவுண்டர் இருவரும் கொங்குச் செட்டியார், பூவாணி வேட்டுவர் ஆகியோரிடமிருந்து 1500 பொன்னுக்குத் திருவாச்சியை விலைக்கு வாங்கினர். இதற்காக எழுதப்பட்ட செப்பேட்டில் ''பெருந்துறை மேதிய குலத்தான் சென்னிமலைக் கவுண்டர்' கையெழுத்திட்டுள்ளார்.

**கொங்கு மண்டல சதகத்தில்**

மேதி குலத்தில் மருதாசலமுத்து என்பவர் வாழ்ந்துவந்தார். வீரம் மிக்க அவர் முனிவர்கள் முதலியவர்கட்குப் பல உதவிகள் செய்தவர். ஒரு முனிவர் (அகத்தியர் என்பர்) தவம் செய்து கொண்டிருந்தபோது எருமைத் தலையுடைய அரக்கன் ஒருவன் தோன்றி தவத்தைக் குலைக்க வந்தான். மேதிகுல மருதாசல முத்து எருமைத்தலை அரக்கனை அழித்தார்.

மேதிகுல மருதாசலமுத்து இரவலர்க்கு ஏற்படும் இடர்களை எல்லாம் தவிர்த்து அவர்களைக் காத்தவர் ஆவார்.

''குறுமுனி வேள்விப் பகடுஎன ராட்சதன் கோரமிக
உறுமிய பூமியில் பாய்ந்திடும் கொம்பை உதிரவெட்டி
எருமைதன் கோத்திரன் மருதா சலமுத்து இரவலர்க்கு
வறுமைத் துயரம் இடர்தவிர்த் தான்கொங்கு மண்டலமே''

என்பது கொங்கு மண்டல சதகப் பாடலாகும்.

## 88. வகையர் குலம்

கல்வெட்டுகளிலும், 96 கீர்த்திப் பாடலிலும் குறிக்கப்படும் குலம் வகையர் குலம். நம்பியூர், சேவூர், கீரனூர், திருமுருகன்பூண்டிக் கல்வெட்டுகளில் இக்குலம் குறிக்கப்படுகிறது.

வீரபாண்டிய தேவனின் 11ஆம் ஆட்சியாண்டில் (1276) நம்பியூர் வெள்ளாளர் வகையரில் முக்கண் ஆண்டான் என்பவர் நம்பியூர் தான்தோன்றீசுவரர் கோயிலில் ஒரு சந்தியா தீபம் வைத்தார். இக்கல்வெட்டில் நம்பியூர் நம்பிபேரூர் என்று குறிக்கப்படுகிறது.

சுந்தர பாண்டிய தேவனின் 27ஆம் ஆட்சியாண்டில் வடபரிசார நாட்டுச் சேவூரான செம்பியன் கிழானடி வெள்ளாளர் வகையர் குலத்தவர்களான அடியார்க்கடியான், பெரிய கேசன், பிள்ளைச் சிறுவன் ஆண்டான் என்போர் தங்கள் நிலத்தில் மூன்றில் ஒரு பகுதியை சேவூர் அழகப் பெருமாள் கோயிலுக்குக் கொடையாகக் கொடுக்க வணிகர்கட்கு அன்றாடு புள்ளிக்குளிகை வராகன் 1000க்கு விற்ற விபரம் கல்வெட்டில் காணப்படுகிறது.

வீரராசேந்திரனின் 40ஆம் ஆட்சியாண்டில் (1247) சேவூர் வெள்ளாளர் வகையரில் தேவன் என்பவர் திருமுருகன்பூண்டி நாயனார்க்குச் சந்தியா தீபம் ஒன்று எரிக்கக் கோயில் பண்டாரத்தில் பழஞ்சலாகை அச்சு ஒன்றை மூலப் பொருளாக வைத்தார். இக்காலத்தில் கொடைகள் பெரும்பாலும் கோயில் காணியுடைய சிவப்பிராமணர் வசமே அளிக்கப்பட்டன. இக்கல்வெட்டில் மூலப் பொருள் கோயில் பண்டாரத்தில் அளிக்கப்பட்டதாகக் கூறப்பட்டுள்ளது.

விக்கிரம சோழனின் 22ஆம் ஆட்சியாண்டில் (1278) கீரனூர் வடக்குக் கோயில் வெள்ளாளரில் வகையர் குல சோழன் பிள்ளை என்பவர் பொங்கலூர்க்கா நாட்டுக் கீரனூர் வாகீசுவரர் கோயிலில் சந்தியா தீப விளக்கு எரிப்பதற்காக ஒரு துளை கழஞ்சு பொன் கொடையாகக் கொடுத்தார்.

''ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீவிக்கிரம சோழ தேவர்க்கு யாண்டு இருபத்திரண்டாவது பொங்கலூர்க்கா நாட்டுக் கீரனூர் வடக்குக் கோயில் வெள்ளாளன் வகையரில் சோழன் பிள்ளையேன் ஆளுடையார் திருவாகீசுவரமுடையார்க்கு நான் வைத்த சந்தியா தீபம் விளக்கு ஒன்றுக்கு ஒடுக்கின பொன் துளைக்கழஞ்சு இக்கோயில் காணியுடைய சிவப்பிராமணன் காசிப கோத்திரத்துச் சுந்தன் ஆளவந்தான் ஆன சைவச் சக்கரவர்த்தியேன் கொண்டு கல்வெட்டிக் குடுத்தேன் குடங்கொண்டு கோயில் புகுவான் சந்திராதித்தர் வரையில் காப்பான். இது பன்மாகேசுவரர் ரட்சை''.

## 89. வண்ணக்கன் குலம்

கொங்கு வேளாளர்களில் மிகவும் சிறப்பானதோர் குலப் பெயரை உடையவர்கள் வண்ணக்கன் குலத்தினர். பழங்காலத்தில் நாணயம், மணிக்கற்கள் ஆகியவைகளைப் பரிசோதிப்பவர் 'வண்ணக்கன்' என்று அழைக்கப்பட்டார்.

### பெயரின் தொன்மையும் சிறப்பும்

சங்க காலத்தில் வண்ணக்கன் என்று பெயர் பெற்ற பலர் மதுரைத் தமிழ்ச் சங்கப் புலவர்களாக வீற்றிருந்து கவிதைகள் பல புனைந்துள்ளனர்.

'வண்ணக்கன் சாத்தனார்'
'வடம வண்ணக்கன் பெருஞ்சாத்தன்'
'வண்ணக்கன் சோருமங் குமரனார்'
'புதுக்கயத்து வண்ணக்கன் கம்பூர்கிழான்'
'விற்றூற்று வண்ணக்கன் தத்தனார்'

போன்றோர் சங்கப் புலவர் ஆவர்.

தொல்காப்பிய உரையில் ''வண்ணக்கர் காணத்தை நீலம் என்றல்'' என்ற குறிப்பு வருகிறது. ஈரோடு அருகே அறச்சலூர் மலைக்குகையில் மணியவண்ணக்கன் இசை, நாட்டிய அடைவு எழுத்துக்களை இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பே பொறித்துப் புகழ் பெற்றார். இந்தியாவில் கிடைக்கும் இசைக் கலை தொடர்பான கல்வெட்டுகளில் இதுவே பழமையானதாகும்.

கல்வெட்டுகளில் 'வண்ணக்கன்' 'வண்ணக்கக் கூலி' 'வண்ணக்கக் கரணத்தான்' 'வண்ணக்கு' என்ற சொற்கள் பயின்று வந்துள்ளன. நாணயம் அடிக்கக் கொடுக்கும் கூலி வண்ணக்கக்கூலி எனப்பட்டது. பரிசோதனை செய்பவன் 'வண்ணக்கக் கரணத்தான். பரிசோதனைத் தொழிலுக்கு 'வண்ணக்கு' என்று பெயர்.

'திண்ணிய உடம்பும், அழகிய உடம்பும் உடையவராய் இருத்தலின் இவர்கள் வண்ணக்கர் குலத்தார் என்று அழைக்கப் பட்டனர்' என்று கூறிய க.பழனிசாமிப் புலவர், ''இவர்கள் யாரையும் போரில் வணக்கி வந்தவர் ஆதலின் வணக்கர் என்று அழைக்கப்பட்டு வண்ணக்கர் ஆயினர்'' என்றும் கூறியுள்ளார்.

**வண்ணக்கர் குலக் காணியூர்கள்**

இச்சிறப்புமிகு பெயரையுடைய வண்ணக்கன் குலத்தார் அறச்சலூர், ஆதியூர், நஞ்சை ஊத்துக்குளி, சாத்தம்பூர், தலையூர், திங்களூர், பெருந்தலையூர், மொஞ்சனூர், வெள்ளகோயில், வெள்ளலூர் போன்ற பல ஊர்களைக் காணியூர்களாகக் கொண் டுள்ளனர். சிறப்புமிகு இக்குலத்திற்குக் காணிப்பாடல் கிடைக்க வில்லை. காணிப்பாடல் பிற்காலத்தில் அழிந்து போயிருக்கலாம்.

**வண்ணக்கன் நல்லவன்**

வண்ணக்கன் குலத்தில் நல்லவன் என்ற பெயருடைய ஒரு பெருமகன் வாழ்ந்து வந்தார். பெயருக்கு ஏற்ப அவர் எல்லா வகையான நற்குணங்களும் பெற்றவராக விளங்கினார். விண்ணுலகத் தேவர்களையும், தெய்வப் பெண்களையும், உலகினரையும் தம் செயல்களால் மகிழ்வித்தார். பெண்களைப் பாதுகாத்தார். பல இலக்கியங்களோடு கம்பரின் இராமாயணத்தையும் கற்று இராமர்க்குச் சிறப்புக்கள் செய்து விழாவெடுத்தார்.

கம்பருடைய புலமை நலம் தெரிந்து தானும் தன் வர்க்கத்தாரும் என்றென்றும் கம்பர் பெருமானுக்கு அடிமை என்று அடிமைச் சாசனம் எழுதிக் கொடுத்தார். வேளாளர்கட்குரிய 96 கீர்த்திகளையும் படைத்துப் பெருமையுற்றார். அவர் வாழ்வதால் கொங்கு நாடே பெருமையுற்றது. கொங்கு மண்டல சதகம் பாடிய வாலசுந்தரக் கவிராயர் வண்ணக்கன் நல்லவன் புகழ் பாடுகிறார். நல்லவன் பெயரைத் தான் இயற்றிய கொங்கு மண்டல சதகப் பாடல் ஒன்றில் சிறப்பித்துப் பாடியுள்ளார்.

''விண்ணுக்கும் மாதுக்கும்தேவர்க்கும்ராமர்க்கும் மென்முகிற்கும்
பெண்ணுக்கும் கற்புக்கும் காத்தவன் காண்கம்பர் பேர்விளங்க
மண்ணுக்கும் கீர்த்திக்கும் தொண்ணூறும் ஆறுக்கும்என்றடிமை
வண்ணக்க கோத்திர நல்லவன் வாழ்கொங்கு மண்டலமே''

என்பது வாலசுந்தரக் கவிராயரின் கொங்கு மண்டல சதகப் பாடலாகும்.

**வண்ணக்கன் காளிக் கவுண்டர்**

திங்களூர் குறுப்பு நாட்டின் முக்கிய ஊர்களில் ஒன்று. சமண புஷ்பதந்த தீர்த்தங்கரருக்கு அங்கு ஆலயம் உள்ளது. அறநிலையம் அப்பிச்சிமார் மடம் அருகி உள்ளது. திங்களூர்க் காணியாளர் வண்ணக்கன் குலக் காளிக் கவுண்டர். அவர் ஊரதிகாரமும் செய்து வந்தார். அவர் தந்தையார் பட்டிலிங்கக் கவுண்டரும் நிலக்கிழாராகத் திங்களூரில் வாழ்ந்தவர்.

திங்களூரில் செங்குந்தர் சமுதாயத்தைச் சேர்ந்த அவிநாசிப் புலவர் என்பவர் அருகில் உள்ள அருள்மலை முருகன் மீது ஒரு நொண்டி இலக்கியம் பாடினார். அந்நூல் திங்களூர் அருள்மலை நொண்டி நாடகம் எனப்பட்டது.

தாம் இயற்றிய நொண்டி நாடகத்தைக் காலில் சலங்கை கட்டிக் கொண்டு பாடி-ஆடிப் பிறரை மகிழ்விப்பாராம். ஒருமுறை பாடி நடித்த அவிநாசிப் புலவருக்கு பொற்கிழி கொடுத்து வண்ணக்கண் நல்லவன் பாராட்டியதாக அந்நூலில் குறிப்பு வருகிறது.

''காராள குலத்திலுற்ற தூயன் - நல்ல
காரைச்சிறை விடுவித்துப் பாராளும் கெம்பீரன்
ஏரெழுப தும்படித்த கம்பன் - தனக்கு
என்றும் அடிமை நாங்கள் என்றெழுதிக் கொடுத்தோன்

சொல்லில் அரிச்சந்திர மகமேரு - நல்ல
சூலிமுதுகில் சோறிட்டு நீலிபழி துடைத்தோன்

இல்லைஎன்ற சொல்லைமற வாதான் - இரவில்
ஏராளமா கவேமுளை வாரியமு தளித்தோன்

வண்ணக்கன் குலத்தில்உற்ற தூயன் - நல்ல
உண்மையுள்ள பட்டிலிங்கன் மன்னனரு ளால்வந்த
கண்ணின்மணி யானபுண்ய சாலி - துரைக்
காளிமன்னன்அவனொருசாளிகைப்பொன் கொடுத்தான்
குதிரைமட் டங்கள் ஒன்றீந் தானே - அவனைக்
கும்பிட்டுநான் வாழ்த்திக்கொள்ள இன்பத்தைப்பெற
றேனே''

என்று திங்களூர் அருள்மலை நொண்டி நாடகம் இயற்றிய அவிநாசிப் புலவரின் பாடல் பகுதியாகும். பொன் கொடுத்ததுடன் அவிநாசிப் புலவர் பயணம் செய்ய 'மட்டக் குதிரை' ஒன்றையும் வண்ணக்கன் குலக் காளிக்கவுண்டர் கொடுத்துள்ளார்.

**கன்னிவாடிக் கண்ணர் சிறப்பித்தல்**

மதுக்கரையில் மூவேந்தருக்கு எல்லை பிரித்துக் கொடுத்ததால் தலைய நாட்டில் ஆட்சியுரிமை பெற்ற கண்ணகுல மும்முடி நல்லதம்பிக்கவுண்டர் கால்வழியினர் கன்னிவாடியில் வாழ்ந்து வந்தனர். கன்னிவாடிக் கண்ணகுலத்தாருக்கும் இடைக்கலப் பாடியில் இருந்த பள்ளி வெள்ளாளர்கட்கும் (வன்னியர்) ஏற்பட்ட பிணக்கின் காரணமாகக் கன்னிவாடியை விட்டுக் கண்ண குலத்தார் வெளியேறினர். கண்ணகுலத்தாரின் செயல்கள் அனைத்திற்கும் ஆனங்கூர்க் காரிகுலத்தார், தலையூர் வண்ணக்கன் குலத்தார், கூத்தம்பூண்டி செம்பூத்த குலத்தார், பூச்சந்தை குலத்தார், இனுங்கனூர்த் தனஞ்செய குலத்தார் ஆகியோர் உதவினர். அதனால் கன்னிவாடிக் கண்ணன் குலத்தார் எழுதிய செப்பேட்டில் 'தலையூர் வண்ணக்கன்' குலத்தார் உள்ளிட்டவர்களைப் பாதிப்பங்காளிகள் என அழைத்தனர்.

**பாசூர் குருக்களின் சீடர்**

கொங்கு வேளாளர் பெருமக்கள் சமய நம்பிக்கையுடன் ஆதி சைவ சிவாச்சாரியர்களைக் குருக்களாக நியமித்து வணங்கி வந்தனர். மேல்கரைப் பூந்துறை நாட்டில் சாத்தம்பூர், நஞ்சை ஊத்துக்குளியில் வாழ்ந்த வண்ணக்கன் குலத்தார் பாசூர் ஞானசிவாச்சாரியார் இம்முடி அகிலாண்ட தீட்சிதர் அவர்களைக் குலகுருவாக ஏற்று வணங்கி வந்தனர்.

ஆண்டுதோறும் குடும்பம் ஒன்றுக்கு 5 நாகரம் பணம் குருக்களுக்குக் காணிக்கையாகச் செலுத்த ஒப்புக்கொண்டனர். எங்கு குடியேறிக் காணி பெற்று அதிகாரம் செய்தாலும், குடித்தனம் செய்தாலும் குலகுருக்கள் சஞ்சாரம் வந்தால் தவறாமல் பாத காணிக்கை கொடுப்போம் என்றும் செப்பேடு எழுதித் தந்தனர்.

சாத்தம்பூர் வண்ணக்கன் குலத்தாரின் காணியூர். அவ்வூர் காலிங்கராயன் வாய்க்காலுக்கும், காவிரிக்கும் இடையில் இருந்ததால் நீர்ப் பெருக்கின் காரணமாக ஊர் முழுதும் அழிந்து விட்டது. வண்ணக்கன் குலத்தார் சாத்தம்பூரிலிருந்து மேற்கே 4 கிலோ மீட்டர் தொலைவில் உள்ள நஞ்சை ஊத்துக்குளிக்குக் குடியேறிவிட்டனர். கொங்குச் சமுதாயத்தின் முதல் ஐ.சி.எஸ் அதிகாரி செங்கோட்டையன் நஞ்சை ஊத்துக்குளி - கருந்தேவன்பாளையத்தைச் சேர்ந்த வண்ணக்கர் என்பது குறிப்பிடத்தக்கது.

**வள்ளல் வண்ணக்கன் நினைவுத்தூண்**

கொங்கு 24 நாடுகளில் ஒன்று வாரக்க நாடு. 16 ஊர்களைக் கொண்ட வாரக்கநாட்டில் பத்தாவது ஊராகத் திகழ்வது வெள்ளலூர், நொய்யல் கரையில் உள்ள தொன்மையான ஊர். இந்தியாவிலேயே ரோமானியக் காசுகள் மிக அதிகமாகக் கிடைத்த ஊர்.

அவ்வூரின் பழைய பெயர் ‘வெளில் ஊர்’ என்பதாகும். தொல்லியல் அறிஞர் இரா. பூங்குன்றன் ‘வேள் ஊர்’ என்பது தான்

வேளிர் ஊர் - வெளிலூராக மாறியது என்பார். வேளாளர்கள் சிறப்புடன் வாழ்ந்த வெள்ளலூர் வேளாளர் கொடையால் 'அன்னதான சிவபுரி' என்று பெயர் பெற்றது.

அவ்வூரில் வண்ணக்கன் குலத்து வேளாளர் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவர் பெயர் வண்ணக்கன் ஏறமூர்க்கன். வெள்ளலூர்ச் சிவன் தேனீசுவரர் மீது அன்பு கொண்டு பல கொடைகளைச் செய்தவர். அவருக்கு இரண்டு ஆண்மக்கள். வண்ணக்கன் மூர்க்கஞ் செல்லன் மூத்தவர். அவர் தம்பி வண்ணக்கன் மூர்க்கன் தண்டன். அவர்கள் தந்தை இறந்தபின்னர் அவர் பக்தியால் வணங்கிவந்த தேனீசுவரர் கோயிலில் அவர் நினைவாகத் தூண் ஒன்று நிறுவி அதில் இவ்விபரத்தையும் கல்வெட்டாகப் பொறித்து வைத்தனர். இறந்த பெருமக்களுக்குக் கோயிலில் நினைவுத் தூண் எடுப்பது மிக மிக அபூர்வமானது. (திருச்செங்கோடு வட்டத்தில் குமரமங்கலம் பொன்காளியம்மன் கோயிலில் சில தூண்கள் இந்த அமைப்பில் உள்ளன.)

## கல்வெட்டு

''ஸ்வஸ்திஸ்ரீ சந்திராதித்ய குலதிலக
சார்வ பௌமனாகிய ஸ்ரீகோக்கண்டன்
வீர நாராயணனுக்குச் செல்லா நின்ற
யாண்டு பதினொன்று இவ்வாண்டு
வெளிலூர் தென்னூர் நக்கனார்
மண்டபத்து வண்ணக்கன் மூர்க்கஞ்
செல்லனும் தம்பி மூர்க்கன் தண்டனும்
தமப்பனார் ஏற மூர்க்கனைச்
சாத்தி நடுவித்த கல்தூண்'

இதனை ஒரு நடுகல்லாகவே கருதலாம். ('தூரன் குமரகவுண்டன் மகன் செட்டிக் கவுண்டன் பிரியாவிடை' என்பது குமரமங்கலம் நினைவுத்தூண் கல்வெட்டு ஆகும்).

## ஆலயத்தில் செய்த அரும்பணிகள்

வண்ணக்கன் குலத்தாரின் ஆலயப்பணிகளை விளக்கும் ஆறு கல்வெட்டுகள் திங்களூர், ஆதியூர், வெள்ளோடு, மொஞ்சனூர், பெருந்தலையூர் ஆகிய இடங்களில் கிடைத்துள்ளன. அவை சந்தியா தீபம் வைத்தல், நிலக்கொடை, ஆலயத் திருப்பணி, திருவிழா பற்றியவை. இக்கல்வெட்டுகள் அனைத்தும் கி.பி. 12-14ஆம் நூற்றாண்டைச்சேர்ந்தவை.

திங்களூர் வேளாளர் வண்ணக்கர் குல பெரிய கொற்றன் என்பவர் அங்குள்ள சந்திரபுரீசுவரர் கோயிலில் சந்தியா தீபம் வைக்கப் பழஞ்சலாகை அச்சு ஒன்று கொடையாகக் கொடுத்தார். மொஞ்சனூர் சிவாலயத்தில் சந்தி விளக்கு ஒன்று வைக்க காங்கய நாட்டு வெள்ளகோயில் வேளாளரில் வண்ணக்கன் அரைசன் சிருச்சியன் பழஞ்சலாகை அச்சு ஒன்று கொடுத்தார்.

ஆதியூர் ஆதீசுவரர் கோயில் திருப்பணி செய்யும்போது ஆதியூர் வேளாளர் வண்ணக்கர் குலப் பிள்ளையாழ்வான் என்பவர் தம் கொடையாகத் திருநிலைகால் இரண்டு அளித்தார். காஞ்சிக் கூவல் நாட்டுப் பெருந்தலையூர் திருமகிழ்வனமுடையார் கோயில் திருப்பணி நடைபெறும்போது திங்களூர் வண்ணக்கர் குலப் பெரியான் அணுக்கநம்பி என்பவர் தம் கொடையாகக் கோயில் அர்த்தமண்டபத்தைக் கட்டிக் கொடுத்தார்.

திங்களூர் வேளாளர் வண்ணக்கர் குல மூக்கன் பிள்ளையான பிள்ளைப் பெருமாள் தாதன் என்பவர் திங்களூர் சுந்தரபாண்டிய விண்ணகரம் என்னும் அழகப் பெருமாள் கோயிலுக்கு மூன்று கழனி நிலம் அளித்தார்.

சாத்தம்பூர் வண்ணக்கர்குலச் சிவமாலை என்பவர் வெள்ளோடு சர்வலிங்கேசுவரர் கோயிலில் தைப்பூச விழா நடத்தப் பூந்துறை நாட்டாரோடு சேர்ந்து கொடை கொடுத்துள்ளார்.

## உலகு போற்றும் ஒரு உன்னதச் செயல்

ஈரோடு வட்டம் சாத்தம்பூர் வண்ணக்கர் குலக் காணியூர், அங்குள்ள சிவாலயம் வல்லாள ஈசுவர முடையார் கோயில். அக்கோயில் அம்மன் சன்னதி நிலையில் ஒரு முக்கியமான கல்வெட்டு வெட்டப்பட்டுள்ளது.

அக்காலத்தில் மிகக்கொடிய குற்றம் செய்தோருக்குத் தூக்குத் தண்டனை கொடுப்பது வழக்கம். தூக்குத் தண்டனைக்குத் 'தலைவிலை' என்பது பெயர். ஆனால் கொங்குச் சோழமன்னன் குலோத்துங்கன் காலத்தில் (1195-1207) வண்ணக்கன் குலத்தார் கோயிலில் கூடிய சபையில் தீயவர்களைக் கொன்றால் கொன்றவர் கட்குத் தூக்குத் தண்டனை கூடாது என்று தீர்மானம் செய்து அதைக் கல்வெட்டாகப் பொறித்துள்ளனர். 'அநியாயம் அழிபிழை செய்தாரை வெட்டுதல் குத்துதல் உண்டாக்கினார்க்குத் தண்டம் தலைவிலை யில்லையாவதாக' என்பது கல்வெட்டுத் தொடர்.

## 90. வப்புலர் குலம்

தனிப்பாடல், இலக்கியம், பட்டயங்களில் குறிக்கப் பெறாமல் கல்வெட்டுகளில் மட்டுமே குறிக்கப் பெறும் சில குலங்களில் ''வப்புலர்'' குலம் ஒன்று.

பொள்ளாச்சி வட்டம் தேவணாம்பாளையம் அமணலிங் கேசுவரர் கோயிலில் காணப்பெறும் விக்கிரமசோழ தேவனின் முப்பதாவது ஆட்சியாண்டுக் கல்வெட்டிலும், பல்லடம் வட்டம் செலக்கரிச்சல் மாரியம்மன் கோயில் முன்பு உள்ள தனிக்கல்லில் காணப்படும் கல்வெட்டிலும் வப்புலர் குலம் குறிக்கப்பட்டுள்ளது.

தேவணாம்பாளையம் கல்வெட்டில் அமணலிங்கேசுவரர் கோயிலுக்கு வெள்ளாளன் வப்புலரில் சோழன்தேவனான மண்டல முதலி என்பவர் செய்த ஒரு கொடை குறிக்கப்பட்டுள்ளது. கொடையளித்த விபரம் உள்ள கல்வெட்டுப்பகுதி அழிந்து விட்டது. இவருடைய பெயர் அமைப்பிலிருந்து இவர் கொங்குச் சோழர் காலத்தில் ஒரு உயர் அரசு அலுவலராக இருந்திருக்கவேண்டும் என்று தெரிகிறது. இக் கல்வெட்டின் காலம் கி.பி.1303 ஆகும்.

செலக்கரிச்சல் சிவபெருமான் பெயர் ஆளுடையார் நிலை பெற்ற கூத்தர் என்பதாகும். செலக்கரிச்சல் ஆளுடையார் நிலைபெற்ற கூத்தர்க்கு வெள்ளாளரில் வப்புலர் குலத்தைச் சேர்ந்த கேசன் என்பவர் விளக்கு ஏற்றுவதற்காகக் கொடை கொடுத்தார். அவர் கொடுத்த கொடையை அக்கோயில் காணியுடைய சிவப் பிராமணன் ஆளவந்தான் என்பவர் ஏற்றுக்கொண்டு விளக்கு எரிக்க ஒத்துக்கொண்டதை இக்கல்வெட்டுக் கூறுகிறது. கேசன் என்ற பெயருக்குப்பின் 'செ' என்ற எழுத்து மட்டும் காணப்படுகிறது. பின்னர் உள்ள எழுத்துக்கள் அழிந்து விட்டன. அதனால் வப்புலர் குலக்கேசனின் முழுப்பெயர் என்ன என்று தெரியவில்லை. இன்று இக்குலப்பெயர் வழக்கில் இருப்பதாகத் தெரியவில்லை.

## 91. வாணன் குலம்

காங்கய நாட்டுப் பரஞ்சேர்வழி, பாப்பினி ஆகிய ஊர்களில் காணியாளர்களாக 'வாணகுல' வேளாளர்கள் குறிக்கப்பெறுகின்றனர்.

''தரணிபுகழ் பார்ப்பதித் தோடைகுல தீரனைத்
தந்திரமிகு கண்ணந்தையை
தனதான காடையைக் கீரைவண் ணக்கனைத்
தருவாண னைச்செட்டியை''

என்பது பாப்பினிக் காணிப்பாடல்.

''தமிழ்பரவு பரஞ்சைநகர் அதனில்வரு பயிரனை
தனபதிச் செம்பகுலனை
தனமிகும் ஓதாளனை செட்டியை வண்ணக்கனை
தகைமையுறும் ஈஞ்சகுலனை
சவுரியமிகு விழியனை பிரமகுல மேருவை
தழைத்துவளர் ஆவகுலனை
அருமைதிகழ் ஆடையை கருணைதிகழ் வாணனை''

என்பது பரஞ்சேர்வழிக் காணிப்பாடல்.

காங்கயம் காணியாளர்களாக 'வாணிகுலம்' கூறப்படுகிறது.

''சிங்கநகர் அதனில்வளர் அதிகபெருங் குடியனை
செயவேந்தன் செங்கண்ணனைச்
சீர்கொண்ட தூரனை பதுமன்முதல் வாணியைத்
திவ்யமிகு சாத்தந்தையை''

என்பது காங்கயம் காணிப்பாடல் ஆகும்.

1949இல் 'கொங்குச் செல்வி' என்னும் நூல் வாயிலாக முதன் முதலில் குலம் பற்றிச் சிந்தித்த திருப்பூர் க. பழனிச்சாமிப் புலவர் காங்கயம் காணியாளர் வாணியை - வாணர் என்றே எழுதுகிறார். அக்குலப் பெயரை ஏகம்ப வாணனோடு தொடர்புபடுத்துகிறார்.

வாணபூபதி என்னும் வள்ளலை இக்குலத்தார் என்றும் கூறுகிறார். நல்.நடராசன் அவர்களும் வாணர் - வாணி ஒரே குலம் என்று கூறு கிறார். அலகுமலைக் குறவஞ்சி, கொடுமணல் இலக்கியங்கள், கல்வெட்டு 'வாணர்' குலத்தை மட்டும் கூறுகிறது. 'வாணி' குலம் கூறப்படவில்லை. வேளாளர் குலக்கும்மி 'வாணி' என்று கூறுகிறது.

படைத்தலைக் கவுண்டர் குலத்தைத் தொகுத்துக் கூறும் பாடலில் 'வாணன்கேள் வாணி' என்று குறிக்கப்படுவதைக் காணுகிறோம். எனவே இரண்டு வகையாக அழைக்கப்பெறும் குலங்கள் இரண்டும் ஒரே குலமாக இருக்கக்கூடும். பேரரசர்கட்கு ஆதரவாக வாணகுலத்தாரை வென்ற வீரர்கட்கு 'வாணன்' பட்டம் அளிக்கப்பட்டிருப்பதால் அவ்வாணர் வழிவந்த வேளாளர்கள் வாணர் குலத்தார் ஆகியிருக்கலாம்.

தாரமங்கலம் கட்டி முதலிகளின் ஆட்சிக் காலத்தில் 1688ஆம் ஆண்டு அத்தாணி வெள்ளாளர் வாண குலரில் சின்னப் பெரியண்ண கவுண்டர் செல்லாண்டியம்மன் கோயிலில் அர்த்தமண்டபம் கட்டியதை அக்கோயில் கல்வெட்டுக் கூறுகிறது.

> ''பிரபவ வருஷம் வைகாசி மாதம் 19ஆம் தேதி முதலியார் நல்லுடையப்பர் குமார கட்டி முதலியார் காரியத்துக்கு கர்த்தரான பெருமாள் தீட்சிதர் செங்கோல் செலுத்தி அருளா நின்ற காலத்தில் வடகரை நாட்டில் அத்தாணி யிலிருக்கும் வெள்ளாளரில் வாண குலரில் நல்லாக் கவுண்டன் மகன் சின்னப் பெரியண கவுண்டன் தேவ தேவ தேவோத்தமி பத்திரி கொண்டத்து செல்லாண்டி யம்மனுக்கு அர்த்த மண்டபம் உண்டாக்கினேன் அடியேன் சின்னப் பெரியான் விண்ணப்பம்''

படைத்தலைக் கவுண்டரிலும் வாணகுலம் உண்டு. 'வாணராய நல்லூர்' என்ற பெயரில் சில ஊர்கள் கொங்கு நாட்டில் உள்ளன.

வாணன்(வாண)குலத்தாரை''ஏகம்பவாணன்''வழியினர் என்று க.பழனிசாமிப் புலவர் கூறுகிறார். இந்த ஏகம்பவாணன் சேர, சோழ, பாண்டியரை வென்று தனியாட்சி நடத்தியவன் என்றும் கூறுகிறார்.

## 92. வாலி குலம்

வாலி குலம் கல்வெட்டில் மட்டுமே காணப்படுகிறது. வால் என்பதற்கு தூய்மை, வெண்மை, நன்மை, பெருமை என்ற பொருள்கள் உண்டு. வாலி என்பதற்குக் கரிக்குருவி என்று பொருளும் உண்டு. ஒரு மூலிகைக்கும் பெயர் வாலி. திருவாலியமுதனார் என்பது ஒரு வைணவ அடியார் பெயர்.

வீரராசேந்திர தேவனின் இரண்டாம் ஆட்சியாண்டில் (1209) பொன்னிவாடி நிர்மலீசுவரர் கோயிலில் பொன்னிவாடி வெள்ளாளன் வாலிகளில் குருடன் அரையன் என்பவர் சந்தியா தீபம் வைத்ததை ஒரு கல்வெட்டு கூறுகிறது.

> ''ஸ்வஸ்திஸ்ரீ வீரராசேந்திர தேவர்க்கு யாண்டு இரண்டாவது பொங்கலூர்க்கா நாட்டு நிர்மணியில் வெள்ளாளன் வாலி களில் குருடன் அரையனேன் இந்நாயனார் நிர்மணீசுவர முடையார்க்கு சந்தியா தீபம் ஒன்றுக்கு அச்சொன்றும் ஒடுக்கினேன். இப்பொருள் கைக்கொண்டோம் காணியுடைய சிவப்பிராமணர் மணியன் வடுகன் உள்ளிட்டோம். சந்திராதித்தர் வரை எரிப்பாராக இது பன்மாகேசுவரர் ரட்சை''

இராமாயணத்தில் வானர வேந்தன் 'வாலி' குறிக்கப் பெறுகிறான். வாலி வழிபட்டதாக ஐதீகம் உடைய கோயில் வாலீசுவரம் என்று கூறப்படுகிறது. இதுபோல் அனுமன், சுக்கிரீவன் வழிபட்டதாகக் கருதப்படும் கோயில்கள் அனுமீசுவரம், சுக்ரீவேசுரம் எனப் பெயர் பெற்றன. சுக்ரீவேசுரத்தைக் 'குரக்குத்தளி' என்று சுந்தரர் கூறுவார்.

## 93. விச்சர் குலம்

கல்வெட்டில் மட்டும் குறிக்கப் பெறுவது இக்குலம். வித்தியாதரர் என்ற அறிஞர் விச்சாதரர் என்றும், கற்கும் மாணவன் வித்யார்த்தி - விச்சாத்தி என்றும் அழைக்கப்படுவர். அதுபோல் கலை, வித்தைகளில் வல்லவர்கள் 'விச்சர்' என அழைக்கப் பட்டிருக்கலாம். அவர்கள் வழி வந்தோர் விச்சர் குலம் என அழைக்கப்பட்டிருக்கலாம்.

விக்கிரம சோழன் காலத்தில் (1294) பேரூர் வெள்ளாளன் விச்சர்களில் பட்டிகோவன் ஆன மண்டல முதலி தனக்கு இறைவன் அருளால் கிடைத்த மூன்று மா முக்காணிநிலம்முழுவதையும் திருவான் பட்டியுடையார்க்கு ஸ்ரீபுஷ்பயாகத்துக்குக் கொடையாக அளித்தார்.

> ''ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவர்த்திகள் விக்கிரம சோழ தேவர்க்கு யாண்டு 21-வது பேரூர் நாட்டுப் பேரூர் வெள்ளாளன் விச்சர்களில் பட்டி கோவனான மண்டல முதலியேன் ஆளுடையார் திருவான்பட்டி உடையார்க்கு ஸ்ரீபுஷ்ப யாகத்துக்கு நான் விட்ட நிலமாவது எனக்கு நாயனார் அருளி காணியாக விண்ணப்பம் செய்தருளின இந்நிலம் மூன்றுமா முக்காணியும் ஆளுடையார்க்கு நந்தமரானார் செய்யத் திருவுள்ளமாயருளுமென்று நாயனாரைத் திருவடி தொழுது விண்ணப்பம் செய்ய நாயனார் நாம் உனக்குத் தந்த நிலம் ஆளுடையார்க்குத் தானம் செய்து செம்பிலும் சிலையிலும் வெட்டிக் குடுவென்று நாயனார் எனக்கு ஸ்ரீமுகப் பிரசாதம் செய்தருள நான் விட்ட நிலமாவது இவ்வூர்ப் பிஞ்ஞுகன் வயலில் இவ்வதிக்கு மேற்கு கணவதி வாய்க்காலுக்குத் தெற்கு 3 ஆம் சதுரமாம் அதிராதராஜ மேற் செம்மை வதிக்கு மேற்கு அதிராஜராஜ வாய்க்காலுக்கு வடக்கு''

என்பது கல்வெட்டு.

## 94. வில்லி குலம்

சேர மன்னர்கள் சின்னம் வில். அதனால் சேரர்கள் வில்லியர் எனப்பட்டனர். கொங்கு வேளாளரில் வில்லி குலத்தார் சேரரோடு தொடர்புடையவர்களாக இருக்கலாம். புறநானூற்றுப் பாடல் ஒன்று (379) ''ஓய்மான் வில்லியாதன்'' என்ற தலைவனைப் புகழுகிறது. நன்னாகனார் என்ற புலவர் அவரைப் பாடியுள்ளார். ஆதன் என்பது சேர மரபினர் வைத்துக் கொள்ளும் பெயர்களில் ஒன்று. நெடுஞ்சேரலாதன், செல்வக் கடுங்கோ வாழியாதன் என்பன சேரர் பெயர்கள். ஓய்மான் வில்லியாதன் சேரர் மரபினராக இருக்கக்கூடும்.

ஓய்மான் வில்லியாதன் 'இலங்கை' என்னும் ஊர்த் தலைவன். தமிழக ஊர்கள் சில இப்பெயரைப் பெற்றிருந்தன. சிறுபாணாற்றுப் படையில் 'தொல்மா இலங்கை' 'நல்மா இலங்கை' என்ற ஊர்கள் குறிக்கப்படுகின்றன. 'மா இலங்கை' 'மாவிலங்கை' என்றும் கூறப்பெறும். இவற்றின் மூலம் வில்லி குலத்தின் தொன்மையும், சேரர் தொடர்பும் உறுதிப்படுகிறது.

வில்லி குலத்தார் கீழ்க்கரைப் பூந்துறை நாட்டுத் திருச்செங்கோடு, குமரமங்கலம், காங்கேய நாட்டு வள்ளியறச்சல், வெள்ளகோயில் ஆகிய ஊர்களில் காணியுரிமை கொண்டவர்கள். காங்கய நாட்டுக் காணிப்பாடல்கள்,

''தேவர்கள் புகழ்கின்ற வள்ளிநகர் வில்லியைக்
செல்லனை ஆந்தைகுலனை
செல்வவண் ணக்கனைப் பில்லனைக் கல்வியது
சேர்ந்துவளர் கண்ணந்தையை
சிங்காரப் பூந்தையைக் காடையைக் கணக்கனை
திகழ்பரவு நீருண்ணியை''

என்றும்,

''மருவுவெள் ளையம்பதி யில்வளர் குருகுலனை
வாகுசேர் ஆந்தைகுலனை

வரிசைதிகழ் வில்லியைப் பிரபுடிக மாடையை
மதுரமொழி ஓதாளனை
வலிமையது சேர்கின்ற அதிகவண் ணக்கனை
மகராச யோகமருவும்
வாகுற்ற தனஞ்செயனை''

என்றும் கூறுகின்றன. வள்ளியறச்சலில் முதலாவது காணியுரிமை உடையவர்கள் வில்லி குலத்தார் ஆவர். வெள்ளகோயிலில் இரண்டாவது காணியாளராக வில்லி குலத்தார் குறிக்கப்படுகின்றனர். காணிப்பாடல்களிலும், தி.அ. முத்துசாமிக் கோனார் கொங்குநாடு (1934) நூலிலும் வெள்ளகோயில் காணியாளர் குலப் பெயர் 'வில்லி' என்றே கூறப்பட்டுள்ளது. இன்று வெள்ளகோயில் காணியாளர்கள் 'கல்லி' குலத்தார் எனக் கூறப்படுகின்றனர்.

கீழ்க்கரைப் பூந்துறை நாட்டுக் குமரமங்கலத்தில் தூரன், விலையன், ஈஞ்சன், பாண்டியன் குலத்தாரோடு வில்லி குலத்தாரும் காணியாளர்களாக உள்ளனர். திருச்செங்கோடு குலசேகரப்பட்டர் குல குருவிற்கு மோரூர்க்கண்ணர், கிழாம்பாடிக் கண்ணர், மொடக்குறிச்சித் தூரர், குமரமங்கலம் தூரர், விலையர், பாண்டியர், ஈஞ்ச குலத்தாரோடு வில்லி குலத்தாரும் இணைந்து செப்பேடு எழுதித் தந்துள்ளனர். வில்லி குல வேல கவுண்டர் அச்செப்பேட்டில் கையொப்பம் இட்டுள்ளார். வில்லி குலம் அர்த்தநாரிக் கவுண்டர் பெயரும் செப்பேட்டில் உள்ளது.

மடவளாகம் இலட்சுமணி பாரதி (1769-1859) இயற்றிய சிவமலைக் குறவஞ்சியில் வள்ளியறச்சல் முதல் காணியாளர் வில்லி குல நாட்டாக் கவுண்டர் சிறப்புடன் புகழப் பட்டுள்ளார். அவரது பெரும் விவசாயப் பண்ணை குறிக்கப்படுகிறது. இந் நாட்டாக் கவுண்டர் மகன் நல்லதம்பிக்கவுண்டர் கி.பி.1789 ஆம் ஆண்டு (சித்தாத்திரி வருடம் ஐப்பசி மாதம் 21ஆம் தேதி) வள்ளியறச்சல் பொன்னழகு நாச்சியம்மன் கோயிலில் தீபத்தம்பத்தை

நிறுவியுள்ளார். தீபத்தம்ப வடபுறம் இதைக் குறிக்கும் கல்வெட்டும் வணங்கிய நிலையில் நின்ற கோலத்தில் நல்லதம்பிக் கவுண்டருடைய உருவச் சிலையும் உள்ளது.

வள்ளியறச்சல் மாந்தீசர் கோயிலில் கி.பி. 1533 ஆம் ஆண்டு (விசய வருடம் ஆவணி மாதம் 2ஆம் தேதி) வில்லி குல பிள்ளான் உடையாண்டார் என்பவர் நான்கு துளைக்கழஞ்சு பொன்னை மாந்தீசருக்குக் கொடையாகத் தந்துள்ளார். நான்கு சிவப் பிராமணர் இக்கொடையை ஏற்றுக் கோயிலில் வழிபாடு செய்துள்ளனர்.

சின்னதாராபுரம் முனிமுத்தீசுவரர் கோயிலில் கொங்குச் சோழ மன்னன் குலோத்துங்கனின் 18ஆம் ஆட்சியாண்டில் (கி.பி.1167) சந்திவிளக்கு ஏற்றுவதற்கு வில்லி குலத்தைச் சேர்ந்த கணிவன் நிலையுடையான் வீர நாராயணதேவர் என்பவர் 4 பொன் கொடையாகக் கொடுத்துள்ளார்.

வில்லிபுத்தூராழ்வார் இயற்றிய பாரதம் ''வில்லிபாரதம்'' என்று அழைக்கப்படுகிறது. வில்லிபுத்தூரார் கொங்கு வேளாளர் வில்லி குலத்தார் என்று நாமக்கல் புலவர் தே.ப. சின்னசாமியும், வல்வில் ஓரி வில்லிகுலத்தார் என்று உடுமலைப்பேட்டை இரா. இரவிக்குமாரும் எழுதியுள்ளனர்.

# 95. விலையன் குலம்

விலை என்ற சொல்லுக்கு உயர்மதிப்பு என்ற பொருள் உண்டு. கொங்குச் சமுதாயத்தில் மதிக்கப்பட்டவர்கள், மதிப்புடைய வர்கள் என்ற பொருளில் இக்குலம் பெயர் பெற்றிருக்கலாம். 'விலையன்' என்ற குல முதல்வராலும் பெயர் பெற்றிருக்கலாம். எல்லா ஆவணங் களிலும், இலக்கியங்களிலும் விலையன் என்று கூறியிருக்க வேளாளர் 96 கீர்த்திப் பாடல் மட்டும் 'விளையன் குலம்' என்ற கூறுகிறது. வேளாண்மையில் நல்ல விளைச்சலைத் தருபவர்கள், காட்டு நிலம், நீர் ஏறாது மேட்டு நிலத்தையும் நன்செய்யாக மாற்றுபவர்கள் என்றும் பொருள் கொள்ளலாம். விலைய குலம் பேச்சுவழக்கில் 'வெலைய குலம்' என்றும் அழைக்கப் பெறும். தங்கள் காணி உரிமையைப் பெற தம்முடைய தலையையே விலையாகக் கொடுத்த காரணத்தால் 'விலையன் குலம்' என்று அழைக்கப்பட்டது என்று கூறுவது பொருத்த முடையதாகத் தெரியவில்லை.

**காணியூர்கள்**

விலைய குலத்தாரின் பூர்வீகக் காணியூர்கள் தலையநல்லூர், மின்னாம்பள்ளி, ஆறுதொழு, மண்மங்கலம், கீரனூர், ஆரியூர், குமரமங்கலம், வடுகநகர், பஞ்சமாதேவி, சென்னிமலை, காக்கைவாடி, முட்டுக் கோட்டை, சேலம், சிராமணி, தாழம்பாடி, இடையாறு, கொன்னையாறு, காரிமங்கலம், சாத்தனூர், துத்திக்குளம், பொங்கலூர், அரைய நாடு ஆகியவைகளாகும். இவற்றைத் தொகுத்துக் கூறும் காணிப்பாடல்,

''பெருகுபுக ழேகொண்ட தலைசைமின் னாம்பள்ளி
பேர்பெறும் ஆறைநகரும்
பெருமைசெறி மண்மங்கை கீரனூர் ஆரியூர்
பின்குமர மங்கலமதுவும்

திருவுலவு வடுகநகர் பஞ்சமா தேவியும்
 சென்னிகிரி காக்கைவாடி
தொன்முட்டுக் கோட்டைமிகு சேலம் சிராமணி
 சேர்தாழை இடையாறையும்

தருவுலவு கொன்னையார் காரிமங்கை சாத்தனூர்
 தருமமிகு துத்திக்குளம்
தண்பொங்க லூருடன் அரையநன் னாடுமே
 தழைக்கவே காணிபெற்றாய்

மருவிவரும் விலையகுல பெரிச்சிபூ பாலனின்
 மைந்தனே ஐந்தாருவே
மருப்புயா சலன்ஆன பெரியண்ண தீரனே
 மண்டலம் பிரக்யாதியே''

என்பதாகும். 'அரையநன்னாடு' என்பதற்கு 'எழுகரை நாடுமே' என்ற பாடம் உண்டு.

ஏழூர் நாட்டு உடுப்பம், நல்லிபாளையம் ஆகிய ஊர்களில் விலைய குலத்தார்க்குக் காணியுரிமையுண்டு.

இக்காணிப்பாடல் விலைய குலப் பெரிச்சிக்கவுண்டர் மகன் பெரியண்ண கவுண்டர் மீது பாடப்பட்டதாகும்.

**தலைய நல்லூர்க் காணி**

மேல்கரை அரைய நாட்டின் தலைநகர் தலையநல்லூர். இன்று தலையநல்லூர் என்ற பெயர் மறைந்து சிவகிரி என்ற பெயரோடு அவ்வூர் வழங்குகிறது. விலைய குலத்தாரின் முதன்மைக் காணியூரான தலையநல்லூரை முளை வேட்டுவர் காசியப்ப கவுண்டரிடமிருந்து 5000 பொன்னுக்கு வாங்கியதாக தென்னிலைச் செப்பேடும், ஆத்தூர்ச் செப்பேடும் கூறுகிறது.

''செய வருஷம் பங்குனி மாதம் 27ம் தேதி அரைய நாடு சேரன், சோழன், பாண்டியன் காலத்தில் எல்லை கொல்லை

> தீர்மானம் செய்து குடுத்தபேர் கவுண்டர்கள் கூடி அரைய நாடு வெள்ளாள குலம் வெலைய கூட்டம் காளியப்ப கவுண்டன் கூறை காளியப்ப கவுண்டன் இந்தப்படி பேர் இடத்தில் முளை வேட்டுவன் காசியப்ப கவுண்டன் பொன் 5000 வாங்கிக் கொண்டதுக்கு சாட்சி வெங்கம்பூர் சமந்தராயக் கவுண்டன் சாட்சி பொத்தி சேசுவராயக் கவுண்டன் சாட்சி மணநாடு புரக்கிலாக் கவுண்டன் சாட்சி தலைய நல்லூர் பொன்காளியம்மன் கோயிலுக்கு விலைய கூட்டம் காளியப்ப கவுண்டனுக்கும் கூறை காளியப்ப கவுண்டனுக்கும் ராசமுப்பாடு கோயில் முப்பாடு குடுத்ததுக்கு இத்தாதிபேர் கவுண்டர்கள் சாட்சி''

என்பது செப்பேட்டு வாசகமாகும். ராசமுப்பாடு, கோயில் முப்பாடு என்பது ஊர் நிர்வாகத்திலும் கோயில் வழிபாட்டிலும் முதல் உரிமை என்பதைக் குறிக்கும் தொடராகும். இன்றும் தலையநல்லூர் (சிவகிரி) பொன்காளியம்மன் கோயிலுக்கு விலைய குலத்தாரும், கூறை குலத்தாரும் காணியாளர்களாக உள்ளனர். செப்பேட்டில் இதற்குப் பிறகு தலையநல்லூர்க் கிராமத்தின் எல்லை மிக விரிவாகக் கூறப் படுகிறது.

## பொன்காளியம்மன் கோயில் கல்வெட்டுகள்

சிவகிரி பொன்காளியம்மன் கோயில் கருவறைச் சுவரில் உள்ள கல்வெட்டு விலைய குலத்தாரும், கூறை குலத்தாரும் அக்கோயில் கருவறையைக் கட்டியதாகக் கூறுகிறது. 'தலைய நல்லூர்' காணி யாளக் கவுண்டர்கள் வெலையன் கூறை தேவ தேவ தேவோத்தமி பொன்காளியம்மனுக்குக் கெருப்பக் கிரகம் உபயம்' என்பது அதன் வாசகம் ஆகும்.

'விலைய குலம்' மயிலம் பெரியண்ண கவுண்டர் என்பவர் கோயில் திருப்பணி செய்ததாக மற்றொரு கல்வெட்டுக் கூறுகிறது. 1887ஆம் வருடம் சருவசித்து தை மாதம் 25 ஆம் நாள் புகலூரில் குடியிருக்கும் தலையநல்லூர் விலைய குலத்தைச் சேர்ந்த

சின்னாக்கவுண்டர் மகன்கள் காளியப்ப கவுண்டரும் கொமர கவுண்டரும் பொன்காளியம்மன் கோயில் கொரட்டு வாசலைக் கட்டியதாக மற்றொரு கல்வெட்டுக் கூறுகிறது. ஒரு அங்கணத்துக்கு ரூபாய் 200 செலவு செய்தனராம்.

**கூத்தம்பூண்டித் திருப்பணிகள்**

கீழ்க்கரைப் பூந்துறை நாட்டின் 32 ஊர்களில் கூத்தம்பூண்டியும் ஒன்று. இன்று மாணிக்கம்பாளையம் என்று வழங்கப்பெறுகிறது. 'நிலை கொள் கூத்தம்பூண்டி' என்றும், ''வீரமிகத் தங்கும் கூத்தன்பூண்டி'' என்றும் இலக்கியங்கள் அவ்வூரைப் புகழ்கின்றன. மணிமுத்தாற்றங்கரையில் உள்ள வளமிக்க ஊர். பூண்டி என்பது விலைநிலங்களையும் நன்செய் நிலம் ஆன தோட்டங்களையும் குறிக்கும். திருமுருகன் பூண்டி, எம்மாம்பூண்டி, அமரம் பூண்டி, வேளான்பூண்டி முதலிய ஊர்கள் கொங்கு நாட்டில் உள்ளன. வளம்மிக்க கூத்தம் பூண்டியில் விலைய குலத்தார் குடியேறினர்.

கூத்தம் பூண்டியில் ஓங்காளியம்மன் கோயில் கட்டும்போது அங்குள்ள விலைய குலப் பெருமக்கள் மகாமண்டபத்தைத் தங்கள் உபயமாகக் கட்டிக் கொடுத்துள்ளனர்.

> ''கலியுக சகாப்தம் 4984 இதன்மேற் செல்லா நின்ற சுபானு வருஷம் சித்திரை மாதம் 14ம் தேதி கூத்தன்பூண்டிக் காணியாளர்களில் வெலய கோத்திரத்துக் கவுண்டர்களால் காளியம்மனுக்கு மகாமண்டபம் உபயம்''

என்பது அதைக் குறிக்கும் கல்வெட்டாகும் (கி.பி.1883).

கூத்தம் பூண்டியில் புவனேசுவரி உடனமர் பூலோக நாதர் சிவன்கோயில் உள்ளது. சிறு கோயிலாயினும் சிற்பச் சிறப்புக்கள் உள்ள கோயிலாகும். அக்கோயிலை கூத்தன் பூண்டிக் காணியாளர்கள் ஆந்தை குலத்தார், செம்பூத்த குலத்தார், விலைய குலத்தார் அனைவரும் சேர்ந்து கட்டியுள்ளனர். கோயில் புறச்சுவர்களில் அழகிய சிறுவடிவில் திருப்பணியில் பங்கு கொண்டவர்கள்

உருவச் சிலைகளை வடித்திருப்பது சிறப்புமிக்கதாகும். பெரும்பாலும் தங்கள் மனைவியோடு சிற்ப வடிவில் நிற்கின்றனர். அங்கு

'விலைய குலம் கோப்பண கவுண்டரும் தேவியும்'
'விலைய குலம் பிடாரப்ப கவுண்டன் தேவி முத்தாயி கவுண்டச்சி'

என்ற கல்வெட்டுடன் உருவங்கள் உள்ளன. கவுண்டரின் தேவியர் 'கவுண்டச்சி' என்று கல்வெட்டில் பொறிக்கப்பட்டிருப்பது சிறப்புமிக்கதாகும்.

அருகில்,

'சாந்தப்படை வேட்டுவரில் நல்லதம்பிக் கவுண்டரும் தேவியும்' என்ற கல்வெட்டுடன் அவர்கள் உருவங்களும் உள்ளன. இது விலைய குலத்தாரின் சமூக ஒற்றுமையைக் காட்டுகிறது எனலாம்.

## பரஞ்சேர்வழி பிள்ளன் அத்தாணி

தீங்கிலாத கங்கா குல நாட்டார் செழிக்கும் நாடு என்று புகழப்பட்ட காங்கய நாட்டின் 14 ஊர்களில் ஒன்று பரஞ்சேர்வழி, 'நற்பரஞ்சேர்வளி' என்று ஊர்த்தொகைப் பாடலும் தமிழ்பரவு 'பரஞ்சை நகர்' என்று தனிப்பாடலும் புகழும் பேரூர். வணிகச் சிறப்புள்ள ஊர்களே 'நகர்' எனக் கூறப்படும். அதனால் வணிகர் 'நகரத்தார்' எனப்பட்டனர். சமண சமயம் சிறந்து விளங்கிய ஊர். 'பரன்சேர்பள்ளி' எனப் பெயர் பெற்ற ஊர். இன்றும் சமண உருவச் சிலை அங்கு உள்ளது.

அங்குள்ள சிவன் 'நாயனார் நட்டூரமர்ந்தார்' என்று பெயர் பெற்றிருந்தார். இன்று மத்யபுரீசுவரர் ஆகிவிட்டார். விக்கிரம சோழனின் நான்காம் ஆட்சியாண்டில் (கி.பி.1261) கொங்கு வணிகர்கள் 'அஞ்சுகரை நாட்டார்' 'அடிக்கீழ்த்தளத்தார்' 'பதினெண் பூமி மகேசுவரர்' ஆகியோர் நட்டூரமர்ந்த சிவனுக்கு 'மன்றுப்பிச்சை' 'மவுனப்பிச்சை' ஆகிய கொடைகளைக் கொடுத்தனர்.

பரஞ்சேர்வழி ஊரார் வருடத்திற்குச் சந்தியா தீபத்துக்கு இரண்டு பணமும், விஷு அயன சங்கிரமங்களுக்குத் திருவமுது படிக்குச் சங்கிரமம் ஒன்றுக்குப் பணம் ஒன்றாக ஆண்டுக்கு ஐந்து பணமும் சந்திர சூரியர் உள்ளவரை கொடுப்பதாக ஒப்புக் கொண்டனர். இந்த தர்மத்தை மேற்பார்வை செய்ய விலைய குலம் பிள்ளன் அத்தாணியான நாற்பத்தெண்ணாயிர வேளான் என்பவர் நியமிக்கப்பட்டார். 'மூவேந்த வேளான்' என்பது போல 'நாற்பத் தெண்ணாயிர வேளான்' என்பது அரசன் அளித்த பட்டப் பெயரா கும். இக்கல்வெட்டு மத்தியபுரீசுவர கோயிலில் பொறிக்கப்பட் டுள்ளது.

கொங்கு வேளாளர் குடியேற்ற வரலாறு கூறும் ஆவணங்கள் 'நற்குடி நாற்பத் தெண்ணாயிரம், பசுங்குடி பன்னீராயிரம்' என்று கூறும். நாற்பத்தெண்ணாயிரம் என்பது கொங்கு வேளாளரையும், பசுங்குடி என்பது குடிபடைகளையும் குறிக்கும்.

பரஞ்சேர்வழிக் காணியாளர்கள் கொங்கு வேளாளர்களில் பயிரன், செம்பன், ஓதாளன், வண்ணக்கன் , ஈஞ்சன், விழியன், ஆவன், ஆடை, வாணன் குலத்தார் ஆவர். இவர்கள் வாழும் ஊர்க் கொடையை நிர்வகிக்க விலைய குலத்தார் நியமிக்கப்பட்டது சிறப்பு மிக்கதாகும்.

காங்கய நாட்டில் கீரனூரும், ஆறுதொழுவும் விலைய குலத்தார் காணியூர்கள் ஆகும். இவ்வூர்களில் ஒன்றைச் சேர்ந்தவராகப் பிள்ளன் அத்தாணி இருக்கலாம்.

## திருச்செங்கோட்டுச் செப்பேடு

மூவேந்தர்களும் சீர்காழி சோமசம்பு சிவாச்சாரியார் மகன் குலசேகர பட்டர் என்பவரைத் திருச்செங்கோட்டுக்கு அழைத்துக் கொண்டு வந்து பூசைக்கு நியமித்தனர். குலசேகர பட்டர் வழிவந்த திருச்செங்கோடு எம்.எஸ்.எஸ். விஜய சுப்பிரமணியக் குருக்களிடம் ஒரு செப்பேடு உள்ளது.

மோரூர்க் கண்ண குலத்தார், மொடக்குறிச்சி தூரன் குலத்தார், கிழாம்பாடி கண்ண குலத்தார், குமரமங்கலம் தூர குலத்தார், விலைய குலத்தார், வில்லி குலத்தார், பாண்டிய குலத்தார், ஈஞ்ச குலத்தார் ஆகிய எட்டுக் கொங்கு வேளாளர் குலங்களுக்கும் குலசேகர பட்டர் வழியினர் குலகுருவாக உள்ளனர்.

மற்ற ஏழு குலத்தாருடன் கூடி விலைய குலம் வேல கவுண்டர் திருச்செங்கோட்டு மலையில் அர்த்தநாரீசுவரர் சன்னதியில் வாதுளாகம முறைப்படி பஞ்சாட்சர தீட்சையும் உபதேசமும் பெற்றுக்கொண்டார். குலகுருவுக்கு மடாலயம் கட்டுவதில் பங்கு கொண்டார். பிராமண சம்வர்த்தனை செய்தார். விலைய குலக் குடும்பத்தார் குலகுருவுக்குப் பாதகாணிக்கை ஆண்டுக்கு மதுரைச் சக்கரம் இரண்டு பணம் கொடுப்பதாக ஒப்புக் கொண்டனர். என்றென்றும் விலைய குலத்தாருக்குக் குலகுருவாக இருக்கக் கேட்டுக் கொண்டனர்.

இதை ஒரு செப்பேடாகவும் எழுதிக் கொடுத்தனர். செப்பேட்டில் விலைய குலம் சார்பில் வேலகவுண்டர் கையொப்ப மிட்டுள்ளார்.

## குமரமங்கலம் காணியாளர்

கீழ்க்கரைப் பூந்துறை நாட்டின் 32 கிராமங்களில் 11 ஆம் ஊராக விளங்குவது குமரமங்கலம் ‘செந்தமிழ்சேர் குமரமங்கை’ என்று சிறப்பிக்கப்பெறுவது. அவ்வூர்க் காணியாளர்கள் தூரன் குலத்தார், விலைய குலத்தார், வில்லி குலத்தார், பாண்டியன் குலத்தார், ஈஞ்ச குலத்தார் ஆகியோர் ஆவர். பண்டாரம், ஆசாரிகள், நாவிதர், குயவர், தோட்டி முதலிய எல்லாச் சமூகத்தினருக்கும் தங்கள் குல தெய்வக் கோயிலில் உரிமை கொடுத்திருப்பது விலைய குலம் உட்பட்ட கொங்கு வேளாண் பெருமக்களின் சமூக ஒற்றுமையைக் காட்டுகிறது.

ஒரு முறை கொங்கு நாட்டுத் தூர குலத்தார் அனைவரும் குமரமங்கலம் குலதெய்வக் கோயில் பொன்காளியம்மன் கோயிலில்

கூடினர். தங்கள் சமய நிகழ்ச்சிகட்கும், கோயில் பணிகட்கும் உதவி செய்ய மோரூர் விருது மகுடாசல மாணிக்கி மகள் நல்ல பெண் என்பவரை 'தூர குல மாணிக்கியாக' நியமித்தனர். அதற்காக எழுதப்பட்ட செப்பேட்டில் குமரமங்கலம் விலைய குலத்தைச் சேர்ந்த மோளைக் கவுண்டர் என்பவரும் கையெழுத்திட்டிருப்பது சிறப்புக்குரியதாகும்.

## விலைய குல மாணிக்கன்

கோயில், சமயப் பணிகட்கு 'குலமாணிக்கி' என்ற ஆடல்வல்ல மகளிரைக் கொங்கு வேளாண் பெருமக்கள் நியமித்ததைப் போலவே ஆண்களையும் நியமித்தனர். அவர்கள் 'குலமாணிக்கன்' அல்லது 'குல மாணிக்கை' எனப்பட்டனர்.

தூரன், செம்பன், செல்லன், காரி, செங்குண்ணி, அந்துவன், செவந்தி தேவேந்திரன், பனங்காடை, கூறை, கண்ணன், அன்னம், பொருளந்தை, செம்பூத்தன், கணக்கர், விழியன், தனஞ்செயன், பனையன் முதலிய குலங்களைச் சேர்ந்த கொங்கு வேளாளர்கள் மாணிக்கன் நியமனம் செய்ததாக அஞ்சுபடிக்காரர் பட்டயம் கூறுகிறது. அவ்வகையில் விலைய குலத்தாரும் 'முத்துக் கிருஷ்ணன்' என்பவரை விலையகுல மாணிக்கனாக நியமித்துள்ளனர்.

மாணிக்கனாக நியமனம் செய்யப்பட்டவர்களும் ஆடற் கலையில் வல்லவராக இருந்திருக்க வேண்டும் என்பது பிடாரியூர்க் கல்வெட்டால் தெரிய வருகிறது. 'தேவரடியாரில் காமிண்டனான மாணிக்கச் சதிரன்' என்ற மாணிக்கன் குறிக்கப்படுகிறார். மாணிக்கன் தேவரடியார் என்றும் குறிக்கப்பட்டுள்ளார். சதிர்க்கச்சேரி வல்லவனே சதிரன் எனப்படுவான்.

## தலைவிலை தந்த விலையர்

விலைய குலத்தில் திருவாளி நல்லவன் பற்றிய செய்தியை வாலசுந்தரக் கவிராயரின் கொங்கு மண்டல சதகம் தெரிவிக்கிறது. தமிழக மூவேந்தர்கள் முன்னிலையில் தங்கள் உரிமைகளை

நிலைநாட்ட, காணி உரிமை பெற தங்கள் தலையையே அரிந்து தலைப்பலி தந்த பெருமையுடையவர்கள் விலைய குலத்தினர். அவர்கள் வழி வந்த விலைய குலத்தைச் சேர்ந்த திருவாளி நல்லவன் என்பவர் தமிழ் பாடி வரும் புலவர்கட்குப் பொருளை வாரி வழங்க எல்லோர்க்கும் தெரிந்து காட்சி கொடுக்கும் மலைபோல விளங்கினார் என்று கூறுகிறார் கவிஞர்.

'கலைதெரி மூவர் அரசர்முன் கொங்கினில் காணிக்குத்தன்
தலையை அரிந்து புவியினில் வாழ்ந்தவன் தண்டமிழ்க்கு
விலைய குலாதிபன் திருவாளி நல்லவன் வேடர்தந்த
மலைதெரி வாசம் புகழ்தரு வாங்கொங்கு மண்டலமே''

என்பது கொங்குமண்டல சதகப் பாடலாகும்.

## ஓர் ஆய்வு

விழியன் குலமும், விலைய குலமும் ஒன்றே என்று ராம் ரவீந்திரன் 'வெளியன் குல வரலாறு' என்ற பெயரில் நூல் எழுதியுள்ளார் (1992). இரண்டு குலமும் வெவ்வேறு குலங்கள் என்பதில் எந்த ஐயமும் இல்லை.

## கீரனூரார் கொடை

கீரனூர்க் காணியாளர்கள் கொங்கு வேளாளரில் ஆறு குலத்தாரும் சேர்ந்து கீரனூரில் உள்ள 'செல்லப்பிள்ளையார்' என்னும் விநாயகர் கோயிலுக்குக் கொடை கொடுத்தனர். விசயநகர மன்னன் அச்சுத தேவ மகாராயர் காலத்தில் அண்ணரய்யன் என்னும் அதிகாரி காங்கய நாட்டில் நிர்வாகம் செய்யும்போது இக்கொடை கொடுக்கப்பட்டது.

இப்போது செல்லப்பிள்ளையார் கோயில் நத்தவிநாயகர் கோயில் என்று அழைக்கப்படுகிறது. அங்குள்ள குத்துக்கல்லில் இதைக் குறிக்கும் கல்வெட்டுப் பொறிக்கப்பட்டுள்ளது.

> ''சாலியவாகன சகாப்தம் 1413ன் மேல் செல்லா நின்ற ஏவிளம்பி வருஷம் மார்கழி மாதம் 1ம் தேதிக்கு அச்சுத மகாராயர் காரியத்துக்குக் கடவதான அண்ணரய்யன் அவர்களுக்குச் செல்லா நின்ற காலத்தில் காங்கய நாட்டுக் கீரனூரில் வெள்ளாளன் அந்துவரில் செயராசக் கரிவாண்டா ரும், சிறுராசாவும் மேற்படியூரில் உள்ளூர்க் கொத்துக்காரன் ராக்கியாரும் தேவந்தைகளில் செல்லன் கூத்தரும் ஆதிகளில் நயினார் உலகுடையாரும் அந்துவரில் பிள்ளிராக்கியாரும் காடர்களில் இராக்கியார் முத்தண்ணனும் விலையரில் ராக்கிய நல்லண்ணரும் கீரர்களில் முத்தண்ணனும் ஊரிலக்கத்தில் போகமா செல்லப் பிள்ளையாருக்கு உபயமிட்டுக் கொள்ளக் கடவோம் என்பவர் தன் பொன்னாலும் இதற்கு அழிவு செய்தவன் அசுவத்தி கோகத்தி பிரமஹத்முதலியபாவத்துக்கு ஆளாவான் செல்வநாயகி ரட்சிப்பாள்'

**வெலைய குல சிகாமணிகள்**

சிவகிரி வேலாயுத சுவாமி தீபத்தம்பத்தை விலைய குல முன்னோர்கள் கட்டினர். மீண்டும் அவர்கள் வழியினரான விலைய குலத்தார் தாது வருடம் கார்த்திகை 13ஆம் நாள் (1756) திருப்பணி செய்து புதுப்பித்தனர். அதைக் கல்வெட்டாகவும் பொறித்தனர்.

> 'வெலைய குல வம்சத்தின் முன்னோர்கள் அமைத்துள்ள திருக்கோடி தீப ஸ்தம்பத்தை மேற்படி வெலைய குல சிகாமணிகளால் இந்த தீப ஸ்தம்பம் செய்யப்பட்டது வேலாயுதசுவாமிக்கு''

என்பது அதைக் குறிக்கும் கல்வெட்டாகும். இக்கல்வெட்டில் வெலைய குலம் என்றே குறிக்கப்பட்டுள்ளது.

# 96. விழியன் குலம்

விழியன் குலம் கொங்கு வேளாளர் குலங்களில் தொன்மைச் சிறப்புடைய குலங்களில் ஒன்று. விளியன் குலம் என்றும் அழைக்கப்பெறும். இராசிபுரம் கைலாசநாதர் கோயிலில் உள்ள கி.பி.1443ஆம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்றில் இராசிபுரத்தில் 'வெள்ளாளன் வெளியர்களில் கரிய பெருமாள்' என்பவர் கைலாசநாதர்க்குக் கொடையாக அத்தனூர்க் கிராமத்தைக் கொடுத்த கல்வெட்டு உள்ளது. அதனால் விளியன் (விழியன்) குலத்தாரின் பழம்பெயர் வெளியன் - வெளியர் என்று தெரிகிறது.

சங்க இலக்கியங்களில் 'வெளியன் வேண்மான் ஆய் எயினன்', வீரை வேண்மான் வெளியன் தித்தன்' போன்ற அரசர் பெயர்களும், எருமை வெளியனார் என்ற புலவர் பெயரும் பயின்று வருகின்றன. இவர்கள் வேள் + மகன் (வேண்மான்) என்று குறிக்கப்படுவதால் இவர்கள் வேளாளர் என்பது தெளிவு.

இவர்கள் மூவேந்தர்கட்கு மகட்கொடையளிக்கும் வேளிர் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். சேரமன்னன் உதியஞ்சேரலாதன் மனைவி வெளியன்வேள் மகள் (வேண்மாள்) நல்லினி என்பவள். வெளியர்குலப் பெண் நல்லினி மக்களே இமயவரம்மன் நெடுஞ் சேரலாதன், பல்யானைச் செல்கெழுகுட்டுவன் ஆகியோர் ஆவர். இவ் வெளியர்கள் வானவரம்பன் நாடாகிய சேர நாட்டில் 'வெளியம்' என்ற ஊரை ஏற்படுத்தினர். அவ்வூர் இன்று 'விழிஞம்' என்று அழைக்கப்பெறுகிறது.

## விழியன் தித்தன்

இராசிபுரம் கொங்கு வேளாளர்களில் விழியன் குலத்தில் தித்தன் என்னும் ஒரு வீரன் இருந்தான். தித்தன் வீரம் உடையவனாக இருந்ததால் அன்று ஆட்சிபுரிந்த சோழன் படையில் போர் வீரனாகச் சேர்ந்தார். காஞ்சிபுரம் பகுதியில் தொண்டை நாட்டில் சோழருக்கு உட்பட்டிருந்த கம்பண்ணன் என்பவன் தனியாட்சியராகத் தன்னை அறிவித்துக் கொண்டதோடு சோழர் ஆட்சிக்குத் தொல்லையும்

கொடுத்துவந்தான். சோழன் ‘கம்பண்ணனை அடக்குவோர் யாரேனும் உளரோ?’ என்று கேட்ட போது விழியர்குலத் தித்தன் ‘நான் சென்று கம்பண்ணனை அடக்குவேன்’ என்றான். சோழன் அவன் வீரத்தை மெச்சிப் படையோடு தொண்டைநாடு நோக்கி அனுப்பினான். தித்தன் தான் சோழனிடம் கூறியவாறு வெகு விரைவில் போரிட்டுக் கம்பண்ணனை வென்று அங்கு சோழர் அதிகாரத்தை மீண்டும் நிலை நிறுத்தினான்.

தித்தன் சோழர் சேனாதிபதி ஆனான். சோழன் தித்தனுக்கு ‘சுரிகைமுனை வல்லான்’ என்ற பட்டம் கொடுத்து புலிக்கொடியும், ஆத்திமாலையும் அளித்து இராசிபுர நாட்டை ஆட்சிபுரியுமாறு அளித்தான். தித்தன் இராசிபுர ஆட்சியாளராக இருந்த காரணத்தால் ‘இராசையோன்’ என்று கூறப்பட்டான். இந்த வீர வரலாறு ‘இராசிபுரத்தார் மெய்க்கீர்த்தி’, ‘இராசிபுரம் குறவஞ்சி’ ஆகிய நூல்களில் காணப்படுவதாகத் தி.அ.முத்துசாமிக் கோனார் 1923ல் தன் கொங்கு மண்டல சதகப் பதிப்பில் கூறியுள்ளார். இப்போது அந்நூல்கள் கிடைக்கவில்லை.

ஆனால் கார்மேகக் கவிஞரின் கொங்கு மண்டல சதகத்தில் இந்த வரலாறு கூறப்பட்டுள்ளது (88).

> ‘‘கருவித்து அடிப்படி யாதுஅமர் ஆற்றிடும் கம்பணனைச்
> செருவில் படவென்ற தீரனை நோக்கிஅச் செம்பியனும்
> சுரிகைப் படையினில் வல்லோன் அகளங்கச் சோழன்என
> வருபட்டம் ஈயப் பெறுராசை யோன்கொங்கு மண்டலமே’’

என்பது கொங்கு மண்டல சதகப் பாடலாகும்.

விழிய குலத்தில் நான்கு உட்பிரிவுகள் உள்ளன. பாச்சலூரான், செண்பகராயன், துலுக்கண்ணன், ஆலத்தூரான் என்ற தலைவர்கள் வழிவந்த விழிய குலத்தார் அத்தலைவர் பெயரிலேயே அழைக்கப் பெறுகின்றனர். விழிய குலத்தாரின் குலதெய்வம் ஆன அத்தனூரம்மன் கோயிலில் உள்ள நான்கு குதிரை உருவங்களும் இந்த நான்கு பிரிவினைக் குறிக்கும் என்பர்.

1878 ஆம் வருடத்திலும் அதற்குப் பின்னரும் ஏற்பட்ட மிகக் கொடிய பஞ்சம் பற்றி வெண்ணந்தூர் குருசாமிப்புலவர் 'பஞ்சக்கும்மி' என்ற நூலை இயற்றியுள்ளார். விழிய குலப் பிரிவினரான இந்நான்கு தலைவர்களும் இராசிபுர நாட்டில் பஞ்ச நிவாரணப் பணி செய்ததை இக்கும்மிப் பாடல் கூறுகிறது.

''பாச்சலூ ரான்செம்ப ராயண்ணன் துலுக்கண்ணன்
　　பார்த்திபன் ஆலத்தூ ரானுடனே
பேச்செல்லாம் ஒன்றாக நால்வரும் கூடியே
　　பேசி இராசிவள நாட்டில்வந்தார்''

என்று பஞ்ச நிவாரணப் பணிக்காக விழியர் குலத்தார் கூடியதைப் பஞ்சக் கும்மி கூறுகிறது.

பல ஆவணங்களில் இவர்கள் பெயர்கள் காணப்படுகின்றன. ஒருமுறை சுக்காடரில் இறையமங்கலம் பல்ல நாயக்கன் மோரூர்ப் பாம்பலங்காரர் சன்னதியில் மழு எடுத்துத் தன் உரிமையை நிலை நாட்டினான். சுக்காடருக்கு அதனால் சில உரிமைகளைக் கொங்கு வேளாளர் தலைவர்கள் நாமக்கல்லில் கூடிக் (திருவாரைக்கல்) கொடுத்தனர். பூந்துறை நாட்டு நாலு கவுண்டர்கள், பருத்திப்பள்ளிச் செல்லகுலக் கொண்டாக்கவுண்டர், காரையூர்ப் பட்டக்காரர் நல்ல நயினார் இவர்களோடு கூடி உரிமை கொடுத்த பெருமக்களில் இராசிபுரம் நாட்டுத் துலுக்கண்ண கவுண்டரும் இருந்துள்ளார்.

குருசாமிபாளையம் அருகில் உள்ள அழியா விலங்கியம்மன் கோயிலுக்கு நந்தவனம் அமைத்துப் பயன் மரங்கள் வளர்க்கத் துலுக்கண்ண கவுண்டர் தக்க கொடை கொடுத்து ஏற்பாடு செய்தார். அம்மரங்களுக்கு எவரேனும் தீங்கு செய்தால் கங்கைக் கரையில் காராம் பசுவைக் கொன்ற தோஷம் வரும் என்று எச்சரித்துள்ளார்.

இராசிபுரம் விழிய குலச் செண்பகராயக் கவுண்டர் மதுரைச் சொக்கநாதர் கோயிலுக்கு வருடம் முழுவதும் விளக்கு எண்ணெய் அளக்கப் பட்டணம் அருகில் சின்ன வடுகம் என்ற இடத்தில் உள்ள நிலங்களைக் கொடையாக அளித்துள்ளார்.

துலுக்கண்ண கவுண்டரும் அவரைச் சார்ந்த விழிய குலத்தாரும் மிகப் பெரிய தியாகம் செய்த வரலாற்றை வாலசுந்தரக் கவிராயர் தன் சதகத்தில் கூறியுள்ளார்.

ஒரு பார்ப்பனப்பெண் முற்பிறவியில் தன்னையும், தன் மகனையும் கொன்ற கணவனை அடுத்த பிறவியில் பழிவாங்க நினைத்தாள். தரிசன செட்டியார் என்ற பெயரில் மறுபிறவியில் பிறந்த கணவருடன் நீலி என்ற பெயரில் இப்பிறவியில் பிறந்த முற்பிறவிப் பார்ப்பனப் பெண் இரவில் தரிசன செட்டியாருடன் தங்கவேண்டும் என்றாள். தரிசன செட்டி உண்மையை அறிந்து கொண்டு அவளோடு தங்க மறுத்தான். விசாரணையை நாளை வைத்துக் கொள்ளலாம். உன் உயிருக்கு நாங்கள் எழுபது வேளாளரும் பிணையாக இருக்கிறோம் என்று கூறி இரவில் இருவரையும் ஒன்றாகத் தங்க வைத்தனர். இரவில் நீலி தரிசன செட்டியாரைக் கொன்று விடுகிறாள். தாங்கள் பிணையாக இருந்த தரிசன செட்டி இறந்ததற்காக எழுபது வேளாளரும் தீ வளர்த்து அதில் பாய்ந்து இறந்தனர்.

அவ்வாறு இறந்த வேளாளர்களில் இராசிபுரத்துத் துலுக்கண கவுண்டரும், அவரோடு சேர்ந்த விழிய குலத்தார் சிலரும் இருந்தனர். இதனை சதகப்பாடல்

''எளியவர் நீலி வணிகனுக்கு ஓர்பழிக்கு ஏழுபத்துப்
பழிதனை ஈந்து கொளுமுனை யாற்பதின் மூவர்முன்னே
விழிய குலேந்திரன் துலுக்கண்ண ராவுத்தன் மேவுகங்கை
வழிபெற மூழ்கி எழுந்தான் புகழ்கொங்கு மண்டலமே''

என்று சிறப்பிக்கிறது.

விழியகுலத் துலுக்கண்ண கவுண்டரும் பிறரும் செய்த இத்தியாகம் பின்னர் பல இடங்களில் வேளாளர் புகழாகக் கூறப்பட்டுள்ளது.

''நீலி தனக்கஞ்சி நின்றவணி கேசனுக்காய்க்
கோலி அபயம் கொடுக்கும்கை''

என்றும்,

''சீர்பெறும் பழையனூர் நீலிபழி கொண்டிடும்
செயகங்கை குலமரபுளோர்'' என்றும்

மேற்கண்ட நிகழ்ச்சி சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.

பருத்திப்பள்ளி நாட்டில் அதிபராக விளங்கியவர் சீகாழியப்பன் என்பவர். அரசர்களும் குடிகளும் பாராட்டும்படியாக வாழ்ந்தவர். வள்ளலாக வாழ்ந்த அச்செல்ல குல வேளாளருக்கு வெள்ளை நிறமுடைய ஒரு மகள் இருந்தாள். நல்ல குலத்தில் அன்பு, அறிவு, ஒழுக்கமுள்ள மணமகன் என் பெண்ணை மணந்தால் தக்க காணி கொடுப்பேன் என்று அறிவித்தான்.

இராசிபுரம் விழியகுல இளைஞன் நல்லய்யன் சீகாழியப்பன் மகளை மணக்க முன்வந்தான். திருமணம் சிறப்பாக நடைபெற்றது. சீகாழியப்பன் முன் அறிவித்தவாறு தன் நிருவாகத்திற்கு உட்பட்ட பருத்திப்பள்ளி நாட்டின் 32 ஊர்களில் 11 ஊர்களைப் பிரித்து 'மல்லை நாடு' என்று மல்லசமுத்திரத்தைத் தலைநகராகக் கொண்டு உருவாக்கி மருமகனுக்கு அளித்தார். நல்லய்யன் வழியினர் 'மல்லை விழியர்' என்று அழைக்கப்பட்டனர். அதேபோல இராசிபுர விழியர்கள் திண்டமங்கலத்தில் குடியேறிக் காணி பெற்றனர். இன்று இராசிபுரம், மல்லசமுத்திரம், திண்டமங்கலம் விழியர் குலத்தார் நாட்டு வேளாளர் என்று அழைக்கப்பட்டாலும் இம்மாற்றம் பிற்காலத்தில் ஏற்பட்டதுதான். இராசிபுரம் விழிய குலத்தாரின் பூர்வீகம் காங்கேய நாட்டுப் பரஞ்சேர்வழி என்பது வரலாறு.

இராசிபுர விழியகுலத்தார்தான் வேளுக்குறிச்சியில் ஜமீன் வாங்கிக் குடியேறினர். வேளுக்குறிச்சி ஜமீன்தார் சுப்பராய கவுண்டரைப் பாடிப் பரிசு பெறச் சென்றார் மண்டகப்பாளையம் காளியண்ணப் புலவர். சிலர் கூடியிருந்த கூட்டத்தில் சுப்பராயக் கவுண்டர் யார் என்று காளியண்ணப் புலவருக்குத் தெரியவில்லை. கூட்டத்தை நோக்கி,

'இருமடந்தை நண்பன் இராசை வளநாடன்
அருவிழியன் வேள்குறிச்சி யாளன் - பரஞ்சேர்
வழிவேல வன்பேரன் வாழ்நஞ்சை யன்சேய்
எழில்சுப்ப ராயன் எவன்?''

என்று பாடியதாகக் கூறுவர். இச்சுப்பராயக்கவுண்டர் மிகப்பெரிய இசை நிபுணராகவும், தமிழ் அறிஞராகவும் விளங்கினார்.

வேளுக்குறிச்சி (பேளுக்குறிச்சி என்பது தவறு) ஜமீன்தாரர்கள் அனைவரும் சிறப்பு மிக்கவர்கள் எனினும் நஞ்சையகவுண்டர் மகன் வேலப்ப கவுண்டர் (1830-1898) மிகவும் புகழ்வாய்ந்தவர். இலக்கணம், இலக்கியம், மாந்தரீகம், சோதிடம், மருத்துவம், இசை, நடனம் முதலிய பல கலை வித்தகர். கூவைமலை வேலவர்கோயில், திருச்செங்கோட்டுக் கோயில்கள், அத்தனூர் அம்மன் கோயில் அறங்காவலர் ஆக விளங்கிப் பல திருப்பணிகள் செய்தவர். பல புலவர்களை ஆதரித்தவர். மாம்பழக் கவிச்சிங்க நாவலரால் 'சந்திர விலாசம்' நூல் பாடப்பட்டவர். வேளுக்குறிச்சியில் யாரும் பசித்திருக்கக் கூடாது என அனைவருக்கும் உணவு அளித்தவர். 1885ல் நடைபெற்ற காங்கிரஸ் மாநாட்டுக்குச் சென்னை மாகாணப் பிரதிநிதிகளாகக் கலந்து கொண்ட 72 பேரில் ஒருவர். விக்டோரியா முடிசூட்டு விழாவையொட்டிப் பாராட்டுப் பெற்றவர்.

நாட்டையே உலுக்கிய கொடிய தாதுவருடப் பஞ்சத்தில் அன்னதானம் செய்து மக்களைக் காப்பாற்றியவர்.

''அட்சய வருடமதில் அன்னமிட் டனைவோருக்கும்
பட்சமுடன் வேலப்பமால் - தங்கம்
பஞ்சமதைத் தீர்த்தானடி''

''காப்பகமான தருவுக்கு நிகரான
வீரப்பன் வேள்குறிச்சி நஞ்சயன்சேய்
அற்புத மான தவத்தால் உதித்த
தற்புரு ஷன்வே லப்பதுரை''

பஞ்ச நிவாரணப் பணி செய்ததுடன் வெண்ணந்தூர்ப் புலவர்களைக் கொண்டு இரண்டு பஞ்சக்கும்மி நூல்களும் பாடச்செய்தார். அக்காலகட்டத்தில் வள்ளலாக வரையாது கொடுத்தவர் வேலப்ப கவுண்டர் மட்டுமே யாவார். அக்காலப் புலவர் ஒருவர் பின்வருமாறு பாடியுள்ளார்.

''சிந்தைமகிழ்ந் திடும்மைகுர்ச் சமஸ்தா னத்தில்
செயவில்லை, கும்பினியார் செய்ய மாட்டார்,
அந்தமிகு செஞ்சிதஞ்சா வூர்கோ டற்கோ
அரசில்லை, சேதுவுக்கே ராணிப் பட்டம்
வந்தஎட்ட யாபுரத்தில் பேட்டி இல்லை
மற்றவர்க்கோ கொடைகொடுக்க வளம்போ தாது
செந்தமிழ்க்கு வேள்குறிச்சி யொன்றே அல்லால்
செய்யுதற்கோ வேறிலைமுச் சகத்தில் தானே''

என்பது அப்புலவர் பாடிய பாடலாகும்.

இராசிபுரத்திலிருந்து சென்று மல்லை நாட்டை ஆட்சிபுரிந்த நல்லய்யன் மல்லசமுத்திரத்தில் சோழீசர் கோயிலைக் கட்டினார். பாகைப் பிள்ளைப் பெருமாள் கவிராயர் 'மல்லைச் சோழீசர் வருக்கக் கோவை' என்ற இலக்கியம் பாடினார்.

''துதிபரவும் மல்லையில் திருவாழி யம்மையொடு
சோழீசர் கிருபையாலே

மதிவதன விழியகுல சுரிகைமுனை அகளங்கன்
மல்லை நல்லய்யன்''

என்று நல்லய்யன் புகழப்படுகிறார்.

மல்லை விழியர் மரபில் மிகுபுகழ் பெற்றவர் தொண்டைமான் என்பவர். வளர்கடாவைக் காதறுத்த வள்ளல் பகதூர் தொண்டைமான் என்று இவர் அழைக்கப் பெற்றார். இவர் செய்த மக்கள் சேவைக்காக மாமுண்டி, மங்கலம், காளிப்பட்டி முதலிய ஊர்களை இனாமாகப் பெற்றார். இவர் மல்லசமுத்திரம், மாமுண்டியில் ஏரிகள் அமைத்தார். மங்கலத்தில் பெரிய ஏரி, சின்ன ஏரி இவைகளை அமைத்தார். வெண்ணந்தூரிலும் ஏரி அமைத்தார்.

வருவாய் அனைத்தையும் மக்கள் நலனுக்குப் பயன்படுத்தியதால் திப்புசுல்தானுக்கு உரிய வரியைச் செலுத்த இவரால் முடியவில்லை. அதனால் இவர் தண்டிக்கப்பட்டார். இவருடன் இவர் மனைவியும் தீப்பாய்ந்து இறந்தாள். அவள் சமாதிக் கோயில் 'தீப்பாஞ்ச அம்மன் கோயில்' என்ற பெயரில் மணிமுத்தாற்றங் கரையில் உள்ளது.

தொண்டைமான் என்னும் பெயரை இத்தலைவனுக்கு அளித்தவர் தொண்டைமண்டலத் தலைவர் தொண்டைமான் ஆவர். தொண்டைமானின் பகைவர்களை விழியர் குல இளைஞன் அழித்ததால் தொண்டைமான் என்ற பட்டப் பெயரைப் பெற்றான். பின் இப்பட்டம் பரம்பரைக்கும் உரித்தானது.

''பண்டைய நாளில்ஒன் னார்பஞ்சு போலப் பறந்தகலத்
திண்டிறல் காட்டிய காளையை நோக்கிஅச் செம்பியனும்
தொண்டைமான் என்னும் தனதுநல் பேரும் துரைத்தனமும்
வண்தரை மீதினில் பெற்றவ னும்கொங்கு மண்டலமே''

என்பது கார்மேகக் கவிஞரின் கொங்கு மண்டல சதகப் பாடலாகும்.

இம்மரபினர் செல்லும்போது இவர்கள் முன்னர் வெண்கலத் துடும்பு அடித்துச் செல்லும் உரிமையை நவாபு இவர்கட்கு அளித்தார். ஓலைப்பட்டி சௌதாபுரத்தில் இவர்கள் வம்சத்தாரிடம் இன்னும் வெண்கலத் துடும்பு உள்ளது.

ஐதர் அலி, திப்பு சுல்தான் காலத்தில் மல்லை விழியர் பலர் குதிரை வீரர்களாகச் சிறந்த முறையில் பணியாற்றியுள்ளனர். தலைவர்கள் இவர்களை 'ஆவோஜி' என அழைத்தனராம். அப்பெயர் காலப்போக்கில் மருவி இன்றும் இம்மரபினர் சிலருக்கு 'ஆவிச்சி' என்று வழங்குகிறது.

கொங்கு 24 நாடுகட்கும் பரம்பரைக் காணிப்புலவர்களை நியமனம் செய்து எழுதப்பட்ட செப்பேட்டில் 'இராசிபுர நாடு விழிய குல இலட்சுமிராயக் கவுண்டர்' என்பவர் கையொப்பமிட்டுள்ளார். கோயில், சமயப் பணிகட்காக 'தாசன்' என்னும் மாணிக்கையை நியமித்துக் கொண்டதாக ஐந்து படிக்காரர் பட்டயம் கூறுகிறது.

## விழிய குலக் கல்வெட்டு
## (இராசிபுரம் கைலாசநாதர் கோயில்)

''ஸ்ரீமது சாலிவாகன சகாற்த்தம் 1568 இதின்மேற் செல்லா நின்ற விக்கிரம வருஷம் ஆவணி மாதம் 20ம் தேதி ஸ்ரீமன்மத் திரையோதெசி குரு வாரம் குரு...னை நட்சத்திரமும் பத்திரவாகரணமும் பெற்ற சுபயோகமும் பெற்ற சுகநாள் ஸ்ரீமன் மகாமண்டலீசுவரர் ராசாதிராசர் ராச பரமேசுவரர் பெநுகொண்டை சிங்காதனத்திலிருந்து பிருத்விராச்சியம் பண்ணுகையில் மதுரை மண்டல விசுவநாத நாயக்கர் திருமலை நாயக்கனய்யனவர் ராச்சிய பரிபாலனம் பண்ணுகையில் வைத்தியப்ப அய்யனவர்கள் ராச்சியம் ஆளுகையில் கொங்கு மண்டலம் குன்றத்தூர் கூற்றத்துக்குச் செல்லும் ராசிபுர நாட்டில் செண்பகராய கவுண்டர் பவுத்திரன் நல்லதம்பிக் கவுண்டர் புத்திரன்

செண்பகராய கவுண்டர் சொக்கநாத சுவாமியார்க்கு அறக்கட்டளை அபிஷேக நெய்வேத்திய திருமஞ்சனம் திருமாலைக்கு அங்கயற்கண் அம்மை சன்னதியில் வடபுறத்தில் தம்மிட அறக்கட்டளைக்கு நெய்விளக்குக் கோனேரி யப்பன் பௌத்திரன் சொக்கநாதன் புத்திரன் கோனேரியப்பன் வசமாக அந்த அறக்கட்டளை நடத்திவரச் சொல்லி கட்டளையிட்ட படியினாலே அதுக்குப் பூதான தனம் சாதனம் நம்மிட கிராமமான பட்டணத்துக்குச் சேந்த சின்ன வடுகத்துப் புஞ்னசயில் பிள்ளையார் கோயிலுக்கும் தென்புறத்துக் கொல்லையான பத்தஞ்சு பொ... ளுகத மட்டுக் கட்டிச் சிவாற்பிதமாக நம்மிட பெரியவர்கள் பிதாக்களுக்குப் புண்ணியமாக கட்டளையிட்டோம். இந்த தன்மம் ஆச்சந்திராற்கமாக நடப்பதாகக் கட்டளையிட்டோம். இந்த தர்மத்துக்கு யாதாமொருத்தன் அகிதம் பண்ணினான் கெங்கைக் கரையிலே காராம்பசுவைக் கொன்ற தோஷத்திலேயும் ஆதபத்தி வீறுபத்தி சிறுகத்தி பண்ணின தோஷத்திலேயும் மாதா பிதாவை வதை பண்ணின தோஷத்திலேயும் போகக் கடவானாகவும் இப்படி இந்த தன்மம் கட்டளையிட்டோம். இச்சாதனம் எழுதினமைக்கு இளைச்சி கணக்குப்பிள்ளை எழுத்து.

# 97. வெண்டுவன் குலம்

முதலாம் இராசராசன் (985-1014) காலக் கல்வெட்டு ஒன்றில் 'வெண்டுவன் அதிருக்குறையான்' என்ற பெருமகன் ஒருவர் குறிக்கப்பெறுகிறார். ஒப்பாரும் மிக்காரும் இல்லாத வெண்டுவன் என்ற குல முதல்வர் வழிவந்த வேளாண் பெருமக்கள் வெண்டுவன் குலத்தார் என்று அழைக்கப் பெற்றிருக்கலாம்.

டி.எம்.காளியப்பா 'வெண்டுக்காய்' என்பது வெண்டைக் காயின் பெயர். வெண்டைக்காயை அடையாளச் சின்னமாகக் கொண்டவர்கள் வெண்டுவ குலத்தார் என்று கூறுகிறார். அவர் வெண்டுவ குலம் தவிரக் கொங்கு வேளாளர் சமூகத்தில் 'வெண்டுஉழவர்' குலம் ஒன்று தனியாக இருப்பதாகவும் கூறுகிறார். 'வள்ளிபுரம்' மட்டும் அவர்கள் காணியூர் என்கிறார். ஒரு சிலர் 'வெண்டுவர்' என்பதை 'வெண்டுழவர்' எனத் தவறாக உச்சரித் திருக்கலாம். 'வெண்டுழவர் குலம்' எங்கும் இல்லை.

நல். நடராசன் 'வேள் + உழவர்' என்ற சொல்லே 'வெண்டுவர்' குலம் ஆயிற்று என்று கூறுகிறார். அவ்விரு சொற்கள் 'வேளுழவர்' ஆகுமே தவிர வெண்டுவர் என ஆகாது.

தெ.ப. சின்னசாமி வான் மழையை 'வேண்டுவோர்' வெண்டுவர் ஆனார்கள் என்று கூறுகிறார்.

கு. சேதுராமன் வெண்டைக்காய் விளைவிப்பதில் வல்லவர்கள் வெண்டுவன் குலத்தார் என்று கூறுகிறார். பிறர்க்காக வெண்டைக்க ாய் விளைவிக்கும் வெண்டுவன் குலத்தார் வெண்டைக்காயை உண்ணமாட்டார்களாம். டி.எம். காளியப்பா 'வெண்டுவன் குலத்தார் வெண்டைக்காயை உண்ண மாட்டார்கள்' என்று கூறுகிறார்.

## புலவர் புகழ்மொழி

குலச்சிறப்புக் கூறும் பாடல்களில் வெண்டுவன் குலத்தார் 'நம் குடிகள் வெண்டுவன்'' 'கன்றுதவு வெண்டுவன்' என்று சிறப்புடன் குறிக்கப் பெறுகின்றனர்.

புலவர்களைப் போற்றிப் புரந்து, பொன்னும் பொருளும் வாரி வழங்கிச் சிறந்தவர்கள் வெண்டுவ குலத்தார். வெண்டுவர் குலத்தார் புலவர் சூழ்ந்திருக்க வீற்றிருப்பர். வெண்டுவ குலத்தாரின் ''முத்து மணி இலங்கும் முகசாலை மண்டபத்தே வித்வசனர் எந்நாளும் வீற்றிருப்பர்'' என்று கூறப்படுகிறது. அதனால் புலவர்கள் வெண்டுவ குலத்தாரை நம் குடிகள் என்று உரிமையுடன் அழைத்தனர். அக் காலத்தில் வேளாளர் வீடுகளில் பிற சமூகத்தாரின் கன்றுக்குட்டி கட்கு இலவசமாகப் புல் கொடுப்பர், தலைக்கு எண்ணெயும், குழந்தைகட்குப் பாலும் இலவசமாகக் கொடுப்பர். இதைக் குறிக்கவே 'கன்றுதவு வெண்டுவர்' என்று கூறப்பட்டுள்ளது. இம்மூன்று அறச்செயல்களையும் வெண்டுவன் குலத்தார் தலையாய கடமையாகச் செய்து புகழ் பெற்றுள்ளனர்.

**கம்பரும் வெண்டுவன் குலத்தாரும்**

கவிச் சக்கரவர்த்தி கம்பர் கொங்கு நாட்டு எச்சில் நீர்தான் காவிரி, அதுதான் சோழநாடு செல்லுகிறது என்று சோழனுக்குக் குளித்தலையில் நிரூபித்துக் காட்டினார். மன்னரைவிட வேளாளர் பெரியவர்கள் என்று நிறுத்துக் காட்டினார். வேளாளரைப் பாடிய வாயால் யாரையும் பாடமாட்டேன் என்றார். காப்பவர் என்றும் வேளாளர் என்றார்.

அதனால் வெண்டுவர் முதலாகிய கொங்கு வேளாண் பெருமக்கள் கம்பருக்கு அடிமைச் சாசனம் எழுதிக் கொடுத்தார்கள். ஆனால் வெண்டுவர் குல வள்ளல் தீத்தான் செவ்வந்தி என்பவர் கம்பருக்கு அடிமைச் சாசனம் எழுதிக் கொடுத்ததோடு மட்டும் நிற்கவில்லை. கம்பருக்குத் தெரியாமல் அவர் பயணம் செய்யும்போது கம்பர் அமர்ந்திருந்த பல்லக்கைச் சுமந்து மகிழ்ந்தார். கம்பர் விருந்துண்ட பின் தாம்பூலம் தரித்தபோது அவருடைய தாம்பூலம் துப்பும் எச்சில் காளாஞ்சி என்னும் பாத்திரத்தை ஏந்தி நின்றார். கம்பருடைய செருப்புக்களைப் பார்த்தார். இந்தச் செருப்புக்கள்

கம்பருடைய திருவடிகளைத் தாங்க என்ன தவம் செய்ததோ என்று அச்செருப்புக்களைத் தன் தலைமீது சுமந்து கூத்தாடினார்.

இந்த அரிய செயல் நாடெங்கும் பரவியது. வாலசுந்தரக் கவிராயர் தன் கொங்கு மண்டல சதகத்தில் வெண்டுவ குலத் தீத்தான் செவ்வந்தியைப் புகழ்ந்து ஒரு பாடல் எழுதியுள்ளார் (83).

''தண்டிகை தாங்கியும் காளாஞ்சி ஏந்தியும் தமிழ்செய்கம்பர்
அண்டையில் பாதச்சம் மாளியும் தூக்கி அடிமையும்பட்டு
வெண்டுவ கோத்திரன் தீத்தான் செவ்வந்தி விளங்குகங்கை
மண்டலம் கீர்த்தி தனைப்படைத் தான்கொங்கு மண்டலமே''

என்பது கொங்கு மண்டல சதகப் பாடலாகும்.

**மண உறவால் மணலூர் நாட்டுக் காணி பெறல்**

மணலூர் நாட்டுக் கூடலூர்க் கிராமம் மேல் பாகம் பெரிய மதியாக் கூடலூர் மணியம் என். பொன்னுசாமிக் கவுண்டரிடம் ஒரு செப்பேடு உள்ளது. சின்ன தாராபுரம் கவிஞர் புதுமதியன் தம் 'நல்லதாய்' நூலில் அச்செப்பேட்டைப் பதிப்பித்துள்ளார்.

கூடலூர்க் கிராமத்தில் பண்ணை குலத்துப் பெரியண கவுண்டருக்கு ஒரு முடமான பெண் பிறந்தாள். அப்பெண்ணின் பெயர் ராசம்மாள் கவுண்டச்சி என்பதாகும். வெண்டுவன் குலத் தில்லையப்ப கவுண்டர் மகன் பொன்னம்பலக் கவுண்டர் முடப்பெண் பண்ணைகுல ராசம்மாள் கவுண்டச்சியைத் திருமணம் செய்துகொண்டு கூடலூர்க் காணி பெற்றார். கூடலூர்க் கிராமத்தில் உள்ள பெரிய திருமங்கலம் அருங்கரையம்மன் ஆலயத்தை வெண்டுவன் குலத்தார் உருவாக்கினர். பெரிய திருமங்கலத்தில் குடியேறிய வெண்டுவ குலத்தார் கிழக்கு வளவு, மேற்கு வளவு என்ற இரு பிரிவாகச் சிறப்புடன் வாழ்ந்து வருகின்றனர். இங்கு வெண்டுவன் குலத்தார் பழனி அருகில் உள்ள கொங்கூரிலிருந்து குடியேறியவர்கள் என்று கூறப்படுகிறது.

பெரிய திருமங்கலத்தில் 'கிராமப் பெரியதனமும், கொல்லுத் தொழில் ஆண்டிதோண்டி பள்ளுப் பறை பதினெட்டுச் சாதியாரின் தொழிலும் வெண்டுவன் குலத்தாருக்கு உரியதாக இருந்தது, என்று கவிஞர் புதுமதியன் எழுதியுள்ளார். கன்னிவாடிக் கண்ணகுலப் பட்டயத்தில் மணலூர் நாட்டு வெண்டுவன் குலம் காளியப்ப கவுண்டர் என்பார் குறிக்கப்படுகிறார். அருகில் உள்ள பிள்ளையார் பாளையம், பெரிய மதியாக் கூடலூர் ஆகிய ஊர்களும் வெண்டுவ குலத்தார் காணியூர்கள் ஆயின. கூடலூர்க் கிராமத்தில் தலைமைப் பொறுப்பும் உள்ளூர்க் கவுண்டர்கள் என்று பெயரும்பெற்ற வெண்டுவன் குலத்தார் வடமுகம்,தென்முகம் என்று இரண்டு பிரிவாக வாழ்கின்றனர். கோயில்பாளையம், கருநெல்லிவலசிலும் வாழ்கின்றனர்.

கூடலூர், கோயில்பாளையம், கருநெல்லிவலசு வெண்டுவன் குலத்தார் வடமுகம் என்றும் உள்ளூர்க் கவுண்டர் என்றும் அழைக்கப் படுகின்றனர். மதியாக் கூடலூர், பெரிய திருமங்கலம் வெண்டுவர் தென்முகம் வெண்டுவர் என்றும் பெரியதனக்காரர் என்றும் அழைக்கப்படுகின்றனர்.

திருமண உறவால் மணநாட்டில் காலூன்றிய வெண்டுவன் குலத்தார் அங்கு தம் செல்வாக்கைப் பெருக்கியதுடன் மணநாட்டுப் பெரியதனம் செய்யும் பெருமையும் பெற்றனர். தென்னிலை, கோடந்தூர், நடந்தை, சின்ன தாராபுரம், ராஜபுரம், சூடாமணி, எலவனூர் முதலிய கிராமங்களிலும் தம் சொந்தக் கிராமம் ஆகிய கூடலூரிலும் தலைமை பெற்று வாழ்ந்தனர். இதனைக் கவிஞர் புதுமதியன் தன் கவிதையில்,

''மண்டலம் தன்னில் மணல்நாட்டில் - புகழ்
மண்டி விளங்கிடும் காராளர்
வெண்டுவர்''

என்று கூறுகிறார்.

பெரிய திருமங்கலம் அருங்கரையம்மன் கோயிலில் ''சாலிவாகன சகாப்தம் 1778 கலியுக சகாப்தம் 4879 வெண்டுவ

கோத்திரம் வடுகபட்டி முத்துவேலப்ப கவுண்டன் மகன் நல்லண கவுண்டன் மகன் பழனிமலைக் கவுண்டன் ரூ.100'' என்ற கல்வெட்டுக் காணப்படுகிறது.

**விலைக்குப் பெற்ற மங்கலம்**

தென்னிலை வேட்டுவப் பட்டக்காரர் எம்.ஏ. பகவதிக் கவுண்டர் வீட்டில் உள்ள செப்பேடு வராக வேட்டுவரிடமிருந்து மங்கலம் என்ற ஊரின் ஆட்சி உரிமை, கோயில் உரிமை ஆகியவை களை வெண்டுவன் குலத்தார் விலைக்கு வாங்கியதைக் கூறுகிறது.

> ''செய வருஷம் தை மாதம் 25தேதி மங்கலம் காளியம்மன் கோயில் இராச முப்பாடு, கோயில் முப்பாடு கொடுத்தது வெண்டுவன் குலத்துக்கு, சாட்சி வெங்கம்பூர் சம்மந்த ராயக் கவுண்டன், போத்தி சேசுவராயக் கவுண்டன், சல்லி காளாத்திக்கவுண்டன், ஆத்தூர் மாந்தைப் படை வேட்டுவன் வண்டிக்கவுண்டன் சாட்சி, சிறுத்தலை வேட்டுவன் சாட்சி, கிழங்கு நாடு சுப்பய்யன் சாட்சி, கண்டிக்கவுண்டன் சாட்சி, திருமலைக் கவுண்டன் சாட்சி, வராக வேட்டுவன் வாங்கிக் கொண்டது பொன்னு 150, முப்பாட்டுக்காரனுக்குப் பொன்னு 5, நெல்லு மொடா 2, ஆட்டுக்கிடாய் 1, பண்டாரம் காளியாண்டிக்குப் பொன்னு 3 நெல்லு மொடா 2 ஆட்டுக்கிடாய் 1 ; பறையன் கருப்பனுக்கு பொன்னு 2 நெல்லுமொடா 2 ஆட்டுக்கிடாய் 1 ஒக்கிலியரை வெட்டி முடுக்கின படியினாலே முன் நடந்த பிறகாரம் நடந்து கொள்ளவும்''

என்பது செப்பேட்டுப் பகுதியாகும்.

**வணிகரைப் பாதுகாத்த வெண்டுவர்**

திசையாயிரத்து ஐநூற்றுவ நானாதேசி என்ற வணிகக் குழுவினர் பாதுகாப்பாக வாணிகம் செய்ய 'அடைக்கலம்' என்னும் பெரிய காவல் நிலையம் ஒன்றை கிழங்கு நாட்டு நித்த விநோதம்

என்ற ஊரில் இருந்து வாழும் வெண்டுவன் அதிருக்குறையான் என்பவர் மேல்கரைப் பூந்துறை நாட்டுப் பழமங்கலம் என்னும் ஊரில் ஏற்படுத்திக் கொடுத்துள்ளார். இதைக் குறிக்கும் கல்வெட்டு ஈரோடு கலைமகள் கல்வி நிலைய அருங்காட்சியகத்தில் உள்ளது. வெண்டுவன் குலத்தாரின் பூர்வீக சிறப்புக் காணியூர்களில் ஒன்றாகிய ஆரியூரிலும் இடைச்சி கிணறு என்னும் பகுதியில் உள்ள அய்யனார் சிலையின் தென்புறம் வணிகர் குழுக் கல்சிற்பம் உள்ளது.

**வெண்டுவன் குலக் காணியூர்கள்**

பழனி சூழ்ந்த வைகாவூர் நாடு, கொங்கூர், கோனூர், கூடலூர், மண்மங்கை, ஆரியூர், வீரசோழ நாட்டுக் கற்றான் காணி, வல்லிபுரம், முகிலனூர், சிற்றோடை, தோக்கவாடி, நல்லூர், தாளக் கரை, காடாம்பாடி, கொப்புலி நத்தம், கொல்லன்கோயில் ஆகிய ஊர்கள் வெண்டுவன் குலத்தார் காணியூர்கள் என்று காணிப்பாடல் கூறுகிறது. இக்காணியூர்கள் புனிதமானவை என்று கூறப்பட்டுள்ளன. காணி பெற்ற வெண்டுவ குலத்தார் போசன், புவியரசன், மன்மதன், நிருபர் (அரசர்) என்று பலவாறு புகழப்பட்டுள்ளனர்.

''வய்யாவூர் நாடுகொங்கூர் கோனூர் கூடலூர்
மண்மங்கை ஆரியூரும்
வீரசோழ நாட்டினில் கற்றாங் காணியும்
வல்லிபுரம் முகிலனூரும்
மெய்யான சிற்றோடை வளர்தோக்க வாடியும்
மேன்மைபெறு நல்லூருடன்
விளங்குதா ளக்கரையும் மிக்ககா டாம்பாடி
வெற்றிகொப் புலிநத்தமும்

பொய்யாத வாய்மையுள கொலங்கோயில் இதுவெலாம்
புனிதமிகும் காணிபெற்றாய்
புகழ்பெற்ற வெண்டுவ குலதீப வசீரனே
போசனே புவிராசனே

மய்யார் விழிச்சியர்கள் மன்மதன் ராவுத்தன்
மைந்தன்என வந்தநிருபா
மாதேவர் தான்தோன்றி அப்பர்அருள் பெற்றுமே
மாநிலம் தனில்வாழ்கவே''

என்பது வெண்டுவ குலக் காணிப்பாடலாகும்.

செங்கமுயல் நல்லதம்பி என்பவர் வெண்டுவகுலம் பற்றி ஒரு பாடல் பாடியுள்ளார். அப்பாடலில் காணியூர்கள் சில தொகுத்துக் கூறப்பட்டுள்ளன. முதல் காணியூராகக் கொங்கூர் கூறப்பட்டுள்ளது. அப்பாடலில் கொங்கூர், தாளக்கரை, கூடலூர், கற்றான்காணி, கொளாநல்லி, கொல்லங்கோயில், மூல்னூர், புதுப்பை, நாட்டா மங்கலம், ஆரியூர், மண்மங்கை, வல்லிபுரம் முதலிய ஊர்கள் வெண்டுவன் குலத்தார் காணியூர்கள் எனக் கூறப் பட்டுள்ளது.

''கொங்கூர் முதற்காணி தாழக் கரைக்கதிபர்
கூடலூர்கற் றான்காணியும்
கூவிளம் கமுகொடு கொளாநல்லி செண்பகம்
கொல்லங்கோ யில்மூலனூர்

பொங்குபுகழ் ஆன்பொருநை புதுப்பைநாட் டாமங்கலம்
போற்றிடும் ஆரியூரும்
மண்மங்கை வல்லிபுரம் ஆரிகை மேருவென
பங்கய மலர்த்தடஞ்சூழ்

பழனிமுரு கேசர் மலரெனும் மேன்மைப்
பதம்சேர் தொழுநேயனாம்
பண்டுபவ பூர்வமுதல் வெண்டுவ குலாதிபன்
பழிகழி திருநாடனாம்
செங்கமுயல் நல்லதம்பி அருளாக்கிய புவநேயர்
தெரிவையர்கள் மதிரூபனே''

என்பது செங்கமுயல் நல்லதம்பி பாடலாகும்.

காணியூர்களை மையமாக வைத்து கொங்கூர் வெண்டுவன், கோனூர் வெண்டுவன், கூடலூர் வெண்டுவன், தாழக்கரை வெண்டுவன், கத்தாங்கண்ணி வெண்டுவன் என்று பலவாறு அழைக்கப்பட்டாலும் அவை ஒரே வெண்டுவ குலம்தான். வேறுபாடு எதுவும் இல்லை.

ஓதாளர் அலகுமலைக் குறவஞ்சி 'கற்றை வெண்டுவன்' 'கற்றாங்காணி வெண்டுவர்' என்று கூறுகிறது. தேவணம்பாளையம் என்னும் ஊரில் சிங்கவிண்ணன் என்ற மன்னன் கல்வெட்டில் 'கருநிழலி வெண்டுவன்' என்பவர் குறிக்கப்படுகிறார்.

## வெண்டுவகுலக் கல்வெட்டுகள்

1. மணலூர் நாட்டில் உண்டிதம், மாந்தில் போன்ற ஊர்களில் காணியுரிமையுடைய வெண்டுவ குல பெரியான் பிள்ளனான செயங்கொண்ட சோழக் காமிண்டன் மேல்கரை அரைய நாட்டு மொஞ்சனூர் ஆவுடையார்க்கு விக்கிரம சோழதேவனின் 18ஆம் ஆட்சியாண்டில் சந்தியா தீபம் வைத்தார் (1291).

2. மேல்கல்வெட்டில் கண்ட வெண்டுவன் குலத்தார் மொஞ்சனூர் ஆவுடையார் கோயில் திருப்பணியின்போது திருநிலை கால்களைக் கொடையாகக் கொடுத்தனர்.

3. கத்தாங்கண்ணி ஆயி அம்மன் கோயிலில் வெண்டுவன் குலத்தார் பல திருப்பணிகளைச் செய்துள்ளனர்.

(அ) 1888 ஆம் ஆண்டு வெண்டுவ குல அப்பாச்சிக் கவுண்டர் இரண்டு மண்டபங்கள் கட்டினார்.

(ஆ) தேவனூர்க் கிராமம் ஆண்டியூர் வெண்டுவர் குல கிருஷ்ணசாமிக் கவுண்டர் திருமதிலும் தீர்த்தக் கிணறும் அமைத்தார்.

(இ) தேவனூர்க் கிராம வெண்டுவ குலத்தார் கந்தசாமிக் கவுண்டர், திருமூர்த்திக் கவுண்டர், திருமலைசாமிக் கவுண்டர், நாச்சிமுத்துக் கவுண்டர், ஆயிக் கவுண்டர், இராமசாமிக் கவுண்டர்,

அமணாண்டிக் கவுண்டர், பழனிக்கவுண்டர் ஆகியோர் சேர்ந்து மடம் கட்டினர்.

(ஈ) 1898ஆம் ஆண்டு வெண்டுவ குல பாப்பம்பாளையம் மணியம் அப்பாச்சிக் கவுண்டர் அம்மனின் காலைச் சந்திப் பூசைக்காக 1 ஏக்கர் நிலம் கொடையாக அளித்தார்.

(உ) 1898ஆம் ஆண்டு மகாமண்டபம், சிங்கக் கொறடு, ரிஷபக் கொறடு, தீபக் கம்பம், குறிஞ்சி, பொங்குமடம். செங்கல் பூதம் 4 இவைகளை அமைத்தவர் வெண்டுவகுல மணியம் அப்பாச்சிக் கவுண்டர் (இதற்கு இருப்புலி செவந்தி குலத்தாரும் உதவினர்).

4. கொல்லன் கோயில் தான்தோன்றி ஈசுவரன் கோயிலில் நந்தா விளக்கு, சந்தியா தீபம் இவைகளை வெண்டுவன்குல நான்கு கரையாரும் சேர்ந்து எரிக்கக் கொடை நிலம் கொடுத்தனர்.

5. கந்தசாமிபாளையம் சடையப்பர் கோயிலில் வெண்டுவன் குல நாச்சிமுத்துக் கவுண்டர் கருடகம்பம் நிறுவினார்.

6. கொங்கூர் பசுபதீசுவரர் கோயிலில் வெண்டுவ குலக் குப்பச்சிக் கவுண்டர் இரண்டு திருவிளக்குகள் வைத்தார்.

7. வாகரைப் பெத்தாக்கவுண்டர், அத்தப்பம்பட்டி, முத்துக் கவுண்டர், கிழாங்குண்டல் பூசாரி கருப்ப கவுண்டர், முப்பாட்டுக் காரர்கள் ஆகியோர் ஆரியூர் செல்லாயி, கருப்பண்ணன் ஆகியோருக்கு வெண்கலக் குதிரை செய்து கொடுத்துள்ளனர்.

8. குந்தாணிபாளையம் பள்ளிக்கூடத்துக் கவுண்டர் மகன் மாரப்ப கவுண்டர் ஆரியூர்க் கோயிலுக்குத் தூரிக்கல் நாட்டியுள்ளார்.

9. ஆரியூர் 'மேமுகம்' மணியம் வஞ்சியப்ப கவுண்டர், மேமுகம் காதக்கோட்டை கருப்பண்ண கவுண்டர், சின்னமுத்தாம் பாளையத்தார் ஆகியோர் கதவுகள் செய்து கொடுத்துள்ளனர்.

**செப்பேடு பட்டயங்களில் வெண்டுவகுலம்**

குறுப்பு நாட்டு 32 ஊர்களிலும் முதல் காணியுரிமை எழுமாத்தூர்ப் பனங்காடை குலத்தார்க்கும், இரண்டாவது காணி யுரிமை பெரிய குலம், வெண்டுவன் குலம், கண்ணந்தை குலம், செல்லன் குலம், சாத்தந்தை குலம், ஓதாள குலம் சார்ந்தவர்கட்கு என்றும் மூன்றாவது காணி படைத்தலைக் கவுண்டர்க்கு என்றும் முடிவு செய்து எழுதிய செப்பேட்டில் வெண்டுவன் குலம் சார்பாகக் கையெழுத்திட்டவர்கள் நல்லண கவுண்டர், அமராவதிக் கவுண்டர் ஆகியோர் ஆவர்.

சிவந்திகுலத் தீத்தாக் கவுண்டர் மகள் வெள்ளைப் பிள்ளையை கத்தாங்கண்ணி வெண்டுவகுல முத்தய்ய கவுண்டர் திருமணம் செய்துகொள்ள மறுத்து விடவே கண்ணகுலச் செங்கோட்டு வேலப்ப கவுண்டர் சிவந்திகுல வெள்ளை பிள்ளையை மணந்து கொள்கிறார். சிவந்தி குலத்தார் கத்தாங் கண்ணி முழுக்காணியையும் கண்ண குலத்தார்க்குக் கொடுத்துவிட்டுக் கீழ்க்கரைப் பூந்துறை நாட்டு இருப்புலிக்குக் குடியேறிவிட்டனர். இதற்கு எழுதப்பட்ட செப்பேட்டில் சாட்சிக் கையொப்பம் இட்டவர் கத்தாங்கண்ணி வெண்டுவகுல பச்சாக்கவுண்டர், முத்தய்ய கவுண்டர் ஆகியோர்.

கன்னிவாடி கண்ணகுலத்தலைவர் முத்துச்சாமிக் கவுண்டர் மூன்று மனைவியரில் ஒருவர் வெண்டுவன்குல வேலம்மாள். சீரங்கம் சென்று பிறந்த பெண்குழந்தைக்குச் சீரங்காயி என்று பெயர் வைத்தனர். முத்துசாமிக் கவுண்டர் இறந்த பின் மணலூரில் வெண்டுவகுல வேலம்மாள் தீப்பாய்ந்து இறந்தார்.

தென்கரை நாட்டுப் புலவராக செங்குந்த கோத்திரம் இராசி கூட்டம் திருக்கைவேல் புலவரை நியமித்த ஆவணத்தில் கையெழுத்திட்டவர்களில் ஒருவர் கொங்கூர் வெண்டுவ குல நல்லகுமாரு என்பவர்.

பேரோடு கரிச்சிக்குமாரர் கோயில் காணியாளர்கள் வெண்டுவன், பண்ணை, பெருங்குடி குலத்தார் ஆகியோர். அக்கோயிலில் வெண்டுவன் குலத்தாருக்குத் திருவிழாவில் பச்சைப் பந்தல், முப்பாடு உரிமை உரியது.

வெண்டுவன் குலத்தார் உட்படப் பல கொங்கு வேளாளர் குலப் பெருமக்கள் பாசூர் குருக்கள் இம்முடி அகிலாண்ட தீட்சிதர் அவர்களைக் குலகுருவாகக் கொண்டு செப்பேடு எழுதிக் கொடுத்தனர். கொல்லன்கோயில், பேரோடு வெண்டுவன் குலத்தார் சார்பில் அதை ஏற்றுக் கொண்டு கையொப்பமிட்டவர்கள் குமார நல்லய்ய கவுண்டர், குமார சின்னய்ய கவுண்டர், முத்துக் கருமண கவுண்டர், முத்து ராக்கியாக்கவுண்டர், பெரிய செங்கோட கவுண்டர், சீரங்கராயக் கவுண்டர் ஆகியோர் ஆவர்.

**சில சிறப்புச் செய்திகள்**

ஆரியூர் வெண்டுவன் குலப் பெரியவர் ஒருவருக்கு இரு மனைவியர் இருந்தனர். அம்மா, ஆத்தாள் என்று அவர்கள் அழைக்கப்பட்டனர். கணவர் இறந்ததும் தேவியர் இருவரும் தீப்பாய்ந்து இறந்தனர். அவர்களுடைய ஏழு க்களும் தங்கள் தாய்மாருக்குக் கோயில் கட்டினர். அக்கோயில் 'அம்மாத்தாள்' கோயில் என்று அழைக்கப்படுகிறது. சில ஆண்டுகட்கு ஒரு முறை ஆடி மாதம் ஏழு படைக்கலம் எடுத்து வழிபடுவர்.

ஆரியூர் வெண்டுவன் குலத்தாருக்கு முன்னூர் மோள பாளையம் மலைக் கோயிலிலும், புன்னம் அங்காளம்மன் கோயிலிலும் சிறப்பு உரிமைகள் உள்ளன. முன்னூர் மலை கல்யாண மரகதீசுவரர் கோயிலிலும், உத்தண்ட வேலாயுதசாமி கோயிலிலும் கல்யாண உற்சவ உரிமை உண்டு. அங்காளம்மன் கோயிலில் சிவராத்திரி விழா விற்குத் தயிர்க்கலயம், கோழி அடைசல் கொண்டு செல்லும் ஆரியூர் வெண்டுவன் குலத்தார் மிகச் சிறப்பாக மேளதாளத்தோடு

வரவேற்கப்படுவர். அவ்வாறே சிறப்புடன் அனுப்பி வைக்கப் பெறுவர்.

மேல்கரை அரைய நாட்டைச் சேர்ந்த கொல்லன்கோயில் கிராமம் களிப்பாளையத்தில் வெண்டுவன் குலத்தார் சின்ன முத்தூரில் கோயில் கொண்டுள்ள மணியகுல தெய்வம் செல்லக் குமாரசுவாமிக்குக் கோயில் கட்டிக் குல தெய்வமாகக் கொண்டு வழிபட்டு வருகின்றனர்.

கீழ்க்கரை அரைய நாட்டுக் கோலாரம் - தாழக்கரை வெண்டுவன் குலத்தினர் பொன்காளியம்மனைக் குல தெய்வமாக வணங்கி வருகின்றனர்.

**பெரிய கவுண்டன் கோயில்**

பண்ணை குலத்தாரின் முடப்பெண்ணைத் திருமணம் செய்து கூடலூரில் காணி பெற்ற வெண்டுவன் குலப் பொன்னம்பலக் கவுண்டர் செய்த சில தவறுகட்காக மாமனார் பண்ணைகுலப் பெரியண கவுண்டரால் தலை துண்டித்துக் கொல்லப்பட்டார். தலை தனியாக விழுந்தது. தலையற்ற முண்டம் சிறிது ஓடிச் சென்று விழுந்தது. விழுந்த இடத்தில் வெண்டுவ குலப் பொன்னம்பலக் கவுண்டருக்குக் கோயில் கட்டி வழிபட்டு ஆண்டு தோறும் பொங்கல் வைக்கிறார்கள். 'பெரிய கவுண்டன் கோயில்' என்று அழைக்கப்படும் கோயில் பெரிய மதியாக் கூடலூர் செல்லும் வழியில் ஊருக்கு வடபுறம் உள்ளது.

இறந்த வெண்டுவன் குலம் பொன்னம்பலக் கவுண்டர் மனைவி இராசம்மாள் கவுண்டச்சி பங்காளிகளிடம் சென்று வாழ்ந்து ஆண்மகனைப் பெற்றெடுத்தாள். அவ்வெண்டுவன் குலச் சிறுவன் பெரியவனாகி வேட்டுவர் தலைவன் உதவியால் மீண்டும் கூடலூரில் வெண்டுவர் உரிமையை நிலைநாட்டினான். பண்ணை குலத்தார் ஊரிலிருந்து வெளியேறிவிட்டனர்.

### அருங்கரையம்மன் பூசை முறை

கூடலூர் வெண்டுவன், பண்ணை, பனையன் குலத்தார் குலதெய்வமாக அருங்கரையம்மன் கோயில் விளங்குகிறது. அமராவதியாற்றங்கரையில் கூடலூர் கிழக்கு வளவு வெண்டுவன் குலப் பெண்தான் அம்மன் வெளிப்படக் காரணமாக இருந்தவர். அவளை அன்புடன் நல்ல தாய், பாப்பாத்தி என்று அழைப்பர். அம்மனைக் கண்டு பிடித்த கிழக்கு வளவு வெண்டுவ குலப் பெண்ணும் தெய்வமாக வணங்கப்படுகிறாள்.

''கூட்டாற்று மூலையில் கோயில் கொண்ட பாப்பாத்தி''

''அருங்கரையாள் பாப்பாத்தி''

''அருங்கரை நல்ல தாயே''

என்று வெண்டுவ குலக் கன்னிப்பெண் வணங்கப்படுகிறாள். அதனால் அருங்கரையம்மன் கோயிலில் கிழக்கு வளவு வெண்டுவ குலம் என்று அழைத்து முதல் விபூதி அவர்கட்கு வழங்கப்பட்டது. இதை மேற்கு வளவு வெண்டுவ குலத்தார் எதிர்த்து வழக்குப் போட்டனர் (1880).

இப்போது இரு பிரிவாகப் பூசை நடைபெறுகிறது. திருமங்கலம் கிழக்கு வளவு வெண்டுவ குலத்தார், பிள்ளையார் பாளையம், பெரிய மதியாக் கூடலூர் கிழக்கு வளவு வெண்டுவ குலத்தார் தனித்தனியே பூசை நடத்துகின்றனர். திருமங்கலம் மேற்கு வளவு, மதியாக் கூடலூர் மேற்கு வளவு, கூடலூர் உள்ளூர்க் கவுண்டர் ஆகிய வெண்டுவன் குலத்தாரும், பண்ணை குலத்தாரும், பனைய குலத்தாரும் ஒன்றாகப் பெரிய பூசை நடத்தி வருகின்றனர்.

### பழனியில் உரிமை

பழனித் திருத்தலத்தில் பெரிய நாயகியம்மன் கோயில் தேர்த் திருவிழாவின் போது முதல் வடம் பிடிக்கும் உரிமை வெண்டுவன் குலத்தாருக்கு உரியது என்பது சிறப்புமிக்க செய்தியாகும்.

## 98. வெண்மணி குலம்

கல்வெட்டின் மூலம் தெரியவரும் இக்குலம் பற்றி எவரும் குறிப்பிடவில்லை.

கொங்கு நாட்டில்தான் மணிக்கற்கள் அதிகமாகக் கிடைக்கின்றன. ஏர் உழும்போது உழும் கலப்பைகளின் மூலம் மணிக்கற்கள் வெளிப்படுமாம்.

''நாஞ்சில் ஆடிய கொழுவழி மருங்கில்
இலங்குகதிர்த் திருமணி பெறூஉம் நாடு''

என்று பதிற்றுப் பத்துக் கூறுகிறது. கிழங்கு தோண்டும் போதும், மழை பெய்த மண் அரிப்பிலும், கால்நடை மேய்க்கும் போதும் மணிக்கற்கள் கிடைக்கின்றன என்றும் கூறுவர்.

வெண்படிகக் கல் எங்கும் கிடைக்கும். ஒளி ஊடுருவிச் செல்லும் அவ்வைரக் கற்கள் மேற்பரப்பிலேயே கிடைக்கும். அப்படிப்பட்ட "CRYSTAL' என்று கூறப்படும் வெண்படிகக் கல்லால் மணி செய்யும் தொழிலில் வல்லவர்கள் அல்லது அவ்வெண்மணிக் கற்களால் ஆன அணிகலன்களை அணிவதில் பெருவிருப்பம் உடையவர்கள் அல்லது தங்கள் குல அடையாளமாக அணிபவர்கள் வெண்மணி குலம் என்று பெயர் பெற்றிருக்கலாமோ என்று எண்ணத் தோன்றுகிறது.

சுந்தரபாண்டிய தேவனின் 27 ஆம் ஆட்சியாண்டில் (1312) விசயமங்கலம் வேளாளர் வெண்மணிகளில் துணையன் ஆண்டான் ஆன அம்பலப் பெருமாள் என்பவர் விசயமங்கலம் சிவாலயமான திருநாகேசுவரம் உடையார்கோயிலில் திருக்காமக் கோட்டத்து நாச்சியார்க்கு (அம்மனுக்கு) நந்தா விளக்கு வைப்பதற்காக 140 பணம் கொடையாகக் கொடுத்ததை ஒரு கல்வெட்டுக் கூறுகிறது.

''ஸ்வஸ்திஸ்ரீ சுந்தரபாண்டிய தேவர்க்குத் திருவெழுத்திட்டுச் செல்லா நின்ற திருநல்லியாண்டு இருபத்தேழாவது

> தைத்திங்கள் முதலாக குறுப்பு நாட்டு விசயமங்கலத்து ஆளுடையார் திருநாகீஸ்வரமுடையார் திருக்காமக் கோட்டத்து நாச்சியார் ஆளுடைய நாச்சியார்க்கு விசய மங்கலத்து வெள்ளாளன் வெண்மணிகளில் துணையன் ஆண்டானான அம்பலப் பெருமாளேன் வைத்த திருநந்தா விளக்கு ஒன்றினுக்கு ஒடுக்கின பணம் நூற்றி நாற்பதும் கைக்கொண்டோம் இக்கோயில் காணியுடைய சிவப் பிராமண ரில் மாடல கோத்திரத்து சிவஞான பண்டிதனும் மாடல கோத்திரம் பிள்ளையாழ்வி வாழ வந்தானும் ஆத்திரேய கோத்திரம் சங்காதி நம்பி மாணிக்க நாயக பண்டிதனும் இம்மூவரோம். இவ்விளக்கு முட்டில் இரட்டி எரிப்பதாகவும் இது மிக முட்டில் தெண்டம் இறுப்பதாகவும் இது சந்திராதித்தவரை குடங்கொண்டு கோயில் புகுவார் எரிப்ப தாகவும் இதுபன்மாகேசுவரர் ரட்சை''

என்பது அக்கொடையைக் குறிக்கும் கல்வெட்டாகும்.

# 99. வெள்ளம்பர் குலம்

வெள்ளம்பர் குலத்தை வெள்ளைக் குலம் என்றும் கூறுவர். டி.எம். காளியப்பா ''வெள்ளம்பர் குலம் என்பதற்கு வெள்ளை ஆடை அணிந்தவர் என்று அர்த்தம். வெள்-வெள்ளை நிறமான; அம்பரம் - ஆடை; வெண்மையான ஆடை அணிந்தவர்கள் வெள்ளம்பர் குலத்தார் என்று அழைக்கப்பட்டனர். மக்கள் வெள்ளம்பர் குலத்தை வெள்ளைக் குலம் என்றும் கூறுவார்கள். முத்தூர் சோழீசுவரர் கோயிலில் வெள்ளை விநாயகர் கோயில் கட்டியுள்ளனர். குல தெய்வக் கோயிலில் வெள்ளைக் குதிரையைத் துலுக்க வைப்பதும், வெள்ளை நிறமான ஆடை உடுத்தி வெள்ளம்பர் குலப்பெண்கள் திருவிழாக் கொண்டாடுவதும் இக்குல வழக்கம்'' என்று எழுதியுள்ளார்.

நல். நடராசன் 'வெள்ளம்பர் குலம் என்பது உழவுத் தொழில் அடிப்படையாக ஏற்பட்ட பெயராகும். வெள்ளம் என்ற சொல் நீரைக் குறிக்கும். வெள்ளத்தைத் தேக்கிப் பயிர் செய்வோர் வெள்ளாளர் எனப்பட்டது போல வெள்ளம்பர் என்ற பெயரும் உழவுத் தொழில் அடிப்படையாகவே தோன்றியது என்பார்.

காங்கய நாட்டு முத்தூரில் வெள்ளம்பர் குலத்தார் நான்காம் காணியாளர் ஆவர். முத்தூர்க் காணிப்பாடல்,

''முத்தன் மணியன் முதற்சேரன் வெள்ளம்பர்
மெத்துபொரு ளந்தையுடன் மேலான - சித்திபெறும்
காவலியர் நன்முதலிக் காமருடன் ஏழ்முதன்மை
தாவுபுகழ் முத்தூர்த் தலம்''

என்பதாகும். காங்கய நாட்டுக் காணிப்பாடல்,

''அழகான முத்தூரில் வளர்கின்ற முத்தனை
அய்யமிகு மணியகுலனை
அகளங்க சேரனை தனபதிவெள் ளம்பனை
அனதான பொருளந்தையை''

என்று கூறுகிறது.

ஓதாளர் அலகுமலைக் குறவஞ்சி, பெற்றம்பள்ளி வெள்ளம்பர் கொடை பற்றிக் கூறுகிறது. பல்லாக்கோயில் வெள்ளம்பர் குலத்தாரின் சிறப்புமிக்க காணியூர்களில் ஒன்று. பொள்ளாச்சி வட்டத்தில் ஆவல்பட்டி, ரங்கசமுத்திரம், கோட்டாம்பட்டி, புதுப்பாளையம் போன்ற ஊர்களிலும் குடியேறிச் சிறப்புடன் வாழ்ந்து வருகின்றனர்.

குலோத்துங்க சோழனின் 10ஆம் ஆட்சியாண்டில் முத்தூர் வெள்ளாளன் வெள்ளம்பரில் தாமன் சோழீசன் செய்யான் தன்மபாலன் என்பவர் முத்தூர் குலோத்துங்க சோழீசுவரமுடையார் கோயிலில் சந்தியா தீபம் ஒன்று வைப்பதற்காக ஒரு அச்சு பொற் காசு கொடையாக அளித்தார். இவர் பெயர் அமைப்பிலிருந்து இவர் ஒரு அரசு அதிகாரியாக இருக்கலாம் என்று தெரிகிறது.

''ஸ்வஸ்திஸ்ரீ குலோத்துங்க சோழ தேவற்கு யாண்டு பத்தாவது முத்தூர் வெள்ளாளன் வெள்ளம்பரில் தாமன் சோழீசன் செய்யான் தன்மபாலனேன் குலோத்துங்க சோழீசுர முடையார்க்கு சந்தியா தீபத்துக்கு அச்சு ஒன்றும் கைக்கொண்டு இக்கோயில் காணியுடைய சிவப்பிராமணன் தேவன் பட்டன் உடையானான குலதீப பட்டனேன் என் மக்க மக்கள் இவ்வச்சொன்றும் கைக்கொண்டு சந்திராதித்தபலம் உள்ள அளவும் எரிப்பதாகவும்'' என்பது வெள்ளம்பர் குலத்தாரின் கொடைக் கல்வெட்டாகும்.

முத்தூர்க் காணிப்பாடலில் 'தனபதி வெள்ளம்பர்' என்று கூறப்படுவதால் அவர்கள் செல்வச் செழிப்புடன் இருந்தமை பெறப் படுகிறது. முத்தூர்க்காகச் சிவசமுத்திரத்தில் சிறை சென்றவர்களில் முத்தூர் வெள்ளம்பர் குல அவிநாசிக் கவுண்டர் மகன் திருவம்பலத்தார் என்பவரும் ஒருவராவார்.

## 100. வெள்ளெலி குலம்

வேளாளர் சமூகத்தில் குண்டெலி (அல்லது குண்டலி) குலம் இருப்பதைப் போல வெள்ளெலி குலமும் உள்ளது. சேவூர் அழகப் பெருமாள் கோயிலில் உள்ள சுந்தரபாண்டியனின் 20ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டில் (1306) வெள்ளெலி குலம் பற்றிய குறிப்புக் காணப்படுகிறது.

சேவூர் வெள்ளாளன் கொம்மையரில் சிறுவன் ஆண்டான் என்பவன் சேவூர் திருமேற்கோயில் அழகப்பெருமாள் விண்ணகர் எம்பெருமான் கோயில் சேனாபதி ஆழ்வார்க்கு நிலம் விற்பனை செய்த கல்வெட்டில் சாட்சிக் கையொப்பம் இட்டவர் ''வெள்ளாளன் வெள்ளெலிகளில் சொக்கன்'' என்பவர். இப்பெயரொடு ''முடிகொண்ட காமிண்டன்'' என்பவர் பெயரும் காணப்படுகிறது.

மேற்கண்ட நில விற்பனை செய்யப்பட்ட ஆண்டு கி.பி.1312. கொங்குப் பாண்டியன் சுந்தரபாண்டியன் ஆட்சிக்காலம். எனவே கி.பி. 13-14ஆம் நூற்றாண்டில் வேளாளரில் வெள்ளெலி குலத்தார் சேவூரில் வாழ்ந்தனர் எனலாம். கோயில் தொடர்பான விற்பனை ஆவணத்தில் கையெழுத்திட்டிருப்பதால் இவர் சேவூரில் முக்கியமானவராக இருந்துள்ளார் என்பது தெரிகிறது.

வேறு இடங்களில் வெள்ளெலி குலம் பற்றிய குறிப்பு இல்லை.

# 101. வெள்ளை குலம்

வெள்ளம்பர் குலமும் வெள்ளை குலமும் ஒன்று எனச் சிலர் கூறினாலும் வெள்ளை குலம் சார்ந்த கல்வெட்டும் கிடைத்துள்ளதால் தனித் தனிக் குலமாக இருக்கவும் கூடும் என்று தெரிகிறது.

வெள்ளை என்ற பெயர் மிகவும் தொன்மையானது. சங்க இலக்கியங்களில் வெள்ளைக்குடி நாகனார், வெள்ளைக் கணத்தார், வெள்ளை மாளர் முதலிய பெயர்களைக் காணுகின்றோம். பலராமனுக்கு 'வெள்ளை' என்ற பெயர் உண்டு. பனைக்கொடியுடைய பலராமன் வணக்கம் தொன்றுதொட்டே இருந்துள்ளது. பலராமனை வணங்குவோர் 'வெள்ளை' என்ற பெயரைப் பெற்றிருக்கலாம்.

வெள்ளை என்ற சொல் ஆசிவகர்கட்கு உரியது என்றும் கூறுவர், 'செங்காயபன்' இருப்பதைப் போல ஆசீவகத்தில் 'வெண்காயபன்' பெயர் உண்டு. ஒருக்கால் ஆசீவகம் கொள்கை உடையோர் வெள்ளை என்று பெயர்பெற்றிருக்கலாம்.

குறுப்பு நாட்டு விசயமங்கலம் நாகீசுவரர் கோயிலில் உள்ள இராசாதிராச வீரசோழனின் ஐந்தாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டில் வெள்ளைக் குலம் குறிக்கப்படுகிறது (1123), காங்கய நாட்டுப் பரஞ்சேர்வழி வெள்ளாளன் வெள்ளைகளில் சிலம்பன் நீலன் என்பவனின் மனைக்கிழத்தி சிட்டன் காவி என்பவள் நாகீசுவரர் திருவிழாவிற்கும், திருஅமுதுபடிக்கும் கொடையாக நிலம் வழங்கிய செய்தியை கல்வெட்டுக் கூறுகிறது.

> ''ஸ்வஸ்திஸ்ரீ சகரையாண்டு ஆயிரத்து நாற்பத்து நான்கு
> கோ ராசாதிராச ஸ்ரீவீரசோழதேவர்க்குத் திருவெழுத்திட்டுச்
> செல்லாநின்ற திருநல்லியாண்டு அஞ்சாவது குறுப்பு நாட்டு

விசயமங்கலத்து மகாதேவர் சீநாபுரமுடையார்க்குக் காங்கய நாட்டுப்பரஞ்சேர்வழி இருந்து வாழும் வெள்ளாளன் வெள்ளைகளில் சிலம்பன் நீலன் மனைக்கிழத்தி சிட்டன் காவியேன் விசயமங்கலத்துத் தென்னூர் நங்கை நீலி கோயிலில் நத்தத்தில் உகாப்பாடி வழிக்குக் கிழக்கு, வெள்ளாளன் தோட்டத்துக்கு மேற்கு வடக்கு சாலைத் தாற்றிக்குத் தெற்கு இந்நாற்பாங் கெல்லைக்கு நடுவுட்பட்ட நிலம் விசயமங்கலத்தில் மாதேவர்க்குத் திருவிழாவுக்கும் திரு அமுதுக்கும் குடுத்தேன். சிட்டன் காவியேன். இது பன்மாகேஸ்வரர் ரட்சை''

என்பது இக்கொடையைக் குறிக்கும் கல்வெட்டாகும்.

## 102. வேந்தன் குலம்

வேந்தன் என்ற சொல்லுக்கு அரசன், இந்திரன், சூரியன், சந்திரன் எனப் பல பொருள் உள்ளன. 'வேந்தன் மேய தீம்புனல் உலகம்' என்று தொல்காப்பியம் கூறுகிறது. தீம்புனல் உலகம் ஆகிய மருத நிலங்களின் தலைவன் இந்திரன். வேந்தனை வழிபடுவோர் வேந்தன் குலத்தினர் ஆகியிருக்கலாம்.

டி.எம். காளியப்பா அவர்கள் 'பொள்ளாச்சி, நெகமம், மூட்டாம்பாளையம் ஆகிய பகுதிகளில் 'ஆந்தையும் வேந்தையும் ஒண்ணு' என்ற பழமொழி வழங்குகிறது. வேந்து என்ற சொல்லே வேந்தன் என வழங்கப்பட்டிருக்கலாம் என்று கூறுகிறார்.

காணிப்பாடல்களிலும், இலக்கியங்களிலும் பொதுவாக வேளாளர் தலைவர்களை வேந்து, வேந்தன், அரசன், மன்னன் என்று கூறுவது வழக்கம். அவ்வகையில் சிலரை 'வேந்தன்' என்றே அழைக்கும் வழக்கம் ஏற்பட்டிருக்கலாம்.

தே.ப. சின்னசாமி வெள்ளத்தை ஆள்பவன் வேந்தன் என்று பெயர் பெற்றதாகக் கூறுகிறார். மூவேந்தர், பாவேந்தர், நாவேந்தர் போல ஆவேந்தர் இந்த வேந்தன் குலத்தினர் என்பார்.

நல். நடராசன் ''வேந்தன் என்ற சொல் வேள் என்னும் சொல்லை அடிப்படையாகக் கொண்டது. வேள் + இ = வேந்து என்றாகி அன் என்ற விகுதி சேர்ந்து வேந்தன் என்றானது'' என்று கூறியுள்ளார்.

வேந்தன் குலத்தார் காங்கயத்தில் இரண்டாவது காணியுரிமை உடையவர்கள்.

''சிங்கநகர் அதனில்வளர் அதிகபெருங் குடியனை
    செயவேந்தன் செங்கண்ணனைச்
சீர்கொண்ட தூரனைப் பதுமன்முதல் வாணியைத்
    திவ்யமிகு சாத்தந்தையை''

என்பது காங்கய நாட்டுக் காணிப்பாடல் பகுதியாகும்.

காங்கயம் காணிப்பாடல்,

> ''பெருங்குடி வேந்தனும் செங்கண்ணன் தூரன்நற் பேர்பதுமன்
> விரும்பிய வாணிசாத் தந்தை பதரி விரைகுடிலூர்
> அரும்பணி நாதர் அகத்தீஸ் வரர்அகி லாண்டவல்லி
> கருங்குழல் மாது பகவதி வாழ்கின்ற காங்கயமே''

என்பதாகும்.

திருப்பூர் பழனிசாமிப்புலவரும், கு. சேதுராமனும் ''பெருங்குடி வேந்தன்'' என வருவதைக் கொண்டு இதை ஒரே தொடராக்கி 'பெருங்குடிவேளிர்' என்றும், 'பெருங்குடியினராகிய வேந்தர்' என்ற பொருளில் தங்கள் 'கொங்குச் செல்வி', 'கொங்குச் சீமைக் காணியாளர்கள்' என்ற நூல்களில் எழுதியுள்ளார்கள். அவர்கள் 'வேந்தன்' என்பது பெருங்குடி குலத்தைச் சிறப்பிக்க வந்ததேயன்றித் தனிக்குலம் அல்ல என்று கருதுகின்றனர். ஆனால் காங்கயத்தின் காணியாளர்களாகப் பெருங்குடி குலத்தார் உள்ளனர். மரபாளர் உற்பத்திக் கும்மியில் 'மாசிலா வேந்தன்' எனக் குறிக்கப்படுகிறது. இலக்கியங்களும் கல்வெட்டுகளும் 'வேந்தன்' எனத் தனிக் குலத்தைக் குறிப்பிடுகிறது.

பேராசிரியர் கிருஷ்ணசாமி வேந்தன் குலமும் வேம்பன் குலமும் ஒன்று எனக் கூறுகிறார். அலகுமலைக் குறவஞ்சி வேந்தன்-வேம்பன் ஆகியோரைத் தனிக்குலமாகவே கூறுகிறது.

**கல்வெட்டுகள்**

காங்கய நாட்டு முத்தூரில் சோழீசுவரர் கோயில் கல்வெட்டில் 'காங்கய நாட்டு முத்தூரில் வெள்ளாளன் வேந்தரில் சல்லன்புகழ் ராஜ கெம்பீரன்'' என்பவர் குறிக்கப்படுகிறார்.

விசயமங்கலம் கரியமாணிக்கப் பெருமாள் கோயிலில் வடகரைநாட்டுக் குறிச்சி வெள்ளாளன் வேந்தரில் வேந்தன் வாமதேவன் சந்தியா தீபம் வைத்த செய்தியை அக்கோயில் கல்வெட்டுக் கூறுகிறது.

''ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீவீரபாண்டிய தேவர்க்கு யாண்டு 12வது ஆவணித்திங்கள் முதலாக வடகரை நாட்டுக் குறிச்சி வெள்ளாளன் வேந்தர்களில் வேந்தன் வாமதேவனேன் விசயமங்கலத்துச் சித்திரமேழி விண்ணகரெம் பெருமான் கருமாணிக்க ஆழ்வார்க்கு வைத்த சந்தியா தீபம் ஒன்றுக்கு ஒடுக்கின அச்சு ஸ்ரீயக்கி பழஞ்சலாகை அச்சு நாலும் கைக்கொண்டோம் ஸ்ரீகோயில் காணியுடைய வைகாநச சூத்திரத்தில் நம்பிமார்களில் கௌசிகன் மலைகினிய நின்றான் பட்டனும் கௌதமன் சொக்கதேவனும் திருப்பெரிய பெருமாளும் இம்மூவோம் குடங்கொண்டு கோயில் புக்கவன் இத்திரு விளக்கு சந்திராதித்தவரை எரிப்பதாகக் கல்வெட்டிக் குடுத்தோம் ஸ்ரீவைஷ்ணவர் ரட்சை''

என்பது கல்வெட்டாகும்.

மேட்டுப்பாளையம் வட்டம், குறும்பபாளையம் வெங்கிடுசாமி நாயக்கர் தோட்டத்தில் ஒரு நடுகல் உள்ளது. அந்த நடுகல் வடபரிசார நாட்டு வெள்ளாதி வெள்ளாளர் வேந்தரில் நயினார் மாலை ஆண்டான் என்பான் புலியோடு போர் செய்து புலியைக் கொன்று வீரமரணம் எய்தியமைக்காக கிருஷ்ணதேவராயர் காலத்தில் (1516) எடுக்கப் பட்டது. அந்நடுகல்லில் உள்ள கல்வெட்டு,

''சுபமஸ்து சிரீமன் மகாமண்டலேஸ்வ
ரன் வீரகிருஷ்ண ராயர்க்குச் செல்லாநின்ற
தாது வருஷம் ஆவணியில் வடபரிசாரநா
ட்டில் வெள்ளாதியில் வெள்ளாள
ன் வேந்தர்கள் நயினார் மாலை ஆண்டா
னேன்''

என்பதாகும்.

# கொங்கு வேளாளர் கிளையினர்

## இவர்களும் கொங்கு வேளாள கவுண்டர்களே!

1. கொங்கு நாட்டுவேளாள கவுண்டர்கள்
2. படைத்தலைக் கவுண்டர்கள்
3. வடகரைக் கவுண்டர்கள்
4. பாலவேளாள கவுண்டர்கள்
5. முடமாண்டார் கவுண்டர்கள்
6. திருமுடிக் கவுண்டர்கள்
7. மலைக் கவுண்டர்கள்
8. குறும்ப கவுண்டர்கள்
9. பாலக்காட்டு மன்னாடியார்கள்
10. கொடைக்கானல் குன்னுவ மன்னாடியார்கள்

## 1. கொங்கு நாட்டுவேளாள கவுண்டர்கள்

கொங்கு நாட்டில் காவிரியின் மேற்குப் பகுதியிலிருந்து காவிரியைத் தாண்டிக் கொங்கு வேளாளர் குடியேற்றம் பல காலங்களில் பல காரணங்களால் நடைபெற்றது. அவ்வாறு காவிரிக்குக் கிழக்கே குடியேறிய கொங்கு வேளாளர்களில் பலர் அப்பகுதியில் ஆட்சிக்கு வந்த அரசர் அல்லது உயர் அரசு அதிகாரிகளின் கீழ் நாடாளும் பணியில் ஈடுபட்டனர்.

### நாட்டுக் கவுண்டர்

அவர்களில் கண்ணன், செல்லன், பண்ணை, மணியன், விழியன் குலத்தார் முதன்மை பெற்றனர். நாடாளும் உயர்நிலையில் இருந்த காரணத்தால் அவர்கள் தங்களுக்குள்ளேயே கொள்வினை - கொடுப்பினை வைத்துக் கொண்டு தனிக் குழுவாகத் தங்களை அழைத்துக் கொண்டனர். அவர்கள் நாட்டார் என்றும், நாட்டுக் கவுண்டர் என்றும், நாட்டு வேளாள கவுண்டர் என்றும் தங்களை அழைத்துக் கொண்டனர்.

கண்ணன் குலத்தார் மோரூர், முளசி, வெண்ணந்தூர் ஆகிய ஊர்களையும், விழியன் குலத்தார் இராசிபுரம், மல்லசமுத்திரம், திண்டமங்கலம் ஆகிய ஊர்களையும், செல்லன் குலத்தார் பருத்திப் பள்ளியையும், பண்ணை குலத்தார் ஏழூரையும், மணியன் குலத்தார் வீரபாண்டியையும் தங்கள் தலைமை இடமாகக் கொண்டனர்.

இவர்கள் மோரூர் நாட்டார், முளசி நாட்டார், வெண்ணந்தூர் நாட்டார், இராசிபுர நாட்டார், மல்லசமுத்திர நாட்டார், திண்டமங்கல நாட்டார், பருத்திப்பள்ளி நாட்டார், ஏழூர் நாட்டார், வீரபாண்டி நாட்டார் என்றும் அழைக்கப்பட்டதால் சிலர் இவர்கட்குக் குலக் குறியீடு இல்லை என்று கூறுவர். அது தவறு. மேற்கண்ட குலங்கள் அவரவர்க்கு உரியவை.

சிலர் மோரூரார், முளசியார், வெண்ணந்தூரார், இராசிபுரத்தார், மல்லசமுத்திரத்தார், திண்டமங்கலத்தார், பருத்திப்பள்ளியார்,

ஏழூரார், வீரபாண்டியார் எனவும் குறிப்பர். நாட்டையும், ஊரையும் மையப்படுத்தி அழைப்பதால் நாளடைவில் குலப் பெயர் மறைந்து விடுமோ என்று சிலர் அச்சம் தெரிவிக்கின்றனர்.

**இலக்கியங்களில்**

பல்வேறு இலக்கியங்களிலும், தனிப்பாடல்களிலும் இவர்கள் நாட்டுக்கவுண்டர், நாட்டார் எனச் சுட்டிக் கூறப்பட்டுள்ளனர்.

''பொன்வளரும் ஏழூர் வளநாடு போசராசன்
நன்மைய தாகிய நாட்டுக் கவுண்டன்
மன்மத ஆசாரன் எனவந்த பெரியணமால்''
(கல்யாணி பெரியண கவுண்டர் பாமாலை)

''நந்துலவு இராசிபுர நாட்டார் பணிமலைக்குத்
தந்தபரிசு இத்தனையே தான்''
(திருச்செங்கோட்டுத் திருப்பணிமாலை)

''அன்புடனே பருத்திநாட் டார்கள் கோதை
அர்த்தநா ரீசருக்கே அளித்த தாமே''
(திருச்செங்கோட்டுத் திருப்பணிமாலை)

''சாந்தனே ராசிபுர நாடனே கங்கைகுலத்
தலைவனே அனபாயனே''
(வேளுக்குறிச்சி வேலப்பகவுண்டர் மீது பாடல்)

**ஆவணங்களில்**

கல்வெட்டு, செப்பேடு, வரலாற்று ஆவணங்களிலும் நாட்டுக் கவுண்டர் பற்றிய குறிப்புகள் பல காணப்படுகின்றன.

''பிள்ளா நல்லூர் மஜரா குருசாமிபாளையத்திலிருக்கும்
நாட்டார் ஜாதி விவசாயம் வரதப்பகவுண்டர் மகன் 52
வயது அத்தியப்ப கவுண்டர்''

(குருசாமிபாளையம் ஒப்பந்தம், 1919)

''நாட்டு வேளாளர் பயிர்த்தொழில் கந்தப்ப கவுண்டர் மகன் இராமசாமிக்கவுண்டர்''

(வெண்ணந்தூர் ஒப்பந்தம்)

''சோபகிருது வருஷம் அற்பசி மாதம் 24 கலி 5005 சாலி 1826 னாட்டுக் கவுண்டர் சாவடி ஆதீனம்''

(மூணுசாவடி விநாயகர் கோயில் கல்வெட்டு 1904)

''கல்யாணி மிட்டா மஜரா செம்பராயப்பட்டியிலிருக்கும் நாட்டார் ஜாதி விவசாயம் கொமரசாமிக் கவுண்டர் மகன் நல்லியப்ப கவுண்டர்''

(ஒரு வரலாற்று ஆவணம்)

## ஆட்சி உரிமை

நாட்டுக் கவுண்டர்கள் நாட்டு நிர்வாகம், நாட்டாட்சி மேற்கொண்ட விபரம் பல இலக்கியங்களில் குறிக்கப்பட்டுள்ளது.

''நாடும் உடுகரையும் பெற்ற சங்ககிரிச் செருமான்
உலகப்ப கவுண்டர்''

(பருத்திப்பள்ளிச் செப்பேடு)

''ஏழூர் வளநாடு இலங்கும்கல் யாணிநகர்
நாளுக்கு உம்பளிக்கை நலமாகப் பெற்றோம்''

(பெரியண்ண கவுண்டர் பாமாலை)

''நன்மக்க ளாகிய வில்லைச் சேவகர்கள்
நாட்டுக்கச் சேரியைச் சுற்றி நிற்பார்''

(வேளுக்குறிச்சிப் பாடல்)

''தண்டிகைத் துரைமார்கள் சந்தோஷ மாய்வரியைக்
கொண்டளந்து வந்து குவிக்கும்இந்த வாசலினான்''

(கல்யாணிப்பாட்டு)

முதல் ஆவணம்

13, 14ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டுகளில்,

''வெள்ளாளன் விழியர்களில் கரிய பெருமாள்''

''வெள்ளாளன் கண்ணர்களில் காங்கேயன்''

''வெள்ளாளன் செல்லர்களில் சிலம்பாண்டை''

என்ற தொடர்கள்தான் காணப்படுகின்றன. வேறு சில கல்வெட்டு களில் ''காணியாளக் கவுண்டர்'' ''மாகாணத்துக் கவுண்டர்'' ''பொன்மேழித் துவசம் பெற்ற கவுண்டர்'' ''காராளர்'' என்ற குறிப்பைக் காணுகின்றோம்.

கி.பி.1522ஆம் வருடம் திருச்செங்கோட்டில் உள்ள கிருஷ்ண தேவராயர் காலக் கல்வெட்டில் அர்த்தநாரீசுவரர்க்கு உத்தர நட்சத்திரத்தில் கொடியேற்றமும், ரேவதி நட்சத்திரத்தில் தெப்பத் திருநாளும் நடத்த சங்ககிரியைச் சூழ்ந்த பனிரண்டு பற்றுக்காரர்கள் சந்தையில் வரும் சுங்கம், தரகு, மகமை போன்ற வரிகளைத் தாரைவார்த்துக் கொடுத்தனர்.

இதைக் குறிக்கும் கல்வெட்டில் ''இந்த தர்மத்தை குன்றத்தூர் துர்க்கத்திற்கு வந்த அரசுகளும், இத்தானத்துக்கு வந்த அதிகாரிகளும், நாட்டாண்மைக்காரக் கவுண்டர்களும் நடத்தி வைக்க'' என்ற தொடர் காணப்படுகிறது. பருத்திப்பள்ளி, இராசிபுரம், ஏழூர் நாடு ஆகியவை களை ''நாடாழ்வார் நாடு'' என அழைத்தனர். நாட்டாண்மைக்காரர், நாடாழ்வார் என்ற தொடர் பின்னர் நாட்டார் என்று அழைக்கப்பட்டது.

மதுக்கரைப் பட்டயத்தில் ''நாட்டுக் கவுண்டர்களும் குடியானவர்களும்'' என்ற தொடர் காணப்படுகிறது. பருத்திப்பள்ளிச் செப்பேட்டில் முதலில் மோரூர் ஆகவராமன் தென்னவன் கடக சூடாமணி சீர்வழிச் செழியன் தெய்வப்பாண்டியன் அத்தப்ப கவுண்டர், முளசையாதிபன் அன்னத் தியாகி பெத்த பெருமாள், மல்லசமுத்திரம் செங்கைச் சுரிகைமுனைகார கண்டன் அகளங்கராயன் - படைகண்ட ராசாவளி அனந்தய கவுண்டர்,

இராசிபுர நாட்டில் செம்பராயக் கவுண்டர், ஏழூர் நாட்டில் விருது செம்பராயன் அர்த்தநாரி முதலிய 5 ''நாட்டுக் கவுண்டர்'' கையெழுத்து இட்டபின் ''குடியானவர்'' என்று குறிப்பிட்டுப் பத்துப்பேர் கையொப்பம் இட்டுள்ளனர். இது முதல் ''நாட்டுக் கவுண்டர்'' எனத் தனியாகக் குறிக்கும் வழக்கம் ஏற்பட்டது.

ஊர்த் தலைவரை ''ஊர்க்கவுண்டர்'' என்று அழைப்பதைப் போல முதலில் நாட்டுக்குத் தலைவர் ஆனவர் ''நாட்டுக் கவுண்டர்'' என்று அழைக்கப்பட்டார். தனி மனிதரைக் குறிக்கும் சொல் அவர் சார்ந்த சமுதாயம் முழுமைக்கும் பெயராயிற்று. 1975ல் பிற்படுத்தப்பட்டோர் பட்டியலில் ''நாட்டுக்கவுண்டர்'' என்றே இடம் பெற்றுள்ளது. இன்று ''நாட்டுவேளாளர்'' என்று அழைப்பதைப் பலரும் விரும்புகின்றனர்.

**மோரூர்க் கண்ணகுலம்**

கீழ்க்கரைப் பூந்துறை நாட்டின் தலைநகர் மோரூர். தலைய நாட்டுக் கன்னிவாடியிலிருந்து பள்ளிவேளாளர் என்னும் வன்னிய சமுதாயத்தோடு ஏற்பட்ட பூசல் காரணமாக வெளியேறிய கண்ண குலத்தார் பல ஊர்கள் வழியாக மோரூர் வந்தடைந்தனர். மோரூர்க் கண்ணகுலத்தில் தோன்றிய சூரியகாங்கேயன் பாண்டியர் படையில் சேர்ந்து உயர்நிலைக்கு வந்தார். பாண்டியருக்கு அடங்காமல் எதிர்த்த ஆறகளூர் வாணனைத் தந்திரத்தால் உயிரோடு பிடித்து வந்து பாண்டிய மன்னன் முன் நிறுத்தியமைக்குப் பரிசும் பாராட்டும் பெற்று மோரூர் நாட்டை ஆளும் உரிமையைப் பெற்றார்.

அறுபது தண்டிகை எழுபது காங்கேயர் ஆட்சிபுரிந்தனர் என்பர். அடியார்க்கு நல்லாரைக் கொண்டு சிலப்பதிகார உரை எழுதுவித்த பொப்பண்ண காங்கேயனும், பத்தர்பாடி எம்பெருமான் கவிஞரைக்கொண்டு தக்கை ராமாயணம் பாடுவித்த திருமலை அத்தப்ப நல்லதம்பிக் காங்கேயனும் இம்மரபினரே.

திருச்செங்கோட்டில் இம்மரபினர் செய்த திருப்பணிகள் பலப்பல. மோரூர்க்கண்ணரில் பெரிய வகையார், சின்ன வகையார் என இரு பிரிவு உண்டு. மோரூர்க் கண்ணர்கள் சிலர் மேல்கரைப் பூந்துறை நாட்டில் கிழாம்பாடி கவுண்டம்பாளையம் பகுதியில் குடியேறினர். மோரூரார் நல்லபுள்ளியம்மனைக் குல தெய்வமாகக் கொண்டவர்கள்.

**முளசி கண்ணகுலம்**

மோரூர் நாடு 32 ஊர்களில் சரிபாதி 16 ஊர்களைக் கொண்டு முளசி நாட்டை ஏற்படுத்தினர். இளையபெருமாள்மலைப் பெருமாளைக் குல தெய்வமாகக் கொண்டு வணங்குபவர்கள். முளசிக் கண்ணர் செய்த ஆலயத்திருப்பணிகள் பல. பாண்டிய நாட்டில் பஞ்சம் ஏற்பட, முளசி கண்ணகுல வேலப்ப கவுண்டர் பாண்டிய நாட்டில் வளம் ஏற்படும் வரை பாண்டியன் படைக்கு உணவு இட்டு ''அன்னத்தியாகி'' என்ற பெயர் பெற்றார். இவர்கள் இளைய பெருமாள் குறவஞ்சி நூல் இயற்றச் செய்தவர்கள்.

கொக்கராயன்பேட்டை மிட்டா ஜமீன்தார் பெரிய ரங்கைய கவுண்டர் (1847-1901) செய்த அறப்பணிகள், இறைப்பணிகள் பலப்பல. திருச்செங்கோடு அ. முத்துசாமிக் கோனாரை ஆதரித்தவர். பழனி மாம்பழக் கவிச்சிங்க நாவலர் இவரைப் புகழ்ந்து பாடல்கள் பாடியுள்ளார். மாவிரட்டிபட்டிக் கண்ணகுலத்தார் பொதுநிலை (பொத்தி) முளசியார் என்று அழைக்கப்படுகின்றனர்.

**வெண்ணந்தூர் கண்ணகுலம்**

பல புலவர்கள் வாழந்த வெண்ணந்தூர்க் கோயில்கள் சிலவற்றை உருவாக்கியவர்கள் வெண்ணந்தூர்க் கண்ணகுலத்தார். செல்லாண்டியம்மன் இவர்கள் குல தெய்வம். முன்பு காடை குலத்தார் காணியாகவும் இவ்வூர் இருந்ததைச் செல்லாண்டியம்மன் ஊஞ்சல் பாடல் கூறுகிறது. இவ்வூரில் திருக்கோயில்களில் விழாக்கள் நடத்தும் முறை பற்றி நாட்டு வேளாள கவுண்டர்கட்கும், செங்குந்த

முதலியார்கட்கும் 30.11.1936ல் ஏற்பட்ட சுமூகமான ஒப்பந்தம் பிற ஊர்களுக்கு எடுத்துக்காட்டாகும்.

## இராசிபுரம் விழியன் குலம்

இக்குலத்தை விழியன், வெளியன் குலம் என்றும் அழைப்பர். சங்க இலக்கியம் குறிப்பிடும் ''வீரை வெளியன்'' ''வெளியன் தித்தன்'' ஆகியோருடன் இக்குலம் தொடர்புடையதா என்பது ஆய்வுக்கு உரியது. இவர்கள் பூர்வீகம் காங்கய நாட்டுப் பரஞ்சேர்வழி. 1992இல் ராம் ரவீந்திரன் என்பவர் விழியன் - விலையன் குலம் இரண்டும் ஒன்று என எழுதியிருப்பது தவறானதாகும்.

இராசிபுர விழியகுலத்தில் பாச்சலூரான், செண்பகராயன், துலுக்கண்ணன், ஆலத்தூரான் என நான்கு தலைவர்கள் இருந்தனர். இராசிபுரம் விழிய குலத்தில் இந்நான்கு பெயர்களில் நான்கு பிரிவுகள் உண்டு. அத்தனூர் அம்மன் கோயில் இவர்கட்கும், கொங்கு வேளாள கவுண்டர்கட்கும் பொதுவான கோயிலாகும். அத்தனூர் அம்மன் கோயில், குல முதல்வி அத்தாயி இவர்கள் வழிபாடு, விழாக்களுக்கு உரியவை. பாச்சல் குதிரை சிற்பம் அழகானது. மூணுசாவடியில் ''புடவைக்காரி'' என்ற வீரமாத்தி கோயில் உள்ளது. 19ஆம் நூற்றாண்டில் மிகப் பெரிய வள்ளலாக விளங்கி பழனி மாம்பழக் கவிச்சிங்க நாவலரால் ''சந்திர விலாசம்'' நூல் பாடப்பட்டவர் வள்ளல் வேளுக்குறிச்சி வேலப்ப கவுண்டர் (1832-1897). இவர் தம்பி பழனிவேல் கவுண்டர் மகன் சுப்பராய கவுண்டர் தமிழ் அகராதி தொகுத்தவர். இசை மேதையாகத் திகழ்ந்தவர்.

## மல்லசமுத்திரம் விழியன் குலம்

செல்லாண்டியம்மன் இவர்கள் குலதெய்வம். மல்லசமுத்திரம் சோழீசுவரர் மீது பிள்ளைப் பெருமாள் சிறைமீட்டான் கவிராயர் கோவை இலக்கியம் பாடியுள்ளார். பருத்திப்பள்ளி நாட்டிலிருந்து ஊர்களைப் பிரித்து மல்லைநாடு பருத்திப்பள்ளி செல்ல குலத்தாரால்

ஏற்படுத்தப்பட்டது. இம்மல்லை நாட்டின் முதல் தலைவர் விழிய குல நல்லையன் என்பவர் ஆவார். இம்மரபில் வந்த தொண்டைமான் கவுண்டர் நல்லாட்சி புரிந்தவர். வீரமும் ஈரமும் மிக்க மல்லை விழிய குலத் தொண்டைமான் ஏழாண்டுகள் அரசுக்கு வரி செலுத்தாமல் பல ஏரிகளும் குளங்களும் வெட்டினார். மன்னர் தண்டனை தர ஆணையிட்டார். இவர் கட்டிய ஏரிக்கரையிலேயே யானைக் காலால் தலையை இடறச் செய்ய அரசர் ஆணை பிறப்பித்தார். அவ்வாறு செய்யவே இடறிய தலை செல்லாண்டியம்மன் திருப்பாதங்களில் வந்து விழுந்தது. தொண்டைமான் மனைவி தீப்பாய்ந்தாள். இவர்கள் தெய்வமாக வணங்கப்படுகின்றனர்.

**திண்டமங்கலம் விழியன் குலம்**

திண்டமங்கலம் வாழவந்தி நாட்டைச் சேர்ந்த ஊர். திண்ட மங்கலம் காணியாளர்கள் ஆந்தை குலத்தார். ஆந்தை குலக்காணி யூரான திண்டமங்கலத்தில் விழியன் குலத்தார் காணி பெற்றதற்கு ஒரு வரலாற்று நிகழ்ச்சி கூறப்படுகிறது.

பரஞ்சேர்வழி விழியன்குலக் குடும்பத்தினர் சிலர் எழுமாத்தூர்ப் பகுதியில் குடியேறி வாழ்ந்தனர். அவர்கள் பெண்களை வன்னியர் திருமணம் செய்துகொள்ள விரும்பினர். பெண் பொம்மை செய்து வைத்துவிட்டு வெளியேறிய விழிய குலத்தார் பல்வேறிடங்களில் குடியேறினர். கருவுற்று கணவனை இழந்த பெண் ஒருத்தி திண்டமங்கலத்தில் வந்து ஆந்தை குல பெரியாக் கவுண்டம் பாளையம் ஊர்த் தலைவரிடம் தான் ஆந்தைகுலம் என்றும், கணவன் விழியகுலம் என்றும் கூறி ஆண் குழந்தையை ஒப்படைத்துவிட்டு மரணம் அடைந்தாள். பிள்ளையில்லாத ஊர்த் தலைவர் விழிய குலச் சிறுவனை வளர்த்தார்.

திண்டமங்கலம் கோயில் விழாவில் நகராத செல்லாண்டி யம்மன் சிலை விழிய குலச் சிறுவன் தொடவே நகர்ந்தது. சிறுவன் வளர்ந்து திருமணம் செய்ய திண்டமங்கலத்தில் விழியகுலக்

குடும்பம் பெருகியது. செல்லாண்டியம்மன் அவர்கட்குக் குல தெய்வம் ஆயிற்று.

திண்டமங்கலம் விழிய குலத்தார் தேனீசுவரர் கோயில், படைவெட்டியம்மன் கோயில், மாரியம்மன் கோயில் போன்ற கோயில்களிலும் வழிபட்டு ஆந்தை குலத்தாரோடும் பிற சமூகத் தோடும் இணைந்து வாழ்கின்றனர்.

**பருத்திப்பள்ளிச் செல்லன் குலம்**

எழுகரைச் செல்லன் குலத்தாரில் பருத்திப்பள்ளிச் செல்லன் குலத்தார் மட்டும் நாட்டுவேளாள கவுண்டர்கள். அருகில் உள்ள கொன்னையாறும், பருத்திப்பள்ளியும் செல்ல குலத்தாரின் தலைமைத்தலமாக விளங்குகிறது. திருச்செங்கோட்டில் செல்ல விநாயகர் கோயிலைக் கட்டிய பருத்திப்பள்ளி நாட்டார் திருச்செங்கோட்டுக்குப் பல்வேறு கொடைகளைப் பல காலங்களில் அளித்ததைத் திருச்செங்கோட்டுத் திருப்பணிமாலை கூறுகிறது. ஏரி, குளங்கள் அமைத்து நீர்ப்பாசனத்தைப் பெருக்கினர்.

அழகு நாச்சியம்மன் இவர்கள் குல தெய்வம். புவனேசுவரர், சீர்காழிநாதர் கோயில் வழிபாடு, திருப்பணியில் பங்கு கொண்டனர். ஆதிகேசவப்பெருமாள் கோயிலை ''சித்திரமேழி விண்ணகரம்'' என்று சிறப்பித்தனர். பருத்திப்பள்ளிச் செல்ல குல உலகப்ப கவுண்டர் அரசரால் ''முதலிக் காமிண்டன்'' பட்டம் பெற்றுப் பெருமையுடன் வாழ்ந்தார். இவர்கள் தங்களுக்கென்று குலமாணிக் கியை நியமித்துச் சிறப்புச் செய்து கலை வளர்த்தனர். காகத்தலைக் கவுண்டர், பெரியண்ண கவுண்டர் புகழ்பெற்றவர்கள். இவர்கள் பூர்வீகம் மேல்கரைப் பூந்துறைநாட்டு அனுமன்பள்ளி ஆகும்.

**ஏழூர் பண்ணை குலம்**

ஏழூர் ஒரு நாட்டின் தலைநகர். ஏழூர் நாட்டார் குலப் பெயரால் பண்ணையம்மனை எழுந்தருளச் செய்து வழிபட்டனர். ஏழூர் நாட்டார் இப்போது இராசிபுரம் அருகே கொழிஞ்சிப்பட்டியில்

புதுப்பண்ணையம்மன் கோயில் கட்டி வழிபட்டு வருகின்றனர். சங்க காலச் சிறுகுடிகிழார் பண்ணன், வல்லார் கிழான் பண்ணனோடு இக்குலத்தைத் தொடர்புபடுத்துவர் சிலர். எழுவூர் - ஏழூர் ஒரு தேவார வைப்புத் தலம். இங்குள்ள ஏரி மிகப்பெரியது.

இராசிபுரம் ஆண்டகளூர் கேட் அருகே 3.57 ஏக்கர் நிலம் வாங்கி 27.05.2001ல் கோயிலுக்குக் கால்கோள் நாட்டினர். 25.02.2002ல் கோபுரக் கால்கோள் நடைபெற்றது. கல்லால் புதுக்கோயில் கட்டித் தங்கள் ஏழூர்ப் பண்ணையம்மனைக் கொழிஞ்சிப்பட்டியில் எழுந் தருளச் செய்து குடமுழுக்கு விழாவைச் சிறப்புடன் நடத்தினர். நயினாமலைக் கவுண்டர், பெரியண கவுண்டர் போன்றோர் ஏழூர் நாட்டாரில் இலக்கியப் புகழ் பெற்றவர்கள். ஏழூர் போன்றே கல்யாணி யிலும் ஏழூர் நாட்டார் அதிகாரம் செய்தனர். ஏழூர் நாட்டார் பண்ணை குலத்தார் பூர்வீகம் மேல்கரைப் பூந்துறை நாட்டு அனுமன்பள்ளி ஆகும்.

## வீரபாண்டி மணியன் குலம்

மணியன் என்பது தொன்மையான பெயர். வீரபாண்டி சேலம் நாட்டைச் சேர்ந்தது. வீரபாண்டி நாட்டார் என்னும் மணியன் குலத்தினர் காரூரம்மனைக் குல தெய்வமாக வழிபட்டுச் சிறப்புடன் வாழ்ந்து வருகின்றனர். வீரபாண்டி நாட்டார் இல்லத்தில் ஆண், பெண் குழந்தைகள் பிறந்தால் அவர்கள் உருவச் சிலைகளை உலோகத்தால் செய்து காரூரம்மனுக்குப் படையலாகப் படைப்பது வழக்கம். வீரபாண்டி மணியன் குலத்தார் பூர்வீகம் காங்கயநாட்டு முத்தூர். அதனால் முத்தூர் செல்லக்குமாரரையும், குப்பண்ண சுவாமியையும் வீரபாண்டிக் குலதெய்வக் கோயிலில் எழுந்தருளச் செய்து வழிபட்டு வருகின்றனர். இங்குள்ள மற்ற கோயில்கள் கொப்பத்து அம்மன் கோவில், அங்காளம்மன் கோயில் ஆகியவை யாகும்.

## 2. படைத்தலைக் கவுண்டர்கள்

முதலாம் பராந்தக சோழன் (907-950) ஆட்சிக்காலத்தில் கொங்கு ஆட்சியாளராக 942ஆம் ஆண்டு கோநாட்டான் வீரசோழப் பெருமானடிகள் என்பவரை நியமித்தார். அவர் 980 வரை ஆட்சி புரிந்தார். அவர் பரகேசரி பட்டம் பெற்றவர்.

அவருக்குப் பின் இராசகேசரி வீரசோழக் கலிமூர்க்கப் பெருமாள் என்பவர் ஆட்சிக்கு வந்தார் (980-1004). இக்காலத்தில் உள்நாட்டுக் குழப்பங்களைத் தவிர்க்கவும், கள்ளர் பயம் ஒழிக்கவும், அன்னியர் படையெடுத்தால் எதிர்க்கவும் நிலைப்படை ஒன்றை அமைக்க விரும்பினர். தொன்மையானதும் கொங்கு நாட்டின் மையத்தில் அமைந்திருப்பதும், வாகை என்ற பழம்பெயர் உடையதும் ஆகிய விசயமங்கலத்தில் தங்கள் வெற்றியைக் கொண்டாடப் படை நிறுவ எண்ணினர்.

அப்படையில் கொங்கு வேளாளரில் பதினொரு குலத்தார் இணைந்தனர். அவர்கள் பொருளந்தை, சாத்தந்தை, மணியன், ஈஞ்சன், பூமன், புள்ளந்தை, மேதி, பயிரன், வாணன், வாணி, சாத்துவாய் ஆகிய குலத்தைச் சேர்ந்தவர்கள். இதனை ஒரு தனிப் பாடல் விளக்குகிறது.

''மங்கையொரு பாகர் திருநா கீசரும்
மால்கரிய மாணிக்கரும்
மகதேவர் சோமீசர் செல்சந்திர நாதரும்
மகிழ்வுடன் மகிழ்ந்துகாக்க

மங்கைநகர் கூடல் கருமாபுரம் காடையூர்
மன்னவர்கள் பொருளந்தையும்
வானிதனில் அணைகண்ட சாத்தந்தை மேருவும்
மணியனுடன் ஈஞ்சகுலமும்

துங்கமிகு பூமனும் புள்ளந்தை மேருவும்
துரைராசர் மேதிகுலமும்
துன்பமில் பயிரனும் வாணன்கேள் வாணியும்
துரைசாத்து வாயருடனே

இங்கிவர்கள் படைத்தலைவர் பதினொரு குலத்தவர்கள்
இரவோர்கள் தம்பம் என்ன
எழில்பெற்ற நிலையுற்ற காராளர் ஏராளர்
இன்னிலம் தனில்வாழ்கவே''

என்ற பாடல் படைத்தலைக் கவுண்டர்கள் பதினொரு குலத்தாரையும் தொகுத்தும் கூறுகிறது. இவர்கள் படையில் இருந்ததால் மற்ற வேளாளருடன் தொடர்பு குறைந்து தங்களுக்குள்ளேயே கொள் வினை கொடுப்பினை வைத்துக் கொண்டு தனி வேளாளர் ஆயினர்.

**கொங்கு மண்டல சதகத்தில்**

படைத்தலை வேளாளரில் உலகுடையான் என்பவர் ஒருவர் இருந்தார். பெயர் அமைப்பிலிருந்து அவர் வெள்ளோடு சாத்தந்தை குலத்தவராக இருக்கலாம் என்று தெரிகிறது. தமிழ் கற்று, தமிழின் சுவையை அறிந்த உலகுடையான் பல புலவர்களை ஆதரித்துப் போற்றி வந்தார். ஒரு புலவர் உலகுடையான் மீது அகம் தொடர்பான கோவை இலக்கியம் ஒன்றைப் பாடினார்.

உலகுடையான் ''உலகுடையான் கோவை'' இலக்கியம் கண்டு பெரிதும் மகிழ்ந்தார். கோவைபாடிய புலவருக்கு விருதும், வேண்டிய அளவு கொடையும் கொடுத்தார். கோவை பாடிய புலவருக்குச் சேவை செய்ய விரும்பினார். புலவரின் பல்லக்கைச் சுமந்தார். பொன்னும் பொருளும் அளித்ததுடன் நன்செய் நிலங் களையும் கொடையாக அளித்தார். உலகுடையான் வீரம் மிக்கவராம். ஆனால் புலவர்க்கு இனியவர். இச்செய்திகளைக் கார்மேகக் கவிஞர் தன் கொங்கு மண்டல சதகத்தில் பதிவு செய்துள்ளார்.

''சொல்இக்கு அனைய அகத்துறைக் கோவை சொனபுலவன்
பல்லக்கு எடுத்துக் கழனியும் பொன்னும் பரிசளித்து
வெல்லப் படைத்தலை வீரன் உலகுடை வீரனமர்
மல்லர்க்கு இனிய குறும்பணை நீள்கொங்கு மண்டலமே''

என்பது கொங்கு மண்டல சதகப்பாடலாகும். உலகுடையான் கோவை இலக்கியம் கிடைக்கவில்லை. அதைப்பாடிய புலவரும் இன்னார் என்று தெரியவில்லை.

விசயமங்கலம் பொருளந்தை குலப்பெயரோடு சிறப்பித்துப் பாடப்பட்டவர்களும், வாரணவாசி, வடமலை, திருமலை நல்லான் போன்றவர்களும் படைத்தலைக் கவுண்டர்களாக இருக்கக்கூடும்.

**கல்வெட்டுகள்**

படைத்தலை வேளாளர் கல்வெட்டுகள் விசயமங்கலம் நாகீசுவரர் கோயில், கரியமாணிக்கப் பெருமாள் கோயில், அத்தாணீசு வரமுடையார் கோயில், விசயாபுரியம்மன் கோயில், சந்திரப்பிரப தீர்த்தங்கரர் கோயில், தளவாய்பாளையம் விசயாபுரி யம்மன் கோயில் ஆகியவற்றில் மொத்தம் 17 கிடைத்துள்ளன. கி.பி.1163 முதல் 1313 வரை 150 ஆண்டுக்காலம் கொங்குச் சோழர், பாண்டியர் நாளில் விசயமங்கலம் படைத்தலை வேளாள கவுண்டர் சமூகம் மிகச் செல்வாக்குடன் சீரும் சிறப்புமாக விசயமங்கலத்தில் வாழ்ந்துள்ளது கல்வெட்டு மூலம் தெரிகிறது.

கோயில் திருப்பணிக்கும், சந்தியா தீபம் - நந்தா தீபம் வைப்பதற்கும் பலர் கொடை கொடுத்துள்ளனர். படைத்தலை வேளாளர் சிலர் அரசு அதிகாரிகளாக இருந்துள்ளமை கல்வெட்டு மூலம் தெரிகிறது. அவர்களில் சிலர் ''மூவேந்த வேளான்'' முதலிய பட்டங்களைப் பெற்றுள்ளனர். படைத்தலை வேளாளரில் ஆண்கள் மட்டும் அல்ல, அவர்களின் தேவியராகிய பெண்களும் கொடை யளித் துள்ளமை சிறப்பு மிக்க செய்தியாகும். ''வெள்ளாளன் படைத்தலைகளில்'' என்று மட்டும் கல்வெட்டுகளில் பயின்று வருகிறது குலப்பெயர் குறிக்கப்படுவது இல்லை.

## விசயமங்கலம் கோயில் கல்வெட்டுகள்

## நாகீசுவரர் கோயில்

குலோத்துங்க சோழனின் 14 ஆம் ஆட்சியாண்டில் (1163) விசயமங்கலத்து வெள்ளாளன் படைத்தலைகளில் மாதேவன் என்பவர் நாகீசுவரர் கோயிலில் சந்தியா தீபம் வைக்க புதுச்சலாகை அச்சு ஒன்று கொடையாகக் கொடுத்தார்.

திரிபுவன வீரதேவனின் நான்காம் ஆட்சியாண்டில் (1171) விசயமங்கலத்து வெள்ளாளன் படைத்தலைகளில் தேவன் கூத்தன் தேவப்பெருமாள், தேவன் பராக்கிரமன், வெள்ளாளன் படைத் தலைகளில் அஞ்சாதான் மனைக்கிழத்தி நல்லிசையாளன் மகள் நம்பியம்மை, காங்கயம் வியாபாரி நம்பி திருநாகுடையான் ஆகிய நால்வரும் தலா 1 அச்சு 4 பணம் விசயமங்கலம் நாகீசுவரர் கோயிலுக்கு நித்தியப்படிக்குக் கொடையளித்தனர்.

வீரராசேந்திரனின் இரண்டாம் ஆட்சியாண்டில் (1209) விசயமங்கலத்து வெள்ளாளன் படைத்தலைகளில் மாணிக்க தேவன் மணிச்சால் உடையான் பொற்காளி பிள்ளை, நான்காம் ஆட்சி யாண்டில் (1211) விசயமங்கலத்து வெள்ளாளன் படைத்தலைகளில் திரு ஆனைக்காவன் விச்சாதிரன் மனைக்கிழத்தி ஆளுடையாள், முப்பதாம் ஆட்சியாண்டில் (1237) வெள்ளாளன் படைத்தலைகளில் திரு ஆனைக்கா உடையான் சொக்கன் ஆகியோர் தலா ஒரு அச்சு பொன் கொடுத்து நாகீசுவரர் கோயிலில் சந்தியா தீபம் வைத்தனர்.

வீரபாண்டியனின் மூன்றாம் ஆட்சியாண்டில் (1268) விசய மங்கலம் வெள்ளாளன் படைத்தலைகளில் நம்பி மனைக்கிழத்தி பிள்ளையாழ்வி பாவை பிள்ளையம்மை நாகீசுவரர் கோயிலில் சந்தியா தீபம் வைக்க ஒரு அச்சு பொன் கொடுத்தார்.

வீரபாண்டியனின் ஐந்தாம் ஆட்சியாண்டில் (1270) விசய மங்கலத்து வெள்ளாளன் படைத்தலைகளில் நேரிய மூவேந்த வேளான் அவிநாசி நாகீசுவரர் கோயிலில் சந்தியா தீபம் வைத்தார்.

சுந்தரபாண்டியின் 15ஆம் ஆட்சியாண்டில் (1300) விசய மங்கலத்து வெள்ளாளன் படைத்தலைகளில் நம்பி உலகுடையான் ஆவத்தூர் விக்கிரம சோழீசுவரம் உடையார் கோயிலில் எப்பொழுதும் எரியும் நந்தா தீபம் வைக்க 120 பணம் கொடை கொடுத்தார்.

விக்கிரம சோழ தேவனின் இரண்டாம் ஆட்சியாண்டில் (1258) விசயமங்கலம் நாகீசுவரர் கோயில் திருப்பணியின்போது விசயமங்கலத்து வெள்ளாளன் படைத்தலைகளில் அரையன் திருநங்கன் என்பவர் தன் கொடையாகத் திருநிலைகால் செய்து கொடுத்தார்.

### கரியமாணிக்கப் பெருமாள் கோயில்

சுந்தரபாண்டியனின் 23ஆம் ஆட்சியாண்டில் (1308) விசயமங்கலம் வெள்ளாளன் படைத்தலைகளில் திருவாளி பெரியதேவன் வாணராயன் என்பவர் விசயமங்கலம் கரியமாணிக்கப் பெருமாள் கோயிலில் சந்தியா தீபம் வைத்தார்.

### அத்தாணி ஈசுவரமுடையார் கோயில்

சுந்தரபாண்டியனின் 28ஆம் ஆட்சியாண்டில் (1313) விசயமங்கலம் வெள்ளாளன் படைத்தலைகளில் விச்சன் சிட்டனான தப்பிலாவாசகன் விசயமங்கலம் அத்தாணி ஈசுவரமுடையார் கோயிலில் சந்தியா தீபம் வைத்தார்.

### சந்திரப் பிரப தீர்த்தங்கரர் கோயில்

வீரராசேந்திரனின் 40ஆம் ஆட்சியாண்டில் (1247) விசயமங்கலம் சமணக்கோயில் திருப்பணி நடைபெற்றபேது விசயமங்கலம் வெள்ளாளன் படைத்தலைகளில் திரு ஆனைக்கா உடையான் சொக்கன் தன் கொடையாகத் திருநிலைகால்களை அளித்தார்.

## கம்புளியம்பட்டியார் திருப்பணிகள்

குறுப்புநாடு விசயமங்கலம் வகையறா கிராமங்களில் பதினொரு கோத்திரம் அஞ்சு பங்காளிகளில் நாலாவது பங்கில் சேர்ந்த சாத்தந்தை குலம் கம்புளியம்பட்டி நாகப்ப கவுண்டர் மகன் சிலம்ப கவுண்டர் மகன் மணியம் சின்னரங்கைய கவுண்டர்' இந்திய சர்க்கார் மகாராணியார் அவர்கள் அரசாட்சியில் இங்கிலீசு துரைத் தனத்தில் 1869ஆம் ஆண்டு நாகீசுவரர் கோயிலில் சில பகுதிகளை திருப்பணி செய்ய நினைத்தார். தேவஸ்தானக் கமிட்டி உறுப்பினர்கள் கிருஷ்ணய்யர், இரணியப்ப அய்யர், சீனுவாசய்யர், பெரிய அண்ணா அய்யர் இவர்களைப் பார்வையிடச் செய்து அனுமதி பெற்றார்.

''இந்து தேவஸ்தானத்துக்கு தர்மகர்த்தாவாக நேமுகமாய் இருக்கிற மேல்கண்ட அஞ்சு பங்காளிகளில் முதலாவது பங்கில் சேர்ந்த சீரங்கநாத கவுண்டர் நாலாவது பங்கில் சேர்ந்த பட்டக்காரக் கவுண்டர் இவர்கள் வசமிருந்த கசர் லாபத் தொகையிலும், தன் சொந்தத் தொகையிலும் செலவு செய்து அஸ்திபாரங் கண்டு பிரித்துப் புதுசாயிக் கட்டிவச்ச கொறட்டு வாசல் மண்டபமும் கெருட கம்பத்துக் கொறடும்'' என்று அவர் செய்த திருப்பணிகள் கல்வெட்டில் குறிக்கப்படுகின்றது.

1869ஆம் ஆண்டு நாகீசுவரர் கோயில் திருப்பணியை முன்னின்று செய்து முடித்த படைத்தலை வேளாளரில் ஐந்து பங்காளிகளில் நாலாவது பங்கைச் சேர்ந்த கம்புளியம்பட்டி மணியம் சின்னரங்கைய கவுண்டர் மகன் நாகப்ப கவுண்டர் 1883ஆம் வருடம் முன்னின்று விசயமங்கலம் நாகீசுவரர் கோயிலில் சில திருப்பணி களைச் செய்தார்.

ஒழுகாப் பந்தி மண்டபத்தைப் பழுதுபார்த்தார். தீர்த்தக் கிணறு நடைகிணறாகப் பழுது பட்டுக் கிடந்ததைச் சரி செய்தார். இவற்றிற்கு மொத்தம் ரூபாய் 600 செலவானது. நாகப்ப கவுண்டரும்,

அவர் தம்பிகளான சிலம்பண கவுண்டரும் முத்துசாமிக் கவுண்டரும் சொந்தப் பணம் சிறிது கொடுத்தனர்.

விசயமங்கலம் தேவஸ்தான தர்மகர்த்தாக்கள் படைத்தலை வேளாளரில் சரவணக் கவுண்டர் மகன் நடுப்பட்டி மு. மணியம் அனுமந்தக் கவுண்டர், மேட்டுப்புதூர் சீரங்கக் கவுண்டர் மகன் ரங்கய்ய கவுண்டர் ஆகியோர் வசம் இருந்த கசர்ப்பணமும் திருப்பணிக்குச் செலவாக்கப்பட்டது.

மேலும் பொருள் உதவி செய்தவர்கள் கோபாலகிருஷ்ண அய்யங்கார் மகன் சேஷ அய்யங்கார், காளியப்ப கவுண்டன் புதூர் மொசுக்கவுண்டர் மகன் சின்னக் கவுண்டர், மூங்கிற்பாளையம் சின்னராம செட்டியார் மகன் ரங்க ரெட்டியார், சாமராசபாளையம் சின்ன வெங்கிட்ட ரெட்டியார் மகன் வெங்கிட்ட ரெட்டியார் மேற்படி தேவஸ்தான சிப்பந்திகள் ஆகியோர் ஆவர்

திருப்பணிக்கு அனுமதியளித்த ஈரோடு தாலுக்கா இந்து தேவஸ்தானக் கமிட்டி உறுப்பினர்கள் இரணியப்ப அய்யர், சாம அய்யர், பலசுவாமி அய்யர், சீனிவாச ராமானுஜ அய்யங்கார் ஆகியோர் ஆவர்.

### விசயாபுரியம்மன் கோயில் கதவுப் பொறிப்பு

1895 ஆம் வருடம் (மன்மத ஆனி 13) விசயமங்கலம் விசயாபுரியம்மன் கோயில் கதவைச் செய்தளித்தவர் கம்புளியம்பட்டி நாகப்ப கவுண்டர். இதைக் குறிக்கும் எழுத்துக்கள் விசயாபுரியம்மன் கோயில் கதவில் பொறிக்கப்பட்டுள்ளது.

### தளவாய்பாளையம் விசயாபுரியம்மன் கோயில் திருப்பணி

குறுப்புநாடு விசயமங்கலம் வகையறா கிராமங்களின் மிராசு தாரர்களாகிய படைத்தலை வேளாளர் ஐந்து பங்காளிகளும் அவர் களைச் சேர்ந்த பதினொரு கோத்திரக்காரர்களில் மூன்றாவது பங்கு பொருளந்தை கோத்திரம் தளவாய்பாளையம் கிராமம் சேடபாளையம்

வெள்ளைக் கவுண்டர் மகன் ரங்கய்ய கவுண்டர் அவர் மகன் முத்துக்கிருஷ்ண கவுண்டர் இவர்கள் தாயாதியாகிய முத்துக்கவுண்டர் தளவாய்பாளையத்தில் விசயாபுரியம்மன் கோயிலைச் செங்கல்லால் கட்டினார்.

மேற்படி முத்துக்கிருஷ்ண கவுண்டர் அதைப்பிரித்துத் தன் சொந்தச் செலவில் கல்லினால் கருவறை, அர்த்தமண்டபம் ஆகியவற்றை 1877ஆம் ஆண்டு சனவரி மாதம் கட்டி முடித்தார். இதைக் குறிக்கும் கல்வெட்டு தளவாய்பாளையம் விசயாபுரி யம்மன் கோயிலில் உள்ளது.

**செப்பேடுகள்**

ஈரோடு கலைமகள் கல்வி நிலைய அருங்காட்சியகத்தில் ''குறுப்பு நாட்டுக் காணியாளர் செப்பேடும்'' அதன் ஓலைப் பட்டயமும் உள்ளது.

அதில் குறுப்புநாட்டின் 32 ஊர்களுக்கும் காணியாளர்கள் யார், யார் என்று கூறப்பட்டுள்ளது.

முதல் காணியாளர்கள் எழுமாத்தூர் பனங்காடை குலத்தினர். இரண்டாம் காணியாளர்கள் பொருளந்தை, பெரியன், வெண்டுவன், கண்ணந்தை, செல்லன், சாத்தந்தை, ஓதாளன் குலத்தினர், மூன்றாவது காணியாளர் படைத்தலைக் கவுண்டர்கள், விசயமங்கலம் விசயா புரியம்மன் கோயிலிலும், ஊத்துக்குளி கதித்தமலையாண்டவர் கோயிலிலும் இதே வரிசைப்படி காணி உரிமை கடைப்பிடிக்க வேண்டும் என்று செப்பேட்டில் எழுதப்பட்டுள்ளது.

மற்றொரு செப்பேடு கூனம்பட்டி மாணிக்கவாசகர் திருமடத்தில் உள்ளது. ஊத்துக்குளி கதித்தமலையில் புதுத்தேர் செய்து தேர் ஓட்டும் திருவிழா 23.09.1763 அன்று நடைபெற்றது. இத்தேர்த் திருவிழாவை நடத்தியவர்கள் விசயமங்கலம்படைத்தலை வேளாளரில் ஐந்து பங்கு

கவுண்டர்கள். அவர்கள் சார்பில் குமார வேலப்ப கவுண்டர், பட்டக்காரக் கவுண்டர், அனுமந்தக் கவுண்டர், குமாரசாமிக்கவுண்டர், ராய கவுண்டர் ஐவரும் தங்கள் குல குரு கூனம்பட்டி ஆதீனம் மாணிக்கவாசக சுவாமிகட்கு ஏற்கனவே கொடுத்திருந்த 20 வள்ள பூமியுடன் சேர்த்து 16 வள்ளபூமி கொடை கொடுத்ததை இச்செப்பேடு கூறுகிறது. இந்த நிலக்கொடை அரண்மனை அறிய (அரசு) எழுதிக் கொடுத்ததாகக் கூறப்படுகிறது. கொடுத்த நிலத்திற்கு விரிவான எல்லையும் கூறப்படுகிறது. மைசூர் கிருஷ்ணராச உடையார் காலத்தில் இச்செப்பேடு எழுதப்பட்டுள்ளது.

# 3. வடகரைக் கவுண்டர்கள்

பவானியாற்றின் வடக்கிலும், காவிரியாற்றின் மேற்கிலும் உள்ள பகுதிக்கு வடகரை நாடு என்று பெயர். பவானி வட்டத்தின் சமவெளிப் பகுதியும், கோபி வட்டத்தின் கிழக்குப் பகுதியும் வடகரை நாடாகக் கொள்ளப்படுகிறது.

''காவேரி வானிநதி அருகில் வாழும்
கதித்துவளர் வடகரை நன்னாடு'

என்பது மயிலம்பாடி ஊஞ்சல் பாடலில் வரும் தொடராகும்.

இந்த வடகரை நாட்டில் பெரும்பான்மையினராக வாழ்ந்து வருபவர்கள் ''வடகரைக் கவுண்டர்கள்'' எனப்படுவர். கொங்கு நாட்டு வேளாளர் சமுதாயத்தில் சிறப்பிடம் பெறுபவர்கள். இவ்வட கரைக் கவுண்டர்களை வடகரையார், வடகரையாளர், வடக்கத்திக் கவுண்டர், நார்முடிக் கவுண்டர், நரம்பு கட்டிக் கவுண்டர், நரம்பர், கணவாளர், மழவர் (மாளவர்), அதிகர், கட்டியர் எனப் பல்வேறு பெயர்களில் அழைப்பர். இவ்வாறு பல பெயர்களில் அழைக்கப்படு வதற்குப் பல்வேறு பொருத்தமான காரணங்களும் உள்ளன.

இவ் வடகரைக் கவுண்டர்களில் 35 குலப் பிரிவுகள் உள்ளன என்பர்.

அவை,

| | | | |
|---|---|---|---|
| 1. | ஆவ குலம் | 8. | கண்ணி குலம் |
| 2. | ஆவரான் குலம் | 9. | காடை குலம் |
| 3. | ஊம குலம் | 10. | காரியான் குலம் |
| 4. | எருமை குலம் | 11. | குங்கிலியான் குலம் |
| 5. | ஏறுமயில் குலம் | 12. | குரியான் குலம் |
| 6. | கணவாள குலம் | 13. | கொன்னதியான் குலம் |
| 7. | கண்ண குலம் | 14. | கோதண்டியான் குலம் |

15. கோவேந்தர் குலம்
16. சாத்தந்தை குலம்
17. செல்ல குலம்
18. நரபால குலம்
19. பண்ண குலம்
20. பவள குலம்
21. பாரியூரான் குலம்
22. பால குலம்
23. பில்லை குலம்
24. புல்ல குலம்
25. பூமன் குலம்
26. பேர்வாழ குலம்
27. பேரீஞ்சியான் குலம்
28. மணியன் குலம்
29. மேனி குலம்
30. வக்கண குலம்
31. வண்ண குலம்
32. வந்தன் குலம்
33. வாணி குலம்
34. வேத குலம்
35. வேந்தன் குலம்

## கணவாளர்

கணவாளர் அல்லது கனவாளர் என்பது வடகரைக் கவுண்டர் குலங்களில் ஒன்று. மொத்தமாக வடகரையார் அனைவரையும் கணவாளர் என்று அழைக்கும் வழக்கமும் உண்டு.

கனமான வாளை எடுத்துப் போர் புரியும் வல்லமை படைத்தவர் ஆதலின் கனவாளர் எனப்பட்டனர். பாளையக்காரர், குறுநில மன்னர்களின் முடிசூட்டு விழாவில் வாளை எடுத்துக் கொடுக்கும் உரிமையுடையவர் ஆதலின் ''கனவாளர்'' எனப்பட்டனர் என்றும் கூறுவர்.

ஈரோடு மாவட்டம், பெருந்துறை வட்டம், குன்னத்தூர் இலட்சுமி நாராயணப் பெருமாள் கோயில் கல்வெட்டில் குறுப்பு நாட்டுக் குன்றத்தூர் வெள்ளாளன் கணவாளரில் உடையாண்டான் அழகப் பெருமாள் தாதன் பிள்ளை ஆண்டானான காலிங்கராயன் என்பவர் அந்தக் கோயில் திருப்பணியின்போது ஒரு பகுதியைத் தம் செலவில் அமைத்துக் கொடுத்த விபரம் கூறப்படுகிறது.

இவர் பெயர் அமைப்பை நோக்கும் போது போசள மன்னன் மூன்றாம் வீர வல்லாளனிடம் (கி.பி.1332) சிறப்பும் விருதும் பெற்ற

அரசியல் தலைவர் என்று தெரிகிறது. இக்கல்வெட்டில் கணவாளர் என்பது வடகரையாரைக் குறிக்கிறது எனலாம்.

பாரியூரில் வடகரைக் கவுண்டரில் கணவாள குலத்தில் செட்டிபிள்ளான் அப்பன் என்ற வள்ளல் பெருமக்ன் ஒருவர் வாழ்ந்து வந்தார். இல்லை என்று வந்தவர்க்கு இல்லை என்று சொல்லாமல் நாளும் பரிசிலை வாரி வழங்கும் வள்ளலாகத் திகழ்ந்தார். தொடர்ந்து ஈகை செய்து தம் கைப்பொருள் எல்லாம் இழந்தார். கடன் வாங்கியும் ஈகை செய்யும் கடமையைச் செய்தார்.

மிகவும் வறியவர் ஆன நிலையில் எவரேனும் இரவலர், புலவர்கள் வந்து இரந்தால் ''இல்லை'' என்று சொல்லுவதற்கு அஞ்சி நடுங்கினார். தமிழ் பயின்ற செட்டிபிள்ளான் அப்பன் ''ஈதல் செய்ய இயலாதபோது சாதல் இனியது'' என்ற வள்ளுவர் வாக்கை நினைத்து சாகத்துணிந்தார். அருகில் இருந்த கானகத்தில் புலிகள் வாழும் பெரிய புதர்கள் இருப்பதை அவர் அறிவார். புலிப் புதரில் வீழ்ந்து புலிக்கு இரையாகலாம் என்று எண்ணிச் சென்று புலிப்புதரில் பாய்ந்தார்.

அங்கு திருடி வந்த பெரும் பொருளைப் பங்கு போட்டுக் கொண்டிருந்த திருடர்கள் பயந்து பொருட்குவியலைப் போட்டு விட்டு ஓடி மறைந்தனர். அதுகண்ட செட்டிபிள்ளான் அப்பன் அப்பொருளைக் கொண்டு வந்து பல நாட்கள் ஈகை சய்து மகிழ்ந்தார். இந்த அரிய நிகழ்ச்சியைக் கார்மேகக் கவிஞர் தம் கொங்கு மண்டல சதகத்தில் பதிவு செய்து ஒரு பாடல் பாடியுள்ளார் (98).

''கலியின் மெலிந்து புகல்கவிக்கு ஈயக் கயில்இன்மையால்
புலியின் உழைபுக்குக் கள்வர்கள் பங்குப் பொருள்திரளை
மலிய எடுத்துப் புலவருக்கு ஈந்த வடகரையான்
வலியன் கணவாளன் செட்டிபிள் ளான்கொங்கு மண்டலமே'

என்பது சதகப்பாடலாகும்.

பாரியூர் சிவபெருமான் அமரவிடங்கீசர். அவர் மீது குறவஞ்சி இலக்கியம் ஒன்று பாடப்பட்டுள்ளது. அந்நூல் இன்று கிடைக்க

வில்லை. அந்நூல் பாடல் ஒன்றில் பாரியூரின் பெருமையைக் கூறுமிடத்து கணவாள குல செட்டிபிள்ளான் அப்பனின் இந்த அரும் செயல் கூறப்பட்டுள்ளது.

''இட்ட மான கவிசொலும் பாவலர்க்கு
இல்லை என்று சொலற்குஅஞ்சிக் காட்டில்வாழ்
துட்ட வன்புலித் தூறில் புகுந்தநல்
தூய வன்கண வாள குலத்தினன்

செட்டி பிள்ளைஅப் பன்தினம் தொண்டுசெய்
தேவி மாமலை மாதொரு பங்குள
கட்டு செஞ்சடை அமர விடங்கனார்
கதித்து வாழ்பாரி யூர்எங்கள் ஊரே''

என்பது அமரவிடங்கர் குறவஞ்சிப் பாடலாகும்.

பாரியூர் வள்ளல் செட்டி பிள்ளையப்பன் அமரவிடங்கப் பெருமாள் கோயிலில் சந்தியா தீபம் வைத்த செய்தி அக்கோயில் கல்வெட்டொன்றின் மூலம் தெரிகிறது (கி.பி.1327).

''ஸ்வஸ்திஸ்ரீமன் பிரதாபச் சக்கரவர்த்தி போசள புசபல வீரவல்லாள தேவர் பிருத்விராஜ்யம் பண்ணியருளாநின்ற பிரபவ சம்வத்சரத்து ஆவணி மாதம் முதல் காஞ்சிக் கூவல் நாட்டில் பாரியூர் வெள்ளாளன் கணவாளர்களில் செட்டி பிள்ளையப்பனேன் உடையார் அமரவிடங்கப்பெருமானுக்கு பள்ளியெழுச்சி சந்தியா தீபம்...''

என்பது அக்கல்வெட்டாகும்.

இன்றும் செட்டிபிள்ளையப்பன் வழிவந்த வடகரைக் கவுண்டர் களில் கணவாள குலத்தார்க்கே பாரியூர் அமரவிடங்கப் பெருமான் கோயில் உரிமை உடையதாக உள்ளது. இன்று பாரியூர் ஊர் இல்லை. கி.பி.1500 வாக்கில் உம்மத்தூர் நஞ்சராசன் கொடிவேரி அணை கட்டித் தடப்பள்ளி வாய்க்கால் வெட்டி நன்செய் உண்டாக்கிய

காரணத்தால் பாரியூர்க் கணவாளர்கள் குடியேறி புதியதாக ஊர் உண்டாக்கிப் புதுப்பாளையம் என்று பெயரிட்டுச் சீரும் சிறப்புடன் வாழ்ந்து வருகின்றனர். குடியேறிய பிற ஊர்களின் பெயரோடு கூட பாரியூரின் பெயரைச்சேர்த்துக் கொண்டு பாரியூர் வெள்ளாளபாளையம், பாரியூர் நஞ்சே கவுண்டம்பாளையம் என்றே குறிப்பர்.

வேளாளரிடம் அடைக்கலம் அடைந்த தரிசன செட்டி நீலியால் கொல்லப்படவே எழுபது வேளாளர்கள் தீப்பாய்ந்தனர். அவர்களில் ஒருவரான கணவாள குல நல்லய்யன் கொழுவால் கழுத்தை ஒடித்துத் தீப்பாய்ந்தார் என்று கம்பநாத சுவாமிகள் கொங்கு மண்டல சதகம் கூறுகிறது (24).

''முழுவார் வணிகற்கு நீலி பழிக்கு முதல்வன்என்று
கொழுவால் கழுத்தை ஒடித்தவன் காண்எள்ளுக்கு ஓர்பணிப்பில்
கிழைகண வாள கோத்திரன் நல்லய்யன் கீர்த்தியிலே
வழுவா நெருப்பினில் வீழ்வான் திருக்கொங்கு மண்டலமே''

என்பது சதகப்பாடலாகும்.

கணவாளர், பாரியூரான் என்றும் அழைக்கப்பெறுவர். கண்ணகுலம் என்று கூறுதலும் உண்டு. கண்ணகுலம் என்பது பூர்வீகக் காணி கண்ணபுரத்தைக் குறிக்கும் என்பர். இன்றும் கண்ணபுரத்தில் காங்கு வேளாளர் கணவாள குலத்தார் காணியாளராக உள்ளனர்.

**நரம்பர்**

வடகரைக் கவுண்டர்களை நரம்பர் என்று குறிக்கும் இரண்டு கல்வெட்டுகள் பெருந்தலையூரிலும், அந்தியூரிலும் கிடைத்துள்ளன. வடகரை நாட்டு அந்தியூரைச் சேர்ந்தவர் நரம்பர்களில் காமிண்டன் நாட்டுக் காமிண்டன் என்பவர். அவர் வீரபாண்டியனின் 11ஆம்

ஆட்சியாண்டில் அந்தியூர் செல்லீசுவரர் கோயிலிலும், சுந்தர பாண்டியனின் 22ஆம் ஆட்சியாண்டில் பெருந்தலையூர் திருமகிழ்வன முடையார் கோயிலிலும் சந்தியா தீபம் வைத்தார்.

இவர் வீரபாண்டியன் காலத்திலும், சுந்தரபாண்டியன் காலத்திலும் கொங்கு மண்டலத்தில் அரசு அதிகாரியாக விளங்கியுள்ளார் என்பது இவர் பெயர் அமைப்பு மூலம் தெரிகிறது.

இந்நரம்பர்களைப் பேச்சு வழக்கில் ''நரம்பு கட்டியர்'' என்பர். நரம்பு கட்டியர் என்பது நார்முடிக்கட்டியர் என்பதன் மரூஉ ஆகும் என்று பேராசிரியர் இரா.கா. மாணிக்கம் கூறுகிறார்.

''கொங்கர்'' என்று சங்க இலக்கியம் குறிப்பிடுவது நரம்பு கட்டிக் கவுண்டர்களையே என்று நல்.நடராசன் கூறுகிறார். ''குடகக் கொங்கர்'' என்று பண்டை இலக்கியம் கூறுவது வடகரைக்கவுண்டர் களையே என்று டி.எம்.காளியப்பா கூறியுள்ளார். இதை ஏற்றுக் கொண்ட பேராசிரியர் மாணிக்கம் குடகொங்கிலிருந்து கிழக்கு நோக்கி வந்துகுடியேறியவர்கள் வடகரையார் என்று கூறுகிறார்.

**அதிகர்-மழவர்**

காஞ்சிக்கூவல் நாட்டு உரிமையுடைய மக்களைக் குறிப்பிடும் பாடல் ஒன்றில் வடகரையார், மாழவர், அதிகர் எனக் குறிக்கப் பெறுகின்றனர்.

''வடகரையார் மாழவர்கள் மாண்பார் அதிகர்
நடவும் படையர் நலஞ்சேர் - புடவிஅவர்
சொந்தம் எனநினையும் தோன்றலர்க் கேநாடு
விந்தைதிகழ் காஞ்சிக்கூ வல்'

என்பது அதைக் குறிக்கும் பாடலாகும். மாழவர் என்பது மழவர் என்பதன் நீட்சியாகும்.

சேரர் வழி வந்தவரே அதியமான் ஆவர். உதியன்-அதியன் பெயரும் இதை உறுதிப்படுத்துகிறது. மழவர் தலைவனே அதியமான்

என்று கூறப்படுகிறார். மழவர் வாழ்ந்த கொங்கு மழகொங்கம் என்று கூறப்பட்டது. தகடூர் யாத்திரையில் புலவர் பெருஞ்சேரல் இரும்பொறையிடம் அதியமானை ''உன்தம்பி'' (நும்பி) என்றே கூறுகிறார். அதியர் கல்வெட்டில் பனைமரம் குறிக்கப்படுவதுடன் பனம்பூ மாலையும் அதியர் மரபினர்க்கு உரியதாக உள்ளது.

''அதிகர் என்பவர்கள் வடகரையாளரே' என்று பேராசிரியர் கு. அருணாசலக் கவுண்டர் கூறுகிறார். அதிகர்-மழவர் ஆகிய பழங்குடி களின் கலப்புச் சமூகமே வடகரையார் என்பதையும் பேராசிரியர் கு. அருணாசலக் கவுண்டர் கூறியுள்ளார்.

பாரியூருக்கு அளகை, அளகாபுரி என்றும் பெயர் உண்டு. அளகை குபேரனது நகராகும்.

''மாழவர்கள் கட்டியர்கள் மாண்புமிகு நார்முடியர்
ஈழமதை வென்றே எதிர்த்தவர்கள் - மாளக்
கனவாள் கைப்பிடிக்கும் கனஅதிகர் வாழ்வு
தனம்ஏறும் நல்அளகை தான்''

என்ற பாடலில் வரும் அளகை-பாரியூர் ஆகும்.

இப்பாடலில் மழவர், கட்டியர், நார்முடியர் முதலிய மூவரும் தங்கள் ''கனவாள்'' கொண்டு ஈழத்தை (இலங்கையை) வென்றார்கள் என்ற விவரம் கூறப்பட்டுள்ளது.

**நார்முடியர்**

இப்பாடலில் வடகரையார்க்கு நார்முடியர் என்ற பெயர் கூறப்பட்டுள்ளது. சேர மரபில் களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல் என்னும் மன்னர் பெயர் கூறப்படுகிறது. இவர் நார்முடியர் என்னும் கிளையைச் சேர்ந்தவராக இருக்கலாம். நார்முடியர்-கட்டியர் தொடர்பினால் ''நார்முடிக்கட்டியர்' என்ற சொல் உருவாகி நரம்புகட்டி என்றாகியிருக்கலாம் என்று பேராசிரியர் கு. அருணாசலக் கவுண்டர் கூறுகிறார்.

கட்டி நாட்டிலிருந்து வந்தமையால் நார்முடிக் கட்டியர் என்று பெயர் பெற்றிருக்கலாம் என வி. இராமமூர்த்தி கூறுகிறார்.

**கட்டியர்**

கட்டி, கட்டியர் பற்றிச் சங்க இலக்கியத்தில் பல இடங்களில் குறிப்பு வருகிறது. குறுந்தொகையில் ''பல்வேற்கட்டி நன்னாடு'' குறிக்கப்படுகிறது. இத்தொடருக்கு ''வல்வேற்கட்டி'' என்ற பாட பேதமும் உண்டு.

உறையூர் திதியன் மீது கட்டியரசன் படைஎடுத்தான். திதியனின் பிறந்தநாள் மங்கலத்தில் கொட்டப்பட்ட கருவிகளின் முழக்கம் கேட்டு கட்டியரசன் போர் செய்யாமல் திரும்பினான் என்று அகநானூறு கூறுகிறது. சோழனின் சேனைத் தலைவன் பழையனைச் சேர மன்னன் சார்பில் எதிர்த்த குறுநில மன்னர்களில் கட்டி என்பவரும் ஒருவர்.

சேரன் செங்குட்டுவனால் அடக்கி ஆளப்பட்டவர்களில் கட்டியர் என்பவரும் ஒருவர்.

''கொங்கணர் கலிங்கர் கொடுங்கரு நாடர்
பங்களர் கங்கர் பல்வேற் கட்டியர்
வட ஆரியரொடு வண்தமிழ் மயக்கம்''

என்பது சிலப்பதிகாரம்.

சங்க காலத்தில் போரடுதானைக் கட்டி, பல்வேற்கட்டி இவர்களோடு பிற்கால வேம்பன் கட்டி, இளமன்கட்டி, இம்முடிக் கட்டி, சீயாலகட்டி, வணங்காமுடிக் கட்டி இவர்களுக்கும் தொடர்பு இருக்கலாம்.

கட்டியர் சத்தியமங்கலம் பகுதியைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்தனர். கங்கர்கள் சத்தியமங்கலத்தின் மீது படையெடுக்கவே கட்டியர் கிழக்கு நோக்கி வந்து தாரமங்கலத்தில் குடியேறினர்.

கட்டியர் வம்சத்தின் இன்றைய மக்களே வடகரைக் கவுண்டர் எனப்படும் நார்முடிக் கட்டியர் எனக் கொள்ளலாம். தாரமங்கலம் கட்டியர் பெற்ற ''முதலி'' பட்டம் முதன்மையானவர் என்பதைக் குறிக்கும் சொல்லாகும். முதலியாக் கவுண்டர், முதலிக் காமிண்டன் என்ற பெயர்கள் கொங்கு நாட்டு வேளாளர் சிலரின் பட்டப் பெயர் களாகும்.

வடகரைக்கவுண்டரும் கொங்கு வேளாள கவுண்டரும் ஒரே பிரிவைச் சேர்ந்தவர்களே என்று நூறாண்டுகட்கு முன்பே ராஜாக் கவுண்டர் என்பார் கோபியில் மாநாடு கூட்டி அறிவித்தார் என்பர்.

இன்று வடகரைக் கவுண்டர்கள் ஆட்சி, கல்வி, சமயம், மருத்துவம், தொழில் துறைகளில் முன்னேறிச் சீரும் சிறப்புடனும் வாழ்ந்து வருகின்றனர். ஒட்டு மொத்தக் கொங்குச் சமுதாய முன்னேற்றத்திற்குப் பெரும் பங்களிப்பைச் செய்து வருகின்றனர்.

(விரிவான செய்திகட்கு கோபி பேராசிரியர் இரா.கா. மாணிக்கம் எழுதிய ''கொங்கு வடகரை வேளாளர் வரலாறும் வாழ்வியலும்'' என்ற நூலைக் காண்க).

## 4. பால வேளாள கவுண்டர்கள்

பிற்காலக் கல்வெட்டு, செப்பேடு பட்டயங்களில் வடபரிசார நாடு என வழங்கிய பண்டைய ஆறை நாட்டுப் பகுதியில் வாழும் கொங்கு வேளாளரில் ஒரு பிரிவினர் பால வேளாளர் என்று அழைக்கப்படுகின்றனர்.

இவர்கள் வாழ்ந்த பகுதி பாலை நிலத் தன்மையைப் பெற்றிருந்தமையால் இவர்கள் ''பாலை வேளாளர்'' என்று அழைக்கப்பட்டுப் பின் ''பாலவேளாளர்'' என்று பெயர் பெற்றனர் என்று சிலர் கூறுகின்றனர். இது பொருத்தமுடையதாகத் தெரியவில்லை. கொங்கு மண்டலத்தின் மற்ற பகுதிகளை விட ஆறை நாட்டுப் பகுதி வளமுடையதாகவே உள்ளது. எந்த ஆவணத்திலும் இவர்கள் ''பாலை வேளாளர்'' என்று குறிக்கப்படவில்லை.

பால் வளர்த்த கோமான்கள் என்று சிறப்பிக்கப்பட்ட இவர்கள் சோழநாட்டுப் பாலசேரி என்னும் ஊரைப் பூர்வீகமாகக் கொண்டவர்கள் என்றும் கூறுவர். பால வேளாளர்களின் தலைநகர் என்று கூறத்தக்க கவசை கோயில்பாளையத்தின் குடியேற்ற வரலாற்றைக் கூறும் சோழன் பூர்வ பட்டயம்,

> ''பதினெண் சாதிப் பலகுடியும் அழைத்து கவையன்
> புத்தூர் நகரிலும் கோவில் நகரிலும் குடிவைத்து அதில்
> உழவு குடியான பல குடிக்கும் முதன்மையாகச் சோழ
> தேசத்துப் பாலசேரி நகர் வேளாளரில் அப்பன்
> என்கிறவனை வைத்தார்''

என்று கூறுகிறது.

**மசக்காளி மன்றாடியார் ஓலைப்பட்டயம்**

''பாலநதியில் பரமானந்தக் கூத்தர் பரம கயிலாய வல்லியம்மன் பத்திரகாளி இருக்கும் தலத்தில் பாலகுல வங்கிஷ ஆதியாய்

இருந்தார்கள்'' என்று பட்டயம் கூறுகிறது. அப்பட்டயத்தில் குல முதல்வர்களில் ஒருவராகிய நயினா மன்னாடியார் கூற்றாக,

''எங்களுடைய மனுஷாள் பாலநதியிலும்
திருத்தவத் துறையிலும் இருக்கிறார்கள்''

என்ற தொடர் காணப்படுகிறது.

பால வேளாளரில் ஒற்றைச் சங்குப் பால வேளாளர், இரட்டைச் சங்குப் பாலவேளாளர் என இரண்டு பிரிவுகள் உண்டு. கவசை மசக்காளி மன்றாடியார் ஒற்றைச் சங்குப் பாலவேளாளர் ஆதலால் அவர்கள் ஓலைப் பட்டயத்தில் அவர்களைப் பற்றிய விவரம் மட்டும் கூறப்படுகிறது. ஒற்றைச்சங்குப் பால வேளாளரில் 18 குலத்தார் உள்ளனர்.

1. ஆதிக்க குலம்
2. கருந்துளி குலம்
3. கொத்தண்டியர் குலம்
4. கோட்டேறு குலம்
5. சாமைக்களத்தார் குலம்
6. சிட்ட குலம்
7. செம்ப குலம்
8. செந்துளி குலம்
9. புத்த குலம்
10. பில்ல குலம்
11. புலிய குலம்
12. மலைய குலம்
13. மாடை குலம்
14. முகுல குலம்
15. முருக குலம்
16. மோட்டம்பட்டியார் குலம்
17. வேம்ப குலம்
18. வரகுண்ணாப் பெருங்குடியர் குலம்

பால வேளாளர் சமூகம் பற்றி விரிவாக ஆய்வு செய்த என்.கே. இராமசாமி கருந்துளி, செந்துளி குலங்கள் மறைந்து விட்டன என்று கூறுகிறார். கொற்றந்தை குலம் என்ற பெயர் கொத்தண்டியர் குலமாகப் பெயர் மருவியிருக்கலாம் என்று என்.கே. இராமசாமியும், முனைவர் கு. முத்துக்குமாரும் கூறுகின்றனர். சாமைக் களத்தாரைச் சாமபுள்ளந்தி, புள்ளன் என்றும் கூறுவர். புலிய குலம் புலியூர்க் குலம் என்றும் கூறப்படும்.

வேம்ப குலத்திலிருந்து பிரிந்த நல்லாங் கூட்டத்தினர் நல்லாம் பாளையம், லிங்கனூர், போத்தம்பாளையம் ஆகிய ஊர்களில் வாழ் கின்றனர். பிறரால் காணி கைப்பற்றப்பட்ட போது தங்கள் குலதெய்வச் சிலையோடு காசி நஞ்சேகவுண்டம் புதூர் வந்த வேம்பகுலத்தார் இப்போது குலதெய்வக் கோயில் கட்டி வருகின்றனர்

இப்பதினெட்டுக் குலத்தார்க்கும் காணி, நாடு, ஊர்கள் பிரித்துக் கொடுக்கப்பட்டது என்று மசக்காளி மன்றாடியார் ஓலைப் பட்டயம் கூறுகிறது.

> ''வண்டி சூழ்ந்த ஆறு நாட்டுக்குள் பால வேளாளர் பதினெட்டுக் கோத்திரத்தாருக்கும் நானூற்றிப்பத்து நாடு எல்லைப் பிரிவு இன்ன கோத்திரத்தாருக்கு இத்தனை நாடு என்றும் நாட்டுப்பிரிவு எல்லைப் பிரிவு இதுவெல்லாம் செப்பேடு பட்டயம் பதினெட்டுக் கோத்திரத்தாருக்கு பதினெட்டுப் பட்டயமும் பட்டயத்தில் ஆதீன விபரமும் இருக்குது''

என்பது பட்டயப் பகுதியாகும்.

இப்பதினெட்டுக் குலத்தாருக்கும் குலதெய்வக் கோயில் எது, அக்கோயில் எந்த ஊரில் உள்ளது. அவ்வூர்களில் உள்ள உரிமை உடைய பிற கோயில்கள் எது என்பன போன்ற விபரம் என்.கே. இராமசாமியின் ''ஆறைநாடு வரலாறு'' என்னும் நூலில் கூறப்பட் டுள்ளது.

ஒற்றைச் சங்குப் பால வேளாளரில் கவசை - கோயில்பாளை யத்தில் மசக்காளி மன்றாடியார் மரபினர் பட்டக்காரர்களாக விளங்கினர். அவர்கள் சாமைக்களத்தார் குலத்தைச் சேர்ந்தவர்கள் அவர்கள் குன்னத்தூரில் கோட்டை கட்டி அங்குள்ள பட்டத்தரசி அம்மன் கோயிலைக் குல தெய்வமாகக் கொண்டு ஆட்சிபுரிந்தனர். கவசை கோயில்பாளையம் கவையகாளியம்மனையும் வணங்கினர். இராக்கிச மன்றாடியார் சோழனிடம் நாடு பெற்ற முதல் பட்டக்காரர் ஆவார்.

கவசை - கோயில்பாளையத்தில் இவர்கள் தமிழ்ச் சங்கம் வைத்துத் தமிழ்ப்புலவர்களை ஆதரித்த பெருமையுடையவர்கள். கொங்கு நாட்டில் வேளாளர்கள் திருமணங்களின்போது புலவர்கட்குக் கம்பர் நாளிலிருந்து கொடுத்து வந்த திருமண வரி இடையில் நின்று விட்டது. மசக்காளி மன்றாடியார் மீண்டும் அதை அமுல்படுத்தச் செய்து புகழ் பெற்றார். இவர் மரபினர்க்கு இம்முடிப் பட்டம் உண்டு. இவர்கள் ஆட்சிப் பகுதியில் 22 கோட்டைகள் இருந்தன என்றும், ஒவ்வொரு கோட்டையிலும் 100 வீரர்கள் இருந்தனர் என்றும் பட்டயம் கூறுகிறது.

பாலவேளாளர்கட்கு ஒரு காணிப்பாடல் உண்டு. பழனை (பெருமாநல்லூர்), கோனநகர் (கோயம்புத்தூர்), அழும்பில், கவசை (கோயில்பாளையம்), பதுவன்பள்ளி முதலிய ஊர்கள் காணியூர்கள் எனக் கூறப்படுகிறது.

''நற்பழனை கோனநகர் அழும்பில் சீர்கவசை
விற்பதுவன் பள்ளி மிகும்பலவூர் - அற்புமிகும்
பாலவே ளாளர் பதியும் காணியும்என்று
ஏலவே வைத்தார் எடுத்து''

என்பது காணிப்பாடலாகும்.

இரட்டைச் சங்குப் பாலவேளாளர்களில் களஞ்சியன் குலம், பைத்தலை குலம், வைத்தலை குலம், வெள்ளத்தலை குலம், குந்தவை குலம், மேல் மணியன் குலம் என ஆறு குலங்கள் உள்ளன. இவர்கட்கு இரட்டைச்சங்கு அணியும் உரிமையைப் புரவிபாளையம் பூலுவவேட்டுவப் பட்டக்காரர் கோப்பண மன்றாடியார் கொடுத்தார் என்று என்.கே. இராமசாமி கூறுகிறார். பால வேளாளரில் பெரும் பிரிவினர் ஒற்றைச்சங்குப் பாலவேளாளர் என்று அழைக்கப்படக் காரணமே அவர்களில் ஒரு பிரிவினர் இரட்டைச் சங்குப் பாலவேளாளர் என்று கூறப்படுவதனால்தான் என்பது தெளிவு.

இப்போது இவர்கள் சங்கு அணிவதில்லை. ஆனால் சீர்களில் சங்கு இடம் பெறுகிறது.

இரட்டைச் சங்குப் பாலவேளாளர் மரபில் சேவூர் என்னும் செம்பியன் கிழானடி நல்லூரில் சோழியாண்டாக் கவுண்டர் என்ற பெயரில் பட்டக்காரர்கள் நிர்வாகம் செய்துவந்தனர்.

இரட்டைச் சங்குப் பாலவேளாளர்கள் இராமநாதபுரம் மாவட்டம் திருவாடானை வட்டத்தில் உள்ள ''திருப்பாலைக்குடி'' என்னும் ஊரைப் பூர்வீகமாகக் கொண்டவர்கள் என்ற கருத்தும் உண்டு.

சோழியாண்டாக் கவுண்டர் மரபின் முன்னோர் குமார கவுண்டர். கரிகால் சோழன் சோழியாண்டாக் கவுண்டர் என்று பட்டம் கொடுத்து ஆட்சியில் அமர்த்தினார் என்பர்.

மங்கலம் என்ற இடத்தில் கட்டப்பட்ட நொய்யல் அணை நிற்க ஒரு சோழியாண்டாக் கவுண்டர் தன் மகனையே பலி கொடுத்தார். அவினாசிக் கோயிலில் இம்மரபினர் பல திருப்பணிகள் செய்துள்ளனர். மதுரை நாயக்கர் இவர்கள் ஆட்சிப் பகுதியைத் தங்கள் நிர்வாகத்தில் எடுத்துக் கொண்டனர்.

இம்மரபினர் காசிலிங்கம்பாளையம், குங்குமம்பாளையம், கரையாம்பாளையம், தத்தனூர், பட்டம்பாளையம், எம்மாம்பூண்டி, கெடாரை, நம்பியூர் ஆகிய ஊர்களில் வாழ்ந்து வருகின்றனர்

## 5. முடமாண்டார் கவுண்டர்கள்

''முடமாண்டார்'' என்ற சொல் தவறாக முடவாண்டி என உச்சரிக்கப்படுகிறது முடமாண்டார் கவுண்டர்கள் கோயமுத்தூர், பொள்ளாச்சி, திருப்பூர், அவினாசி, ஈரோடு, உடுமலைப்பேட்டை, கோபிசெட்டிபாளையம், காங்கயம், தாராபுரம், மேட்டூர், திருச்செங்கோடு ஆகிய வட்டங்களில் பரவலாக வாழ்ந்து வருகின்றனர்.

கொங்கு வேளாளர் சமூகத்தில் கை, கால் ஊனமுற்ற குழந்தைகளை ஒருங்கிணைத்து உருவாக்கப்பட்ட சமூகமே முடமாண்டார் கவுண்டர் சமூகம் ஆகும். கி.பி.17 ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட பட்டயத்தின் மூலம் கொங்கு வேளாளர் சமூகத்தின் உடல் ஊனமான குழந்தைகளைப் பாதுகாத்து வளர்ப்பதற்கென உரிமை பெற்ற சமூகமாக இவர்கள் இருந்துள்ளனர் என்பது தெரிகிறது. முடமான குழந்தைகளை வளர்க்கும் பணிக்காகப் பிற சமூகத்தாரிடம் உரிய வரி வசூலிக்கும் உரிமையை இவர்கள் பெற்றிருந்தனர்.

பட்டயத்தில் இவர்கள் தொடக்கமும் வளர்ச்சியும் கதை போல் கூறப்படுகிறது.

''வெண்ணைநல்லூர் சாத்தந்தை குலத்தைச் சேர்ந்தவரான சடையப்ப வள்ளல் உடல் ஊனமுற்ற தன் குழந்தையைத் தங்கப் பேழையில் வைத்து ஆற்றில் விட்டுவிட்டார். மன்னன் சமுத்திர ராயரும், அமைச்சர் துளுவ நாயக்கரும் ஆற்றில் வரும் பேழையைக் கண்டனர். மன்னர் பேழையின் அழகைக் கண்டு அது தனக்கென்றார். அமைச்சர் உள்ளிருப்பது தனக்கு என்றார்.

பேழையைத் திறந்து பார்க்க உடல் ஊனமுற்ற குழந்தை இருந்தது. தான் கூறியபடி அமைச்சர் அக்குழந்தையை வளர்த்தார். மன்னர் அக்குழந்தையை வளர்க்கவும், இதுபோன்று உடல் ஊனமுற்ற எல்லாக் குழந்தைகளை வளர்க்கவும் சோழனூர், உம்பளத்தம்,

செம்பத்தொழு, புன்னைமேடு, கோட்டூர், ஆண்டாவந்தி, சத்திமங்கலம் ஆகிய ஏழு ஊர்களைக் கொடையாகக் கொடுத்தார். இவ்வூர்களில் உள்ள வேளாளர்கள் பட்டிக்கு ஒரு பணமும், வீட்டுக்கு எட்டு வள்ளத் தானியமும் கொடுக்க வேண்டும். கொங்கு வேட்டுவர், இடையர், செட்டியார், புலவர், காவலியர், பூவலியர், சாணார், குயவர், பறையர் ஆகியோரும் குறிப்பிட்ட வரி கொடுக்க வேண்டும்''.

இவ்வரிகள் பூந்துறையை அடுத்துள்ள சத்திமங்கலம் என்ற ஊரில் ஏற்படுத்தப்பட்டுள்ள முடவர் காப்பு நிலையத்திற்கு அளிக்க வேண்டும்.

மன்னர் சமுத்திரராயர், அமைச்சர் துளுவ நாயக்கருக்குப் பதிலாக மாமன் மைத்துணன் இருவர் பேழையைக் கண்டு எடுத்தனர் என்ற கதையும் உண்டு. இப்பட்டயம் கூறுவது கற்பனைச் செய்தியே. முடவர் காப்பு நிலையம் ஏற்படுத்தி ஏழு ஊர்களைக் கொடையாகக் கொடுத்தவர் பூந்துறையில் வாழ்ந்த காடைகுல வாரணவாசிக் கவுண்டரேயாவார்.

கி.பி.1850 வரை இம்முடவர் காப்பகம் சத்திமங்கலம் என்ற ஊரில் (இப்போதைய கஸ்பா பேட்டை) இயங்கியது. கம்பெனியார் நிலங்களைத் தாங்கள் எடுத்துக்கொண்டு நிதி கொடுத்தனர். பின் காப்பகத்தைக் கோவைக்கு மாற்றி லங்கர்கானா என்ற பெயரில் இயங்கச் செய்தனர். காலப்போக்கில் காப்பகம் மறைந்தது. கஸ்பா பேட்டையின் வருவாய்த் துறைப் பெயர் மொடவாண்டி சத்திமங்கலம் சுருக்கமாக எம்.எஸ்.மங்கலம் என்று குறிக்கப்படு கிறது.

எட்கார் தர்ஸ்டன் என்பவர் முடமாண்டார் பற்றிய தகவலைக் கூறுகிறார் ''முடமான குழந்தைகள் உள்ள வீட்டை அறிந்து கொள்வர். குழந்தை வீட்டை விட்டு வெளியே வரும்வரை மறைந்திருப்பர். வந்தபின் அக்குழந்தை மீது எச்சிலைத் துப்பித்

தங்களுக்குச் சொந்தமாக்கி எடுத்துச் செல்வர். பிற்காலத்தில் எச்சில் துப்பும் வழக்கம் மறைந்து சிவப்புத் துணியைக் கட்டும் வழக்கம் வந்தது. அக்குழந்தையை வண்டியில் ஏற்றிக்கொண்டு வளர்க்கத் தேவையான பணமும் தானியமும் பெற்றுச் செல்வர். அக்குழந்தை யைத் தன் வாரிசாகவே கருதி வளர்ப்பர்'' என்று கூறுகிறார்.

முடமாண்டார் கவுண்டர்கள் என்ற பிரிவு உருவானது கொங்கு வரலாற்றில் மிக முக்கியமானதாகும். கொங்கு வேளாளர்கள் தமக்குப் பிறக்கும் முடமான குழந்தைகளைப் பேணி வளர்க்க ஒருங்கிணைந்து முடமாண்டார்களை உருவாக்கினர். இவர்கள் தொடர்ந்து கொங்கு வேளாளர்களின் முடமான குழந்தைகளை எடுத்து வளர்க்கும் சீரிய பணியில் இருந்துள்ளனர். அதற்குரிய வரிப்பணத்தையும் பெற்று அப்பணியைச் செய்துள்ளனர். அன்பும், அருளும், கருணையும் காட்டி சேவையில் ஈடுபட்ட சமூகமே முடமாண்டார் கவுண்டர்கள் சமூகம் ஆவர்.

இவர்கள் கொங்கு வேளாளர் சமூகத்தவர்களேயாவர். எந்த வகையிலும் இவர்களை முடவாண்டிகள் என்று கூறுவதோ வேளாளர் களைத் விடத் தாழ்ந்தவர்கள் என்று கருதுவதோ பேதமையாகும்.

பழைய கோட்டைப் பட்டக்காரர் நல்லதம்பிச் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார் (26 ஆம் பட்டம் 1886-1945) அவர்கள், முன்னாள் அமைச்சர் ப. குழந்தைவேலு (1977-1984) அவர்களின் தந்தை பழனிசாமிக்கவுண்டருக்கு அளித்த சான்றிதழ் ஒன்றில் ''நீங்கள் எல்லாம் எங்கள் வீட்டுப் பிள்ளைகள்'' என எழுதியதாகப் பொள்ளாச்சி வரலாற்றுப் பேராசிரியர் எஸ்.பி.கந்தசாமி கூறினார். ப.குழந்தைவேலு 1984ல் கோபி தொகுதி நாடாளுமன்ற உறுப்பினராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

இன்று வேளாண்மை, தொழில் வளர்ச்சி, பலதுறைப் பணிகள் ஆகியவற்றில் முன்னேறியுள்ள முடமாண்டார் சமூகத்தினர் இப்

பழைய பெயரைக் குறிக்க விரும்பாமல் சிலர் ''வளர்கொங்கு வேளாளர்'' என்று அழைத்துக்கொள்கின்றனர்.

வரலாறு அறியாத சில கொங்கு வேளாளர்கள் இவர்களை ''முடவாண்டிகள்'' எனக் கூறுவதால் இச்சமூகத்தினர் பலர் ''துளுவவேளாளர்'' என்று சான்றிதழ் பெற்றுக் கொள்கின்றனர். துளுவ நாயக்கர் எடுத்து வளர்த்ததாகப் பட்டயம் கூறுவதும் கருதத்தக்கது. கொங்கு வேளாளர் சமுதாயத்திற்கு முடமாண்டார் கவுண்டர்கள் செய்த சேவைகளை மறக்கக்கூடாது, நன்றியுடன் எண்ணிப் பார்க்க வேண்டும். சமூக நீதிக்காகவும், கல்வி, வேலை வாய்ப்புக்காகவும் மிகவும் பிற்படுத்தப்பட்ட வகுப்பினராகத் தங்களை அறிவிக்க வேண்டும் என்று அரசுக்குக் கோரிக்கை வைத்துள்ளனர் (தகவல், கோவை காந்திபுரம் அங்கமுத்துக் கவுண்டர்).

1951 ஆம் வருடம் அவினாசியில் மாநாடு கூட்டித் ''தங்களை முடவாண்டிகள் என அழைக்கக்கூடாது'' என்று தீர்மானம் நிறை வேற்றினர்.

சிலர் 'பிள்ளை' என்று குறிப்பர். 1962ல் பொள்ளாச்சி நகர் மன்றத் தேர்தலில் நின்ற ஒருவர் ''கண்ணுப்பிள்ளை என்ற கண்ணுச் சாமிக் கவுண்டர்'' என விளம்பரம் செய்தார்.

முடமாண்டார் கவுண்டர்களில் பயிரன், பில்லன், பொதியன், காடை குலம் போன்று 71 குலங்கள் உள்ளன. அழகு நாச்சியம்மன், அங்காளம்மன், கரியகாளியம்மன், அண்ணன்மார் சுவாமி ஆகியோரை வணங்கி வருகின்றனர். கொங்கு வேளாளர்களின் அனைத்துச் சடங்குகளையும் குறைவின்றி முடமாண்டார் கவுண்டர்கள் பின்பற்றி வருகின்றனர்.

ஒரு ஊரில் கொங்கு வேளாளர்களும், முடமாண்டார் கவுண்டர் களும் வாழ்ந்தால் இருவருக்கும் ஒரே குலமாக இருந்தால் பங்காளிகள்

என்றும், வேறு குலமாக இருந்தால் மாமன், மாப்பிள்ளை என்றும் அழைத்துக் கொள்கின்றனர். கொள்வினை கொடுப்பினை மட்டும் இல்லை. கோவை ஒத்தக்கால் மண்டபம் அருகேயுள்ள தம்பாக் கவுண்டன் புதூரில் 18 முடமாண்டார் குடும்பங்கள் இருப்பதாகவும் அங்கு மேற்கூறிய உறவு முறையில் இரு சமூகத்தவரும் இணைந்து வாழ்வதாகவும் ஆய்வாளர் முனைவர். கு. முத்துக்குமார் அவர்கள் கூறியுள்ளார்கள்.

## 6. திருமுடிக் கவுண்டர்கள்

கொங்கு வேளாளர்களில் ஒரு பிரிவினரான ''திருமுடிக் கவுண்டர்கள்'' அல்லது ''திருமுடி வேளாளர்கள்'' என்போர் கொடுமுடியை மையமாகக் கொண்டு வாழ்ந்து பின் அதன் சுற்று வட்டாரத்திலும் பரவியுள்ளனர்.

முடிசூடும் மன்னர்கட்குரிய ''திருமுடிகளை'' (கிரீடங்களை) பதுகாத்த மரபினர் திருமுடிக் கவுண்டர்கள் என்று பெயர் பெற்றதாக நல். நடராசன் கூறியுள்ளார்.

இவர்கள் கடையெழு வள்ளல்களில் ஒருவரும், திருக்கோவி லூரை ஆண்டவருமான மலையமான் திருமுடிக் காரி வழியில் வந்தவர்கள் என்றும் கூறுவர். மலையமான் திருமுடிக்காரி தன் வெற்றியின் நினைவாகக் கொடுமுடியில் ''மலையம்மன்'' கோயில் கட்டியதாகவும் கூறுவர். கொடுமுடியில் உள்ள திருமுடிக் கவுண்டர்கள் இக்கோயிலை வழிபடும் காரணமாகத் தங்களை ''மலையம்மன் கூட்டம்'' என்று அழைத்துக் கொள்வதாகவும் நல். நடராசன் கூறி யுள்ளார்.

கொடுமுடி கொங்கு நாட்டின் ஏழு தேவாரத் தலங்களில் ஒன்று. தேவாரம் பாடிய மூவரும், மாணிக்கவாசகரும் பாடிய ஒரே கொங்கு நாட்டுத் தலம் கொடுமுடியே. கறையூர் அல்லது கறசை என்பது ஊர்ப் பெயராகவும், ''பாண்டிக் கொடுமுடி'' என்பது கோயில் பெயராகவும் வழங்கியது.

கொங்கு வேளாளர்களில் ஒரு சாரார் கொடுமுடி மகுடலிங்கர் ஆலயத்தின் மீது பக்திபூண்டு இறைபணியாற்றி வந்தனர். அப்பணி ஊதியத்தின் பொருட்டுச் செய்யப்பட்ட தொழில் அல்ல. பக்தி மேலீட்டால் விரும்பி அவர்களாகவே மேற்கொண்ட தெய்வீகப் பணியாகும்.

திருக்கோயில் விக்கிரகங்களைப் ''படிமம்'' என்று அழைக்காமல் ''திருவெம்படிமம்'' என்பர். திருவிழாக் காலங்களில் எழுந்தருளும் திருமேனியான திருவெம்படிமங்களைத் தாங்குதல் மிகப் பெரும் பேறாகவும், புண்ணியமாகவும் கருதப்பட்டது. ''ஸ்ரீபாதம் தாங்குதல்'' என்று அப்பணி கல்வெட்டுகளில் மிகச் சிறப்பித்துக் கூறப்பெறும். கோயில் பணிகளில் மிகச் சிறந்ததான திருவெம்படிமத்தைத் தாங்கும் பேறு பெற்ற கொடுமுடிக் கொங்கு வேளாளர்கள் ''திருவெம்படிம குலம்'' என்று அழைக்கப்பட்டனர். கொங்கு வேளாளர் குலங்களில் காடை குலம் முதலிய ஏழு குலத்தார் அவ்வாறு அழைக்கப்பட்டனர். திருவெம்படிம வேளாளர் என்ற பெயர்தான் மருவி நாளடைவில் ''திருமுடி வேளாளர்'' என்றும், ''திருமுடிக் கவுண்டர்'' என்றும் அழைக்கப்பட்டனர் என்று கூறுவர்.

கொடுமுடித் தல புராணத்தில் ஒரு சருக்கமான அங்க வருத்தனச் சருக்கத்தில் கொடுமுடியில் உள்ள பல்வேறு சமூகம் சார்ந்த மக்களின் இல்லங்கள் வருணித்துக் கூறப்பட்டுள்ளன. அப் பகுதியில் கூறப்பட்டுள்ள

''விடம்பயில் களற்குத்தம் குலத்து மின்னனார்
நடம்பயில் கணிகைமா ராக நல்கிநீர்
இடம்பயில் புவியில்நீடு இசைநி றுத்திவாழ்
திடம்பெறு சதுர்த்தர்தம் சிறந்த இல்லமும்''

என்ற பாடல் திருமுடிக் கவுண்டர் இல்லங்களைக் குறிக்கும் என்று எழுமாத்தூர் வேலம்பாளையம் முதுபெரும் தமிழ்ப் புலவரும், கொடுமுடியில் தமிழாசிரியராகப் பணிபுரிந்தவரும், கொடுமுடிப் புராண வசனம் எழுதியவரும், கொடுமுடி பற்றிச் சில சிற்றிலக் கியங்கள் இயற்றியவருமான வே.ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர் அவர்கள் தம் கொங்கு மண்டல சதகக் குறிப்பில் எழுதியுள்ளார்கள்.

கொடுமுடியில் திருமுடி வேளாளரில் நல்லண கவுண்டர் என்பவர் வாழ்ந்து வந்தார். செல்வந்தரான அவர் ஈகையிற் சிறந்தவராகவும், புலவர் பெருமக்களைப் பேணிப் புரந்தவராகவும் இருந்திருக்க வேண்டும். அவர் புகழ் எங்கும் பரவியிருக்க வேண்டும். பண்பு நலன் மிக்க சான்றோராக அவர் விளங்கியிருக்க வேண்டும். அதனால்தான் கொங்கு மண்டல சதகம் பாடியவர்களில் ஒருவரான கம்பநாதசுவாமிகள் தம் சதகத்தில் ''கொடுமுடியில் நல்லவன் வாழும் கொங்கு மண்டலம்'' என்று சிறப்பிக்கிறார்.

''வேளும் கயலும் திருவும் பிறையும் விதவிதமாய்
ஆளும் கமல நதியும்கா வேரியும் அன்றுசிவன்
ஏழும் குலமும் திருவெம் படியிவன் ஏழுலகும்
வாழும் கறைசையில் நல்லவன் வாழ்கொங்கு மண்டலமே''

என்பது கம்பநாத சுவாமிகளின் கொங்கு மண்டல சதகப் பாடலாகும்.

பெரும்புலவர் வே.ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர் இப்பாடலுக்குக் கீழ்க்கண்டவாறு விளக்கம் எழுதியுள்ளார்.

''வேள் - மன்மதன், உயிர்கட்கு இன்பம் தருபவன். வேள் முதலிய ஏழும் பூமியில் சிறந்து விளங்குகின்றன. அதுபோல கொடுமுடியில் சிவனுக்குத் தொண்டு செய்து வாழும் ஏழு குலத்துத் திருவெம்படிவ குலமும் ஏழு உலகத்தாரும் போற்ற வாழ்கின்றனர் என்பதாம்.

திருவெம்படிவம் என்பது மகுடலிங்கற்குத் திருத்தொண்டு செய்து வாழும் குலம். சிவன் ஏழ்குலம் என்றது சிவனுக்குத் திருத்தொண்டு புரியும் காடை முதலிய ஏழு கொத்துத் திருவெம்படிவர்கள் என்பதாம். இவர்கள் வேளாளர் குலத்தினர்'' என்பவை வே.ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர் அவர்கள் எழுதிய குறிப்பாகும்.இசை இமயம் கே.பி.சுந்தராம்பாள் இம்மரபினர் ஆவார்.

# 7. மலைக் கவுண்டர்கள்

மலைக் கவுண்டர்களை மலை வேளாளர், மலையாளிக் கவுண்டர் என்றும் அழைப்பர். சத்தியமங்கலம் வட்டம் கடம்பூர் மலைப் பகுதியிலும், மல்லியம்மன் துர்க்கப் பகுதியிலும் வாழும் மலைவாழ் மக்கள் இவ்வாறு அழைக்கப்படுகின்றனர்.

எக்கத்தூர், குன்றி, பாலமலை, பச்சைமலை, கரளயம், இருட்டிபாளையம், காலட்டி, கடம்பூர், தொண்டூர், நடூர், பவளக்குட்டை, அந்தியூர்புதூர் ஆகிய இடங்களில் பரவலாக வாழ்கின்றனர். அன்னியர் படையெடுப்பும், கலகக்காரர் தொல்லையும், திருடர்கள் செயல்களும் இவர்களைச் சமவெளி யிலிருந்து மலை நோக்கிச் செல்லச் செய்தது.

பழம்பாடல் ஒன்று,

''கதிர்இரவி இலகுபுகழ் கொங்குதே சம்தனில்
கள்ளர் வடுகர்தொழுவர்
கனபவிசு கூடியே அனுதினம் கொள்ளையும்
கலகம்இப் படிநடக்கவே

கன்றுகா லித்திரள்கள் தாலிபறி சேலைபறி
கனகொள்ளை தான்குடுத்துக்
கஷ்டப் படும்துயரம் போறாமல் சனம்எலாம்
கனமலைகள் தான்நடந்தார்''

என்று கொங்கு மக்கள் மலை நோக்கிச் சென்றதற்குக் காரணங்களை விளக்கமாகக் கூறுகிறது.

மலையில் கால்நடை வளர்த்தல், மலை வேளாண்மை, வனப் பொருட்கள் சேகரித்தல் முதலிய தொழில்களைச் செய்து வருகின்றனர். கடம்பூர் மலைப்பகுதியில் சுமார் பத்தாயிரம் பேர் வாழ்கின்றனர். இவர்கள் பேசும் தமிழ் கொஞ்சம் வேறுபட்டுள்ளது. இதற்கு மலை மக்கள் தொடர்பு ஒரு காரணமாக இருக்கலாம்.

இவர்களிடையே செம்பங் கூட்டம், சென்ன கூட்டம், பவள கூட்டம், கீர கூட்டம், சீரங்கன் கூட்டம், எருமை கூட்டம், குண்டலியான் கூட்டம், வெள்ளெலியான் கூட்டம், கண்டராதித்தன் கூட்டம் எனப் பல கூட்டங்கள் உள்ளன. கண்டராதித்தன் கூட்டம் காடைக் குருவியை உண்பதில்லை. எனவே இவர்கள் காடை குலத்தோடு தொடர்புடையவர்களாக இருக்கலாம். கடம்ப கூட்டம், அரட்டையாண்டி கூட்டம் எனச் சுமார் 20 கூட்டப் பிரிவுகள் உள்ளன.

கொங்கு வேளாளர் தாலியைப் போலவே சிறு தாலி அணிகின்றனர். முருகன், பத்திரகாளி, மலையம்மன், ஆயிஅம்மன், பெருமாள் முதலிய தெய்வங்களை வணங்குகின்றனர். மணமகன் பெண்ணுக்கு நகையும், பெண் வீட்டார்க்குப் பணமும் கொடுத்து பெண் வீட்டில் பெண்ணை மணம் செய்து கொள்கிறான். பெரும்பான்மையான கூட்டத்தாரே ஊர்க் கவுண்டர், பட்டக்காரர் ஆக உள்ளனர். மணமகன் வீட்டாரின் பரியப் பணம் பெண்ணின் தாய்மாமனைச் சேர்ந்தது. இறுதிச் சடங்கு முழுவதும் கொங்கு வேளாளர் சடங்குகள் போன்றவை. (தகவல் உதவி முனைவர் கு. முத்துக்குமார், கோவை).

மலை வேளாளர்கள் மலைக்கவுண்டர்கள் என்றும் அழைக்கப் பெறுகின்றனர். கொல்லிமலையில் வாழும் மலையாளிக் கவுண்டர்கள் எனப்படுவோரில் அருவங்காடு, செம்மேடு பகுதியில் வாழ்பவர்களில் கொங்கு வேளாளர்களின் தாக்கம் இருப்பதாகக் கருதுகின்றனர். அங்குள்ள மலையாளிக் கவுண்டர்கள் பலர் பூர்வீகமாக அங்கேயே பல்லாண்டுக் காலமாக வாழ்பவராக இருக்கலாம்.

## 8. குறும்ப கவுண்டர்கள்

கொங்கு வேளாளரில் ஒரு பிரிவினர் குறும்ப கவுண்டர் என அழைக்கப்படுகின்றனர். கொங்கு நாடெங்கும் பரவலாக வாழ்ந்து வரும் இவர்கள் தொழில் கால்நடை மேய்த்துக் காத்தல் என்பர். குறிப்பாக ஆடுகளில் குறும்பையாடுகள் இவர்கள் செல்வம் என்பர். கொங்கு மண்டலப் பிரிவில் தொன்மையானதாகக் கருதப்படும் குறுப்பு நாட்டைக் குறும்பு நாடு என்றும் கூறுவர்.

''கொங்கில் குறும்பில் குரக்குத் தளியாய்'' என்பது சுந்தரர் தேவாரம். குறும்பு நாடே குறுப்பு நாடாக மாறிற்று என்பர். குறும்பு நாடே குறும்ப கவுண்டர்களின் பூர்வீக நாடாக இருக்கலாம்.

குறும்ப கவுண்டர்கள் பற்றி ஒரு கல்வெட்டும், ஒரு செப்பேடும் கிடைத்துள்ளது. கொங்கு வடகரை நாட்டில் சிலம்பூர் என்னும் ஊரில் பந்தீசுவரமுடையார் கோயில் என்னும் சிவாலயம் மாலிக்காபூர் படையெடுப்பின் போது பெரும் பாதிப்புக்கு உள்ளாகி அழிந்து கிடந்தது, அந்த அழிவுகளையெல்லாம் மூன்றாம் வீரவல்லாளன் என்னும் போசள மன்னன் காலத்தில் சிலம்பூர்க் காணியாளர்களான குறும்ப கவுண்டர்கள் சிலர் திருத்தி கோயில் பூசை தொடர்ந்து நடைபெறக் கொடையும் விட்டனர். கல்வெட்டு ''இறங்கலாய்க் கிடக்கையில் இறங்கல் மீட்டு'' என்று கூறுகிறது.

திருப்பணி செய்த குறும்ப கவுண்டர்கள் வம்மகவுண்டர் மகன் ரவிபந்தன், இவர் தம்பி ராசாக்கவுண்டர், இவர் தம்பி சொன்ன கவுண்டர், இவர் மகன் பெரியப்பன் குப்பன், பெரியமாரு, பெரிய மகபூதன், கரிராமன் ராமகவுண்டர் என்போர் ஆவர். இக்கல்வெட்டை எழுதியவர் பந்தியப்பன் என்பவர்.

குறும்பகவுண்டர் இல்லங்களில் நன்மை, தீமை நிகழ்ச்சிகள் எதுவாயினும் வந்து அந்நிகழ்ச்சிக்குரிய பாடல்கள் பாடுபவர் சிக்கணன் என்பவர். அவருக்குப் ''பாடுவார் சிக்கணன் ''என்றே பெயர் வழங்கியது. பாடுவார் சிக்கணன் ஒரு வழக்கில் வெற்றி

பெற்றார். அதனால் மகிழ்ந்த குறும்ப கவுண்டர்கள் வருடந்தோறும் ஊருக்கு ஒரு பணமும், குடிக்கு வருடம் ஒரு ஆட்டு மயிரும், மூன்றாண்டுக்கு ஒரு ஆட்டுக்கிடாயும், திருமணத்திற்கு ஒரு பணமும் அவருக்குக் கொடுக்க இசைந்தனர்.

நிகழ்ச்சிகளில் வந்து பாடத் தவறினால் பாடுவார் சிக்கணனுக்கு அபராதம் விதிக்கப்படும் என்று கூறப்பட்டுள்ளது.

இதனை ஒரு செப்பேடாக எழுதித் தந்தனர். அதற்காகப் பெருமாநல்லூரில் கூடியவர்கள் பெயர்களைச் செப்பேடு விரிவாகக் கூறுகிறது. அதன்மூலம் குறும்பகவுண்டர்கள் வாழும் ஊர்கள் விபரம் தெரிகிறது.

சேவூர் கசவணன், நல்லணன்
அன்னியூர் தாசக்கவுண்டன்
மேல்முடுதுறை ராவுளகவுண்டன்
வெள்ளாதி மாரப்பகவுண்டன்
காமரசநல்லூர் காளப்பகவுண்டன்
ஆலத்துக்கோம்பை கண்ணப்பன்
செம்பகபுத்தூர் ராமகவுண்டன்
மாக்கணாங்கோம்பை சிங்கணகவுண்டன்
தத்தப்பள்ளி காளப்பகவுண்டன்
தணாயக்கன் கோட்டை தேனாக்கவுண்டன்
குடுவாய் பரிசகவுண்டன்
நெடுங்கல்லு நெடுமாறன்
மோதளைத்துறை மொச்சகவுண்டன்
மச்சயம் லிங்கணன்
மங்கலம் மல்லணன்
கோரையாறு நாகணன்
பெருமாநல்லூர் சளப்பகவுண்டன், புட்டணகவுண்டன், சென்னியப்பன், மாக்கணன், அரியபிராட்டி பிராண கவுண்டன், ராவுள கவுண்டன்

மல்லகவுண்டன்
சித்தூர் நஞ்சகவுண்டன்
மளப்பாடி திம்மப்பன், சிக்கணகவுண்டன்
சூலூர் கவுண்டிகுப்பை காளப்பன்
தொண்டாம்புத்தூர் கரியணகவுண்டன்
செஞ்சேரி லக்குமணன்
வீரபாண்டி ராமணன்
திருப்பூர் சிக்கணன்
அல்லாளம் ராமணகவுண்டன், பெரிய மொட்டணன்
சடைச்சேரி ராக்கணகவுண்டன்
எண்ணமங்கலம் கவணன்
தாராபுரம் நாகணகவுண்டன்
அந்தூர் நல்லணகவுண்டன்
மாமுத்தூர் திருமணகவுண்டன்
பெருமுகை சித்தணன்
நாகூர் தாசணன்
அரக்கோட்டை திருணன்
தாராபுரம் அம்மாள்பூசாரி திப்பணன்
கப்பளாங்கரை பூசாரி வீரன்
கொத்தமங்கலத்து மகாணன்
ஆரில்குறள் பயக்கணன், தப்பண லிங்கணன்
கோல்கார லிங்குமணன்
வடபளி மல்லைகவுண்டன்
பனையடிப்பட்டி திம்மப்பகவுண்டன், நஞ்சையகவுண்டன்
அல்லாளபுரத்து ராமணகவுண்டன்
தடப்பள்ளி திருமணகவுண்டன்
கூடுவாய் பரிசை கவுண்டன்
நடுச்சேரி ராக்கவுண்டன்

மோட்டம்பட்டி சென்னியப்பன்
அவலப்பன்பட்டி சின்னணன்
நெகமத்துக் கரியணன்
தென்பள்ளி பட்டன்
மருதூரு மூலையகவுண்டன்
கெம்பாடி சிங்க கவுண்டன், புட்டண கவுண்டன்
தவிரூர் தாசண்டன்
மாமரத்தூர் காழணன்

## 9. பாலக்காட்டு மன்னாடியார்கள்

கேரள மாநிலத்துப் பாலக்காடு மாவட்டத்தில் பாலக்காடு, கொல்லங்கோடு, சித்தூர், ஆலத்தூர் வட்டங்களில் பரவலாக வாழும் மன்னாடியார் அனைவரும் கொங்கு வேளாளர்களேயாவர்.

பாலக்காடு மாவட்டம் மட்டும் அல்ல கேரள மாநிலத்தின் பிற பகுதிகள் சிலவற்றிலும் கூட கொங்கு வேளாளர்கட்குத் தொடர்பு பன்னெடுங்காலமாக உண்டு. கொங்கு நாட்டுப் பாளையக்காரர் - பட்டக்காரர் வம்சாவளி ஆவணம் அனைத்திலும் சேரன் மகனை மணம் செய்து கொண்ட தன்மகளுக்குச் சோழன் 8000 வேளாளர் களைச் சீதனமாகக் கொடுத்த விபரம் கூறப்பட்டுள்ளது.

வேளாளர் வரலாறு கூறும் மேழிவிளக்கம் நூலின் ஆசிரியர் சரவணய்யா வேளாளர் காணி பெற்று வாழும் ஊர்களைப் பட்டிய லிடும் போது

''நல்ல மலையாள நாடுகொச்சி கொல்லம்
கோழிக் கோடு கொடுவாய் பாலக்காடு''

என்று கூறுகிறார். வேளாளர்கட்குப் புதியதாகக் கொடுக்கப்பட்ட பகுதிகளைப் பற்றிக் கூறும் போது,

''பட்டாம்பி என்னும் பரவைநதி யார்பிறந்த
எட்டாறு சூழுலகம் ஈந்தனர்காண்''

என்று கூறுகிறார். ''பட்டாம்பி'' என்பது பாலக்காடு மாவட்டத்தில் உள்ள ஒரு ஊராகும். அப்பெயரில் ஆறு ஒன்றும் உண்டு. பட்டாம்பி என்றால் பத்து ஆறுகள் என்பது பொருள். பத்து ஆறுகள் கூடியதே பட்டாம்பியாறு. அவை வாளையாறு, கோரையாறு, மணலியாறு, சித்தூராறு, மலம்புழையாறு, கரும்புழையாறு, திருப்பாலூர் ஆறு, முடப்பாலூர் ஆறு, சிற்றியப்பள்ளியாறு, கல்பாத்தியாறு, வரட்டாறு என்பனவாம். இப்பத்து ஆறுகள் ஓடும்பகுதியில் எட்டு ஆறுகள் ஓடும்

பகுதியைப் புதுக் காணியாகக் கொங்கு வேளாளர்கட்குக் கொடுத்தனர் என்பது இப்பாடலின் பொருளாகும்.

கொடுமணலில் கிடைத்த நாச்சிமுத்துப் புலவர் ஓலைப் பட்டயத்தில் கொங்கு மண்டலத்தின் மேற்கு எல்லை 'வாளையாறு' என்று கூறுகிறது. களப்பிரர் சிறையிலிருந்த மூவேந்தரை விடுதலை செய்த மூலனூர்ப் பூசகுலத் தொண்டைமானுக்கு அளித்த நிலக்கொடைப் பகுதியில் 'வாளையாறு' அடங்கியுள்ளதென அவர்கள் மரபுப்பாடல் கூறுகிறது.

கடத்தூர்ச் சிவாலயக் கல்வெட்டில் (கி.பி.1229) ''பாலைக் காட்டுச் சேரியில் வெள்ளாளன் குமரங் குமரனான தனஞ்செயப் பல்லவரையன்'' என்பவர் குறிக்கப் பெறுகிறார்.

கொண்டி செட்டிப்பட்டியில் உள்ள பெருங்குடி குலத்துக் குலதெய்வம் காளியம்மனின் ஊஞ்சல் பாட்டில் கங்கை குலப் பெருங்குடியார் சேரநாட்டில் வந்து தோன்றியதாகக் கூறப் பட்டுள்ளது.

கொங்கு வேளாளர் மரபைச் சேர்ந்த தன் படைத் தலைவர்க்குச் சேரன் வானவராயன் என்று பட்டம் கொடுத்துள்ளார் என வி.இராம மூர்த்தி கூறியுள்ளார். 1892ஆம் ஆண்டு தாமஸ் மன்றோ எழுதிய குறிப்பொன்றில் மன்னாடியார்கள் அனைவரும் கொங்கு நாட்டுப் பாளையக்காரர் வழியினர் என்று கூறியுள்ளார்.

நல்லே பள்ளியில் சுணங்கியம்மன் (சொர்னாங்கி அம்மன்-பொன்காளியம்மன்) திருவிழாவில் பாடப்படும் நீண்ட தமிழ்ப் பாடலில்,

''கங்கைகுல தீரராம் முப்பத்திரண்டு வேளாளர்
இங்கிதம தாகவே சோண்டத்தில் வளர்கின்ற
கிட்டாச்ச மன்னாடிதான்
இன்பமுரு கேசனே கடுகமன் னாடிதன்
கிருஷ்ணமன் னாடிமயிலே''

என்ற தொடர் காணப்படுகிறது. 32 கங்கைகுலவேளாளர் மன்னாடியார் என மாறினர் என்று கூறப்படுகிறது.

கொங்கு நாட்டு வரலாறு எழுதிய கோவை கிழார் சி.எம். இராமச்சந்திரஞ் செட்டியார் பின்வருமாறு எழுதியுள்ளார்

''கொல்லம் ஆண்டு 71ல் (கி.பி.895) கொங்கு நாட்டினர் மலையாள நாட்டின் மீது படையெடுத்தனர். கொங்கன்படைப்போர் நிகழ்ந்த காலத்தில் கொங்கு நாட்டரசன் போரில் இறக்க அவரொடு சென்ற சில படைத்தலைவர்கள் சித்தூரிலேயே தங்கிவிட்டதாகக் கர்ணபரம்பரைக் கதையுண்டு. அவர்கள் தங்கள் தமிழ்மொழியை மறந்துவிட்டு மலையாள மொழியை ஏற்றுக் கொண்டு அந்நாட்டு மக்களாகவே ஆகி விட்டார்கள். இதற்குச் சான்றாக கொங்கு நாட்டுப் பட்டப் பெயர்களில் ''மன்றாடியார்'' என்ற சொல் மலையாள எல்லைப் புறத்திலும், சில குடும்பங்களிலும் மன்னாடியார் என வழங்குவதாகக் காட்டுவர். அங்கராத்து மன்னாடியார், வடசேரி மன்னாடியார்'' என்பது கோவைகிழார் சி.எம். இராமச்சந்திரஞ் செட்டியார் எழுதிய குறிப்பாகும்.

சித்தூர் பகவதியம்மன் கோயிலில் மாசி மாதம் சிவராத்திரி யன்று கொங்கம்படைத் திருவிழா நடைபெறுகிறது. அதில் சித்தூர் சம்பத் மன்னாடியார் மிக முக்கிய இடம் பெறுகிறார். அங்குள்ள ''கொங்கம்படை'' மூலமுறி என்னும் ஏட்டில் சித்தூர் சம்பத் மன்னாடியார் ''வேளாளர் இனம்'' என்று கூறப்பட்டுள்ளது.

இராசாதிராசன் என்னும் சோழ மன்னன் கொங்கு நாட்டிலிருந்து 12 ஊர் வேளாளர்களைச் சேரநாட்டிற்கு அனுப்பினான். அவ்வூர்களில் கரூர், காங்கயம், காடையூர், பழையகோட்டை, சங்குப்பாளையம் என்ற ஊர்கள் அடங்கும். சங்குப்பாளையம் என்பது சங்கரண்டாம் பாளையம் ஆகும்.

சோழமன்னன் சார்புப் படையெடுப்பு என்று கூறப்பட்டாலும் படையுடன் வந்தவர்களைக் கொங்கன்மார் என்றே ஏடு கூறுகிறது.

''நாடு நகரமெல்லாம் நடமாடும் கொங்கரசன்'' என்கிறது சித்தூர் ஏட்டுச்சுவடி.

1983-85 ஆம் ஆண்டுகளில் பாலக்காடு மாவட்டம், பாலக்காடு வட்டம், சித்தூர் வட்டம், கொல்லங்கோடு வட்டம், ஆலத்தூர்வட்டம் ஆகிய பகுதிகளில் நேரில் இக்கட்டுரையாளர் பல மன்னாடியார் களைச் சந்தித்தார். அவர்களில்,

''தேங்குரிசி புளியங்களத்து ஜனார்த்தன மன்னாடியார்
தேங்குரிசி புளியங்களத்து கண்டப்ப மன்னாடியார்
பள்ளஞ்சாத்தனூர் கொச்சி கிருஷ்ண மன்னாடியார்
பல்லசேனா கண்ணன்குட்டி மன்னாடியார்
வேங்கோடி கேனாத் கோவிந்த மன்னாடியார்
மாத்தூர் பாட்டத்தில் இராமநாதன் மன்னாடியார்
பாலக்காடு குன்னத்தூர்மேடு இராமநாதன் மன்னாடியார்
புளியங்களத்து இளையாத் வாசுதேவ மன்னாடியார்
மாத்தூர் பாட்டத்தில் கோபாலன்குட்டி மன்னாடியார்
கண்ணாடி பிரபாகர மன்னாடியார்
நல்லேபள்ளி அங்கராத்து மன்னாடியார்
நல்லேபள்ளி சோண்டத் இரவிராமன் உண்ணி வலிய மன்னாடியார்
சித்தூர் சம்பத் பாலகிருஷ்ண மன்னாடியார்
களப்பட்டி இறவமன்னாட்டில் குமார மன்னாடியார்
கொல்லங்கோடு பணிக்கத் சிவசங்கர மன்னாடியார்
வடசேரி இட்டுச் சாத்தர வலிய மன்னாடியார்
நாட்டுக்கல் சுபாஷ் சந்திர மன்னாடியார்
சேங்கத் லட்சுமி குட்டியம்மா
புளியங்களத்து அம்மணி மருவளம்மா
வடசேரி பாருக்குட்டி மன்னாடிச்சியார்

ஆகியோர் முக்கியமானவர்கள்.

இவர்கள் அனைவரும் ஏகோபித்துக் கூறியவை.

''நாங்கள் வெள்ளாங்கோத்திரம்''
''நாங்கள் வெள்ளாங்கூறு''
''நாங்கள் வேளாளகவுண்டர்கள்''
''நாங்கள் வேளாளர்கள்''
''நாங்கள் கீழ்நாட்டிலிருந்து கேரளா வந்தவர்கள்''
''எங்கள் பூர்வீகத்தலம் கொங்குநாடு''
''எங்கள் ராஜ்யம் காங்கேயம் ராஜ்யம்''

இவ்வாறு கூறிய அவர்களில் சிலர் ஏன் கேரளம் வந்தோம் என்றும் சில காரணங்களைக் கூறினர்.

''கால்நடைகளை ஓட்டி வந்தோம்''
''விளைநிலம் வாங்க வந்தோம்''
''புதிய நிலம் தேடி வந்தோம்''
''பகைவரால் வந்தோம்''
''பஞ்சத்தால் வந்தோம்''

என்று கூறினர்.

பேரூர் கொங்கு நாட்டின் மிகப்பெரிய தலம். மேலைச் சிதம்பரம் என்னும் சிறப்புக்கு உரியது. பேரூர்ப் பட்டீசுவரப் பெருமான் கோயிலில் மார்கழித் திருவாதிரை, பங்குனி உத்தரத் திருவிழாவில் வடசேரி மன்னாடியாருக்குப் பரம்பரை உரிமை இன்றும் உள்ளது. விழா நாளில் மேற்கு வாயிலைத் திறக்கும் உரிமை இவர்களுக்கே உண்டு. சிறுதேர் ஆகிய சப்பரம் செய்யவும், பந்தலுக்குக் கால்கள் நடவும் மூங்கில்களும் கயிறுகளும் வடசேரி மன்னாடியாருக்குச் சொந்தமான வாளையாறு காட்டிலிருந்து பெறப்பட்டன.

வாளையாறு காட்டில் நில அளவு செய்யப்பட்ட 8046 ஏக்கரும், அளவை செய்யப்படாத சுமார் 10000 ஏக்கரும் வடசேரி மன்னாடி யாருக்குச் சொந்தமாக இருந்தது. பேரூர்க்கோயிலின் மேற்கு வாயில்

வரை அவர்கள் உரிமையாக இருந்தது. மேற்கண்ட இரு விழாக்களின் போதும் (மார்கழித்திருவாதிரை, பங்குனி உத்தரம்) பேரூர்க் கோயில் செயல் அலுவலர் அவர்கட்கு அழைப்புக் கடிதம் அனுப்புவது வழக்கம். இப்போது மூங்கில் முதலிய பொருட்களுக்குப் பதிலாகப் பணமாகக் கொடுத்து விடுகின்றனர். நேரில் வந்து முதல் உரிமை யைப் பெறுவர்.

மன்னாடியார் குடும்பத்தில் பெரியவர்கள் இறந்தால் பேரூர் வந்து நொய்யல் கரையில்தான் இறுதிச் சடங்குகளைச் செய்கின்றனர்.

பல மன்னாடியாரின் எட்டுக் கட்டு மாளிகையில் பழைய ஆவணங்கள் பல தமிழில் உள்ளன. பின்னர் தமிழும் - மலையாள முமாக உள்ளன. பின்னர்தான் மலையாளத்துக்கு மாறுகின்றன. மலையாள ஆவணத்திலும் பல தமிழ்ப் பெயர்கள் உள்ளன.

பழனிமலையில் வடசேரி மன்னாடியாருக்கு அடிவாரப் பகுதியில் மடம் இருந்தது.சத்திரமும் இருந்தது. சத்திரத்திற்குக் கதவே கிடையாதாம். யார் வேண்டுமானாலும் எப்பொழுது வேண்டு மானாலும் தங்கலாம். உணவு வேண்டுவோர்க்கு உணவும், உணவு சமைத்துக் கொள்பவர்கட்கு வேண்டிய பொருள்களும் அளிக்கப் பட்டன. மடம் சத்திரத்தையொட்டி 6 ஏக்கர் 63 செண்ட் நிலமும் இருந்தது. மிகக் குறைந்த விலைக்குப் பழனி தேவஸ்தானத் திற்கு 1974ல் விற்பனை செய்யப்பட்டது.

மன்னாடியார் குடும்பங்களில் சித்தூர் சம்பத் மன்னாடியாரும், வடசேரி மன்னாடியாரும் மற்றவர்களைவிட உயர்ந்தவர்கள் என்று கருதப்பட்டனர். ''சம்பத் வடசேரி கொம்பன் வேளாளர்'' என்பது பாலக்காடு மாவட்டத்தில் வழங்கும் பழமொழியாகும்.

மன்னாடியார் பட்டப் பெயர் மிக உயர்ந்த பெயர் என்று கருதப்பட்டது. கொச்சி மலையாளக் கையேடு மன்னாடியார் என்ற பெயரை ''TITLE OF NOBILITY'' என்று கூறுகிறது. ''கொச்சிப் பழங்குடியினரும் சாதிகளும்'' என்னும் நூல் "MANNADIYAR: "This

is the Title of Certain aristocratic families in the chittur near palghat" என்று கூறுகிறது. மன்றாடியார் என்ற சொல்லே மன்னாடியார் என்று மருவி வழங்கலாயிற்று.

மன்னாடியார் வாழும் பகுதிகளில் பிற கேரளப் பகுதியில் காணப் பெறாத காளியம்மன், மாரியம்மன் சித்தூர் அம்மன், சுணங்கியம்மன், பழனூரம்மன், மணப்புள்ளியம்மன், காக்கரக்காவு அம்மன், கருப்பண்ணன், முருகன் கோயில்கள் உள்ளன. களப்பட்டி எறவமன்னாடியார் மாளிகையில் மாரியம்மன் சிலை உள்ளது. நல்லே பள்ளித் தமிழ்ப்பூசாரிகள் வந்து பூசை செய்கின்றனர். கொல்லங் கோடு பணிக்கத் மன்னாடியார் மாளிகையில் ''காங்கயம் மாரியாத்தா'' சிலை உள்ளது. வடசேரி மன்னாடியார் மாளிகையில் ஆறுமுகன் (முருகன்) சிற்பம் உள்ளது.

களப்பட்டி எறவமன்னாட்டில் மன்னாடியார் மாளிகையில் கூறிய செய்தி ''நாங்கள் காங்கயத்திலிருந்து வந்தவர்கள் ஆகையால் அங்கிருந்து கோயில் வரி வாங்க வந்தவர்கள் இதோ இந்த களப்பட்டி சத்திரத்தில்தான் தங்குவார்கள். காங்கயம் கோயிலுக்கு வருடம் 12 ½ ரூபாய் வரி கொடுத்தோம். கடைசியாக 3 ஆண்டுகட்கு 37½ ரூபாய் கொடுத்தோம். இரசீதும் கொடுத்தார்கள். பாகப்பிரிவினையின்போது இரசீது தொலைந்து விட்டது''.

பாலக்காட்டு மன்னாடியார் குடும்பங்களில் மட்டுமே நன்மை தீமைக்குக் குயவன் பானை கொடுப்பதும், வண்ணார் மாத்துக் கொடுப்பதும், நாவிதன் சீரும் நடைபெறுகிறது. வேறு பகுதியில் இவ்வழக்கம் இல்லை.

கொங்கு நாட்டுக் கட்டுச் சோத்து விருந்து என்பதைப் ''புளிஊண்'' என்கின்றனர். பூப்பு நன்னீராட்டுவதைத் ''திரண்ட கல்யாணம்'' என்பர். அங்கு ஆண் குழந்தை பிறந்தால் கூவுவதும், பெண்குழந்தை பிறந்தால் கிண்ணம் தட்டுவதும் கொங்கு நாட்டு வழக்கமேயாகும்.

மன்னாடியார் வாழும் பகுதியில் கொங்கு நாட்டு ஊர்ப் பெயர்கள் பல வழக்கில் உள்ளன. அயிலூர் ஆலத்தூர், கண்ண புரம், கொடுவாயூர், சித்தூர், சேந்தமங்கலம், நீலம்பூர், பாப்பினி, மணலூர், மாத்தூர் முதலிய பல ஊர்ப்பெயர்களைக் காணுகின்றோம்.

மலையாள மரபிலிருந்து மாறுபட்ட சொற்களைப் பயன்படுத்து கின்றனர். நீர் (வெள்ளம்), அம்மன் (பகவதி) வண்ணான் (வெளுத் தேடன்) அம்பட்டன் (வெளக்கத்தரன்) என்பன மன்னாடியார் வழக்குச் சொற்கள்.

சித்தூர் வட்டம் வண்ணாமடைப் பகுதியில் மலையாளம் கலக்காத கொங்குத் தமிழ் பேசும் வேளாளர்களில் பெரியன், சேரன், செம்பன், கண்ணந்தை, பயிரன், ஆந்தை, காடை, பொருளந்தை (முழுக்காதன்) தோடை குலத்தார் பல ஊர்களில் வாழ்ந்து வருகின்றனர்.

மன்னாடியார் மாளிகைகள் எட்டுக்கட்டு வீடுகள் என்று அழைக்கப்படுகின்றன. முன்பு பாலக்காடு மாவட்டத்தில் மன்னாடியார் குடும்பங்களுக்கு மட்டுமே சொந்தமாக பூமி இருந்தது. மற்ற நிலங்கள் அனைத்தும் அரசுக்குச் சொந்தம். மற்றவர் அரசு நிலங் களைப் பெற்றே உழவு செய்வர்.

கொல்லங்கோடு அரசர் மாளிகைக்கு அப்பகுதி மக்கள் முக்கியமான நாட்களில் மரியாதை செலுத்தச் செல்வர். மன்னாடியார் குடும்பங்கள் செல்லும் வழக்கம் இல்லை. கொங்கம் படை விழாவில் எல்லோரையும் வந்தார்களா! என்றுதான் கேட்பர். மன்னாடியார்களை எழுந்தருளினார்களா என்று கேட்பர்.

அங்கு வழங்கும் வெள்ளப்ப நாடு என்ற பகுதி வெள்ளாள அப்பன்நாடாக இருக்கலாம்.

நல்லேபள்ளி அங்கராத்து மன்னாடியார் ஆவணத்தில் வடவனூர் மன்னாடியார்களை 'வடவனூர் வெள்ளாளர்'' என்று குறித்துள்ள பகுதி உள்ளது. அங்கவேணாட் என்று குறிக்கிறது. வேணாடர் என்ற

பெயர்தான் வேணாட் என்று குறிக்கப்பெறுகிறது. சங்கரண்டாம் பாளையம் வேணாடர்கள் ''பெரியகுலம்''. அதனால் அங்கராத்து மன்னாடியார்களை ''வலியமன்னாடியார்'' என்று அழைக்கும் வழக்கம் உள்ளது.

நல்லேபள்ளி அங்கராத்து மன்னாடியார் சத்திரத்துப் பாத்திரங் களில் 'அங்க' என்று தமிழிலேயே எழுதப்பட்டுள்ளது. தமிழ் எண்களில் 1840ஆம் ஆண்டுக் குறிப்பு உள்ளது.

தென்கரை நாட்டுச் சங்கரண்டாம்பாளையம் பெரியகுலம் வேணாடுடையாரோடு தொடர்புடையவர் அங்கராத்து சங்குண்ணி வலிய மன்னாடியார் - மேனக்கத் லட்சுமி அம்மா ஆகியோர். அவர்கள் மகன் கோபால மேனன். கோபால மேனன் மனைவி சத்தியபாமா. சத்தியபாமா வடவனூர் மருதூர் இல்லம் சார்ந்தவர். வேளாளர் என்ற ஆவணத்திலேயே பொறிக்கப்பட்டவர். இத்தம்பதியர்க்கு 5 மக்கள் கமலாட்சி, எம்.ஜி. சக்கரபாணி, சுபத்திரா, பாலகிருஷ்ணன், எம்.ஜி. இராமச்சந்திரன் ஆகியோர் ஆவர். ஆம்! தமிழக முன்னாள் முதல்வர் அமரர் எம்.ஜி. இராமச்சந்திரன் கொங்கு வேளாளர்களின் பெரிய குலத்துப் பிள்ளை.

(விரிவான செய்திகட்கு புலவர் செ. இராசு எழுதிய ''எம்.ஜி.ஆர். தமிழரே'' என்ற நூலைப் பார்க்கவும். மேகதூதன் பதிப்பகம், 13, சின்னப்பராவுத்தர் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை - 5, பக்கங்கள் 240, விலை ரூ.120/-)

## 10. கொடைக்கானல் குன்னுவ மன்னாடியார்கள்

கொங்கு நாட்டிலிருந்து மலை நாடான சேரநாட்டுப் பகுதிக்கு (கேரளா) கொங்கு வேளாளர்கள் மேற்கு நோக்கிக் குடியேறிய அதே காலத்தில் தெற்கு நோக்கிய குடியேற்றம் ஒன்றும் நடைபெற்றுள்ளது. தெற்கு நோக்கிச் சென்ற கொங்கு வேளாளர்கள் கொடைக்கானல் மலைப் பகுதியில் குடியேறி வேளாண்மையை மேற்கொண்டனர். அவர்கள் தங்களைக் ''குன்னுவர்'' என அழைத்துக் கொள்கின்றனர். ''மன்னாடியார்'' என்ற பட்டப் பெயரையும் வைத்துக் கொள்கின்றனர். அவர்கள் பேசும் தமிழ் கொங்குத் தமிழாகவே உள்ளது. அவர்கள்,

''பெரும்பள்ளம் ஏ.கே. கரியமுத்து மன்னாடியார்
வடகவுஞ்சி அப்பிச்சி என்ற இராமசாமி மன்னாடியார்
குப்பம்மாள்பட்டி பி.பி. முத்துசாமி மன்னாடியார்
மங்களங்கொம்பு எம்.பி. முருகேசன் மன்னாடியார்''

என்று பெயர் வைத்துக் கொள்கின்றனர். இன்னும் கோமாளி மன்னாடியார், மேப்ப மன்னாடியார், வேலுச்சாமி மன்னாடியார், பழனிச்சாமி மன்னாடியார், இராயவேல் மன்னாடியார், ஆண்டிவேல் மன்னாடியார் என்றும் பெயர்கள் வைத்துக் கொள்கின்றனர்.

இவர்கள் தங்கள் சங்கத்திற்குக் கேரளப் பகுதியில் குடியேறி வாழும் மன்னாடியார்கள் சமூகப் பெருமக்களையே தலைவராக ஏற்றுக் கொண்டுள்ளனர். 1985-86ல் தலைவராக விளங்கியவர் பாலக்காடு மாவட்டம் பல்லசேனா கண்ணன்குட்டி மன்னாடியார் ஆவார். ஒரே பகுதியிலிருந்து குடியேறியவர்களே இரு சாராரும் என்பதை இது காட்டுகிறது.

ஒரு இடத்தில் வாழும் இவர்கள் மற்ற இடங்களில் வசிக்கும் தங்கள் இனத்தவரை ''பண்ணைக் காட்டு உறவின் முறையார்'' ''பாச்சலூர் உறவின் முறையார்'' ''வடகவுஞ்சி உறவின் முறையர்'' என்று அழைக்கின்றனர். கொங்கு நாட்டில் வழங்கும் ஒரம்பறை (உறவுமுறை) என்ற சொல்லை இது நினைவூட்டுகிறது.

பழனி ஆயக்குடி ஜமீன்தார் வம்சாவளியில் முருகன் ஓபளகொண்டம நாயக்கர் (இரண்டாம் பாளையக்காரர்) கனவில் தோன்றி நூறு வீட்டுக் காங்கயம் குடிமக்கள் பஞ்சத்தின் காரணமாக மலைக்கு வருவதாகக் கூறிய விபரம் எழுதப்பட்டுள்ளது.

> ''ஒரு நாள் தினத்தில் தெற்கே மலையிலே யிருக்குற பட்டி வேலப்பனாகிறவர் மேற்படி ஓபள கொண்டம நாயக்க ரிடத்தில் சொப்பனம் சாதிச்சது என்னவென்றால் வடக்கே காங்கய நாட்டிலிருந்து சிறிது வெள்ளாளர் பஞ்ச காலத்தைப் பத்தி எடுபட்டு வலசுக்கூட சகிதமாயி நூறு வீட்டுக்காரர் உன் இடத்துக்கு வருகிறார்கள். அவர்களுக்கு நீ வேண்டிய ஒத்தாசை செயிது நாமிருக்கும் மலையில் ஊருண்டு பண்ணி விச்சுக் குடும் என்று உத்தரவு ஆச்சுது. அப்படியே அவாளும் வார நாள் உள்ளாக வந்து தங்கள் தாவந்தம் சொல்லிக்கொண்டதில் மேற்படி ஓபள கொண்டம நாயக்கரும் சுவாமி உத்தரவுப் படிக்கி மலைமேல் மேல்பள்ளம் என்றும், பெரும்பள்ளம் என்றும், கவுஞ்சி என்றும் இந்த மூணு ஊர் உண்டு பண்ணி மேற்படி குடிகள் இருக்கும்படியாகச் செய்தார்''.

என்பது ஆயக்குடிப் பாளையப்பட்டு வம்சாவளி கூறும் செய்தியாகும்.

விருப்பாட்சிப் பாளையப்பட்டு வம்சாவளியிலும் குன்னுவ மன்னாடியார் பற்றிய செய்தி கூறப்படுகிறது. கனவு மூலம் அறியப் பட்டு மலையில் கோயில் கட்டி ஊர்கள் உண்டாக்கி குன்னுவர் முதலிய பல மக்களைக் குடியேற்றியதாகவும் அவர்கள் செய்த வேளாண்மை பற்றிய விபரங்களும் கூறப்படுகின்றன.

> ''ஒரு நாள் ராத்திரி சொப்பனத்திலே ரெண்டு பிராமணாள் போலே வந்து நாங்கள் இருவரும் மலை உச்சியில் அன்ன ஆகாரம் இல்லாமல் தவிக்கிறோம். நீ ராசாவாய் இருந்து எங்களைப் பட்டினி போட்டு வைக்கிறது தர்மம் அல்லவென்று சொன்னது போலே கண்டு மறுநாள் உதயத்திலே மலை உச்சியில் ஏறிப் போயி பார்க்குமளவில் அவ்விடத்தில் ஒருவன் பேரில் சன்னதம் வந்து நாம் உனக்கு சொப்பனம்

> காண்பிச்சது என்று கண்டபடியினாலே அவ்விடத்தில் மங்கள நாதசுவாமி கோவில் கட்டி வைத்து பெரியமலை ஆனதுனாலே பெரியூர் என்னும் ஊர் உண்டுபண்ணி இதன் மேற்கு தண்ணீர் பாச்சலிலே உண்டாயிருக்குற மாகாளி ஈசுவரருக்கு கோவிலும் அவ்விடத்தில் பாச்சலூர் என்று ஊரும் உண்டு பண்ணி தேவாலயங்களுக்குப் பூசை நெய்வேத்தியங்கள் நடந்து வரும் படிக்குத் திட்டப்படுத்தி கிழக்குள்ள பெரியூர் என்றும் நான்கு நாழிகை வழியில் மேற்குள்ள பாச்சலூர் என்றும் இதில் சேர்ந்த வடகாடு, கண்ணனூரு, வெண்ணலை இப்படிக்குக் கிராமங்கள் உண்டுபண்ணிப் பேர் வைத்து குன்னுவர், பொலையர், காடு வாழும் ஜாதிகள் வரவளிச்சு குடியேத்தி பெலா, ஷெண்பகம், னாரத்தை, எலுமிச்சை, கொளுமிச்சை, மாமரம், வாழை, மஞ்சள் இது முதலாகிய மாவடை மரவடை வகைகளை உண்டு பண்ணச் சொல்லி திட்டம் செய்து அந்தக் குடிகளுக்கு வெகுமதி செய்து மலைக் கிராமங்கள் என்று உண்டு பண்ணினார்''

என்பது விருப்பாட்சிப் பாளையப்பட்டு வம்சாவளியில் கூறப்படும் செய்தியாகும்.

கரிகால் சோழன் கொங்கு நாட்டில் 36 சிவாலயங்கள் ஏற்படுத்தி னார். சேரமன்னன், வேளாளரில் சடையப்பன், வணிகரில் கஸ்தூரி ரங்கப்ப செட்டியார், செங்குந்தரில் சமய முதலி ஆகியோர் துணை யுடன் காடு வெட்டி நாடு ஆக்கி பேட்டையும் கோட்டையும் கட்டிக் குடியேற்றித் துர்க்கை ஆலயமும் கட்டி மானியம் தந்து கல் சாசனம் பதித்துக் கோயில் ஆட்சி, ஊர் நிர்வாகம், விவசாயம் ஆகியவற் றிற்குத் தக்க ஆட்களையும் நியமித்தனர் இதனை ''சோழன் பூர்வ பட்டயம்'' என்னும் நூல் கூறுகிறது.

கொடைக்கானல் பகுதி பூம்பறை கோட்டை ஊர் நிர்வாகத் திற்குக் குன்னுவரில் நாகப்ப மன்னாடியாரை நியமித்ததாகச் சோழன் பூர்வ பட்டயம் கூறுகிறது.

# பிற்சேர்க்கை

## கொங்கு வேளாளர் குலங்களைத் தொகுத்துக் கூறும் பாடல்கள்

### அ) அலகுமலைக் குறவஞ்சி

கொடுவாய் சின்னத்தம்பி நாவலர் இயற்றிய ''அலகுமலைக் குறவஞ்சி'' நூலில் இப்பகுதி உள்ளது. இந்நூலை 1963இல் பதிப்பித்தவர் திருப்பூர் க.பழனிச்சாமிப் புலவர். அலகுமலை காலை நேரக் கிருத்திகை வழிபாட்டுக் குழுவினர் 2008ஆம் ஆண்டு மறுபதிப்புச் செய்துள்ளனர். பதிப்பாசிரியர் புலவர் செ.இராசு.

பொன்னர் ஓதாளர் பூசர் செம்பூதர்
அன்னதரு காரன் ஆவன் சாத்தந்தை

கோவர் குழாயர் கோவேந்தர் செம்பர்
மாவலர் பண்ணர் மாடை காடை

பூச்சந்தை ஆந்தை பொருளந்தை ஒழுக்கர்
வாச்ச கண்ணந்தை மணியன் தூரன்

செங்குண்ணி படுகுண்ணி சேகர் செவ்வாயர்
செங்கண்ணர் வண்ணக்கர் சேரன் சிலம்பன்

புத்தன் பொடியன் பூந்தன் வேந்தன்
முத்தன் காரி மூல குலத்தான்

களிஞ்சி நீலன் கணவாளன் அழகன்
விளியன் விலையன் வில்லி செல்லன்

ஆடை அழகன் ஆதி அந்துவன்
சேடன் பதரி சேரலன் மூரியன்

பெரிய குலத்தான் பெரழந்தை கடுந்துளி
வரிவிழி பவளன் மாதங்க கோத்திரன்

பனைபூந்தர் கோரக்கர் பாண்டியர் கணக்கர்
குணிலன் குண்டலி கூரை கீரை

நீலன் மேதி நேரியன் சூரியன்
சூல குலத்தான் சோதி தேவேந்திரன்

மீனவன் எண்ணை வெண்டுவன் ஈஞ்சன்
மானியர் வாணர் மாதுலி பைதலி

ஆதிரை விரவுளன் அவுரியன் சவுரியன்
கோதறு குயிலர் குங்கிலி கோத்திரர்

பயிரன் பரமன் பஞ்ச பூதியன்
உயர்மழு வழகர் உறுகுல விரதர்

தோடை துந்துமன் சோமன் தழிஞ்சி
காடான் உவணன் கவுரி குலத்தான்

நாரை நீருணி நந்தர் கொட்டாரர்
கூறுபன் உழுவர் கூறு பனங்காடை

சேவடி புன்னை தேமான் சுரபி
மூவர் குலத்தான் மொய்ம்பன் கவளன்

பெருங்குடி வேந்தன் பிரமன் இந்திரன்
கருங்கண்ணன் வேணியன் கம்ப குலத்தான்

அக்கினி கோத்திரன் ஆடை கொண்டரங்கி
தக்கவர் குலத்தான் சாத்துவ ராயன்

பாலியன் நெய்தலி பாம்பன் கட்செவி
நீல விலோசனன் நிறைதன வந்தன்

அனகன் சனகன் ஆத்திரேய கும்பன்
முனைவீரன் கிளியன் முக்கண்ண குலத்தான்.

## ஆ) கொடுமணல் இலக்கியங்கள்

கொடுமணல் தம்மரெட்டிபாளையம் நாச்சிமுத்துப் புலவர் வீட்டில் கிடைத்த ஓலைச்சுவடிகள் ஈரோடு கலைமகள் கல்வி நிலைய அருங்காட்சியத்தில் உள்ளன. அவற்றில் சிலவற்றைத் தேர்ந்தெடுத்து 'கொடுமணல் இலக்கியங்கள்' என்ற பெயரில் நூலாக 1981இல் மதுரையில் நடைபெற்ற ஐந்தாம் உலகத் தமிழாராய்ச்சி மாநாட்டில் தமிழகத் தொல்லியல் துறை மூலம் வெளியிடப்பட்ட நூலில் இப்பாடல்கள் உள்ளன. தொகுப்பாசிரியர் புலவர் செ.இராசு.

1) திங்கள்மணி மணிமேடை பூச்சக்ர வாள்குடைத்
தென்திசை அலங்கரித்துச்
சேரனவர் பாண்டியன் சோழர்திசைக் காராளர்
செய்யநதி காவேரிமுன்

கொங்கில்வரு பண்ணை ஓதாளன் பெரியகுலன்
பொருளந்தை கோவன்வேந்தன்
குழாயன்நீலன் செங்கண்ணன் காடை விளிபுல்லன்
கூரப்பனை பூந்தைபுன்னை

மங்கைமணி சாத்தந்தை பூசகுலன் அந்துவன்
மளுவழகர் பரதர்விரதர்
மாடை குன்றலி ஆடை அடகர்
வாணர்பூச் சந்தைஆந்தை

நங்குடிகள் வெண்டுவன் தளிஞ்சிசெம் பூதன்தூரை
நாரைநீ ருணிபெருங்குடி
ஆதிகீரை கண்ணந்தை வண்ணக்கர் கொட்டாரர்
நற்கொங்கு வளநாடரே!

2) பன்னுலவும் செழுவரை சேடர்குல எண்ணையைப்
பனங்காடை சேரன்வில்லி
படுகுண்ணி செங்குண்ணி சேகன் செவ்வாயன்
பாண்டியன்கண வாளன்காடன்

சொன்னமய பூபனைக் கல்லியைச் செல்லனை
தோடகுல புல்லந்தையை
வெள்ளம்பன் முத்தம்பர் கொடியனை வாய்மை
சொல்சொளுகன் கணபரஞ்சன்

அன்னதரு தாடவன் தேவேந் திரகுலன்
ஆவுலுவன் சாத்துவாயன்
ஆனகுல மீனவன் எருமைகுல பரதனும்
அம்மயிலை பயத்தலையகோன்

கொன்னைசேர் கடிபுன்னை தளிஞ்சி கடுந்துளி
காரைக் குங்கிலியுடனே
கொண்டிரங் கிக்குலம் மூலகுல சேரிலான்
கொங்குவள நன்னாடரே!

## இ) வேளாளர் கீர்த்தி 96 குலத்துப் பாடல்

எழுமாத்தூர் வேலம்பாளையம் பெரும்புலவர் வே.ரா.தெய்வ சிகாமணிக் கவுண்டர் ஓலைச்சுவடித் தொகுப்பில் இப்பாடல் உள்ளது. இப்பாடல் பேரூர் ஆதீனம் வெளியிட்ட கொங்கு மண்டல சதகப் பதிப்பில் பிற்சேர்க்கையாகச் சேர்க்கப்பெற்றுள்ளது.

### கொங்கு வேளாளர் குலத்துப் பாடல்

1) சீருலவு மதுரையில் சொக்கேசர் மீனாட்சி
செயலருள் கிருபையதனால்
சிங்காச னாதிபதி அதிவீர பாண்டியன்
செங்கோல் செலுத்துமன்னாள்
திட்டமிகு ஒட்டியனை வெட்டிவிரு திட்டுமே
சிம்மாசனந் தனிலிருந்து
சிரோரத்ன மகுடமும் ஆறுகால் பீடமுயர்
தென்கடக சூடாமணி
திறல்வரிசை பெற்றிடும் விருதுமகு டாசலன்
சிதம்பரப் பல்லவனுமே
சேர்கொங்கு நாலாறு நாட்டினிற் கீர்த்திபெறு
செல்வனா னூர்ச்சர்க்கரை
சிவசமய முறைமைதவி ராதவே ணாவுடையார்
சிறந்திடுங் காராளரில்
சிவனுமைக் கன்பர்க் கிரவில் முளைவாரிச்
செல்வமுட னமுதளித்தும்
சேடன் பணாமுடி நாகத்தின் மணிதனைச்
செந்தமிழ் தனக்குமீந்தும்
சீர்பெறும் பழையனூர் நீலிபலி கொண்டிடும்
செயகங்கை குலமரபுளோர்
சித்திரமே ழிக்கொடி குவளைமா லைப்புயர்
தென்றல்காற் சிறைதவிர்த்தோர்

சிங்கா தனம்பெற்ற கம்பன் தமிழ்க்கடிமை
செய்தினிய கீர்த்திபெற்றோர்
செம்பகுலர் செல்லகுலர் தூரைகுலர் கூரைகுலர்
செங்குன்னி செவந்திகுலரும்
சீர்பெருகு சேரகுலர் தேவேந்திரர் விளையகுலர்
செயபண்ணை கண்ணந்தையும்
திரமான கன்னகுலர் காரிகுலர் பனையகுலர்
திறல்பனங் காடைகுலரும்

2) காருலவு மினிதான காடைகுலர் ஆந்தைகுலர்
கனிவுசாத் தந்தைகுலமும்
கற்புயர்செம் பூத்தைகுலர் வண்ணக்கர் உண்ணக்கர்
கனத்தபூச் சந்தைகுலமும்
கனமான ஆந்தைகுலர் பட்டாலி நரபாலர்
கதிதனஞ் சயகுலமும்
கங்கா குலத்தரசர் வாகைகுலர் அரசைகுலர்
கனமேவு முரசுகுலமும்
காசினி மதிக்கவரும் வாங்கல் பெருங்குடி
களஞ்சியர் ஒழுக்கர்குலரும்
கன்றுதவு வெண்டுவன் அந்துவ குலத்தவரும்
கனமாடை மணியன்ஈஞ்சன்
கதித்திடும் புத்தகுலர் முத்தகுலர் அன்னகுலர்
கார்காத்த பெரியகுலரும்
கனமலையில் வில்லம்பர் பதுமைகுல வேளாளர்
கணவாளர் ஓதாளரும்
காவேரி நதிகுலன் ஆரிய குலத்தவரும்
காவைகுலர் ஆவைகுலரும்
கனத்த தாரணிகுலர் சந்திரகுல ரிந்திரகுலர்
கனவேம்பன் மேதிகுலரும்

காரணப் பதுமைகுலர் பூரகுலர் பாண்டிய குலர்
காரைகுலர் பூச்சைகுலரும்
கதிர்குலவு மலையகுலர் காமகுலர் சோமகுலர்
கதித்திடும் அழகர்குலமும்
கனமேவு வெள்ளிகுலர் தனியகுலர் தம்முடன்
கற்பித்த சக்திகுலரும்
கனத்தகுலர் பாலகுலர் பாத்தியகுலர் பரதகுலர்
கருமேவு கொல்லிகுலரும்
காங்கயநன் னாட்டிலுயர் பரஞ்சைநகர் விழியகுலர்
கனவேத்தி னாகருலரும்
கந்தமுயர் வேதகுலர் செழியகுலர் கிழியகுலர்
காரணப் பாண்டிகுலரும்

3. பேருலவு குண்ணைகுலர் பரம்பைகுலர் பாலகுலர்
பலமுலவு நீலகுலரும்
பேதகமில் லாமல்வளர் நெல்லிகுலர் நெழலிகுலர்
பெலமுலவு புல்லகுலரும்
பேறான ஆழிகுலர் மின்னைகுலர் மூலைகுலர்
பூவைகுலர் புலுவகுலர் புனிதபாக்கிய குலரும்
பாலவா கைகுலர் பொன்னிகுலர் பரமகுலரும்
போதகுலர் நீதிகுலர் மரையகுலர் போசைகுலர்
போதிகுல ரோடை குலர்ஓரை குலரும்
பெருகுபுள் ளந்தைகுலர் புளுவகுலர் யெருவகுலர்
புகழ்பகீ ரதிகுலர் ஆதிகுலர் போதிகுலர்
................ முகிலகுலரும்.

4. தாருலவு வன்னிகுலர் தனசகுலர் பூத்தைகுலர்
பாசைகுலர் சமுத்திரகுலர் புகழ்கின்ற காஞ்சிகுலமும்
தகைமிகு பரசைகுலர் தில்லைவே ளாளர்குலர்

சாற்றரிய காசிகுலர் தகைமைபெறு உரியகுலர்
உத்தமகுலர் உருமைகுலர் தலைமை வேளாளர்குலர்
தட்டைகுலர் தலையகுலர் தாழைகுலர் பூழைகுலர்
தருபொன்னி வளநாடுளோர்
சாற்றரிய காராளர் கீர்த்திதொண் ணூற்றாறு
தண்டமிழ்க் கவிதை கொண்டோர்
சந்ததம் செறிகம்பர் ராமாயணக் கவிதை
சாற்றுமே ரெழுபதுடனே
தந்திமுக னைங்கரற் கினிதாக முன்கையில்
சந்தன முரைத்தளித்து
தயிரமுத மாகவுரை திருக்கை வழக்கமும்
தகுபைந் தமிழமைந்தோர்
தாராள மாகவே யெழுபத்தொன் பதுநாடு
சாற்றரிய வளநாட்டுளோர்
தர்ம ஆரியமாலை சூரியகுல சோழன்
தக்கமீனவன் பாண்டியன்
தகுகொல்லி மலைவெற்பன் சேரமான் பெருமாள்
தழைத்திடும் கொங்குதேசம்
தாரணி மதிக்கவே நாலாறு நாடுற்ற
தகைமைவே ளாளரலவோ
தங்களுட கீர்த்தியைக் கொண்டாட அஞ்சுபடி
தன்புலமை யாகவைத்து
தானுண் கலத்தினில் பழம்சர்க் கரையுடன்
தகுந்தேன் மிகுந்துதவியே
சந்ததம் புகழ்கங்கை வங்கிசம் விளங்கவே
தந்தமணவாழி பதினாறு
சாற்றவும் தமிழ்வேத மங்களங் கூறியே
தாரணியில் மிகவாழ்கவே.

## ஈ) வேளாளர் குலக் கும்மி

ஊதியூர் - முதலிபாளையம் 'மகாவித்துவான்' ப.நாச்சிமுத்துப் புலவர் இயற்றியது. முதலிபாளையம் முதலிராயசுவாமி கோயில் குடமுழுக்கு விழா மண்டலாபிடேக நிறைவு விழாவில் 30.04.1995 அன்று வெளியிடப்பெற்ற ''மரபாளர் உற்பத்திக் கும்மி'' என்ற நூலின் ஒரு பகுதி. பதிப்பாசிரியர் புலவர் செ.இராசு.

### குலக்கும்மி

பண்ணை பெரியன் பொருள்தந்தை செங்கண்ணன்
பயிரன் பூசன்ஓ தாளனுமே
கெண்யகு ழாயன்ஆந்தை சேரன்செம் பூத்தன்
பொன்னன் வெண்டுவன் பெருங்குடியான்

கண்ணந்தை தோடை மணியன் தூரகுலன்
காடைதே வேந்திரன் பூந்தைஅந்துவன்
வண்ணக்கன் தழிஞ்சி வில்லியும் பில்லனும்
மாசிலா வேந்தன்செல் லன்செம்பனும்

கீரைகோ வேந்திரன் ஈஞ்சன் கணக்கனாய்க்
கெண்யசாத் தந்தை கண்ணர்குலன்
கூரைமா டையாடை தனஞ்செயன் எண்ணை
கூர்பனங் காடைகோ வன்கொடியன்

கணவாளன் செவ்வாயன் சேகன்சே டன்ஆவை
கனமேதி யன்முள்ளம் பன்பாண்டியன்
தனவான் தொய்யனும் பூச்சந்தை செங்குண்ணி
தந்திரன் ஒளுக்கனும் ஆதிகுலன்

செவ்வுன்னி பூமனும் கல்லியன் வெள்ளம்பன்
செல்வமுத் தன்காரை காரிபதரியும்
ஒவ்வு மடையர் பைந்தலைக் கடுந்துளி
உத்தம நாரைகுயில் குங்கிலியர்

நீருணி நீலன் கோலயன் தடிக்காளி
நிலமைவிளி யழகன் பவளனுமே
பாரும் பனையன் குண்டலி வாணையன்
பகரும் வெண்ணெயன் பதுமனுமே.

காதலர் நரபாலன் அடவை யாரையும்
கனமலை யாளர் குடுப்பயனும்
சாதனன் சனிபணை யேரி படுக்கையன்
தருமன் புளுக்கயன் குள்ளனுமே.

சேரலன் செவகை ஏலன்தொன் னைவெள்ளி
தென்னைகுன் றல்கூடன் கழிஞ்சிசருவனும்
தீரன் கோவயன் வெண்ணை மங்கலரும்
திகழ்வட்டம் பாங்குமண் ணையும்லிங்கரும்.

வாலை கிழார்கடப் பைகிழார் மங்கலர்
வழுத்துவர் பொருத்தர் கூவயனும்
பாலை கிழார்கொற்றை ஓசியன் நாயரு
பனைப்பாக் கிழார்குன் னங்கிழாரே.

தாளி கிழார்தேவர் முதுவர்குன் றங்கிழார்
தண்டலங் கிழார் மெய்ப்பாக்கிழார்
தூளி கிழார்வாலை புருஷக் கிழாரெனச்
சொல்லு வதுசோலை இளங்கிழாரே.

பாக்கிழார் கொஞ்சி கிழார் வலத்துழவர்
பையந்தை சூக்கயர் மண்டலவர்
சேக்கயன் கொற்றந்தை மாத்தந்தை கடுவந்தை
சித்தந்தை மகவந்தை பாக்குக்குலர்.

தேவந்தை மயிலந்தை கனகந்தை நாமந்தை
சேர்வந்தை பூவந்தை திருவந்தையும்
மாவந்தை வாத்தந்தை செயங்கொண்டார் விதாக்ஷண்யர்
மங்கயர் தென்னவ ராயகுலன்.

நற்கலை ஆலையார் செம்பொன் குடையார்
நாவல்லர் ஒருகுடை மிகல்வராயரும்
விற்பன தனபாலர் சேதுவ ராயரும்
வேந்தர்கலி யுகராயர் கலிங்கரும்

நற்றவத் தார்களத் தர்பெரு மங்கயர்
நற்பழிக் கஞ்சார் பாற்குடையார்
கொற்றளந் தார்பது மன்னுயிர் அளவர்
கூர்மயன் புகழார்காங் கயராயனும்.

வரதரா யர்கொங்க ராயர்கை யாமன்னர்
வச்சிர குந்தர் செழும்பன்னரும்
பரம தத்தரும் சிங்கரும் மஞ்சுளர்
பத்துளார் செண்பக ராயருமே.

கச்சி வடுக நயினாரும் கோவலர்
களப்பாரை வாணுவர் திரையாரும்
மெய்ச்சிவ நேசர் செம்புத் திரையாரும்
விளங்கும் நித்திரை யாரனந்தம்

ஓதி முடித்தவர் ஓதாளன் நானென்றார்;
யோசனை சொன்னவர் ஆதி என்றார்;
சாதி வகுத்தவர் மரபாளர் என்றுமே
சாற்றினார் யாவரும் தானறிய

ஒட்டுக்கு நாற்பத்தெண் ணாயிரங் கோத்திரம்
ஒற்றுமை பன்னிரண் டாயிரமாம்
கட்டுப் படும்போது கங்கா குலம்என்று
காணி அரசாட்சி செய்யுமென்றார்.

சுத்த குலங்கள் ஆயிரம் ஆம்அதில்
　　தொண்டைமண் டலம்இரண் டாயிரமும்
உத்தமர் நாற்பதி னாயிரம் பசுமை
　　உள்ளது பன்னிரண் டாயிரமே.

பசுங்குடி பன்னிரண் டாயி ரத்தினில்
　　பகர்தே வாங்குபத் தாயிரமாம்
உகந்த தனவசி யரிலே ஆயிரம்
　　உள்ள பலசாதி ஆயிரம்தான்

தேவாதி தேவரும் தான்வாழி! ஞான
　　சித்தர் முனிவரும் தான்வாழி!
பாவாணர் செப்பிய பைந்தமிழ்க் கும்மியைப்
　　பாடினோர் ஆடினோர் வாழியிதே.

## உ) வேளாளர் சிறப்புப் பாடல்கள்

### 1) நெறி தவறாதவர்

நீதிநெறி அறமுறைமை தவறாத மறைபாலர்
நிலைநின்ற புகழை யுடையோர்
நீசருட னேகூடி யுண்டபேர் பழையனூர்
நீலியுட பழிக முழுவினோர்
மேதினியில் என்னவே புலவருக் காகவெழு
வீடுதனில் விலையுண்ட பெரியோர்
மேன்மையுடன் முன்கையில் சந்தன முரைத்துமுளை
வாரிஅமு திட்ட பெரியோர்

பாதகமெண் ணாமலே சூலியிட முதுகினில்
பாலன்ன மிட்ட பெரியோர்
பாணனிட நட்பதனைப் பிணந்தன்னைச் சுமந்துமவர்
பார்முழு தாண்ட பெரியோர்
ஆதலவர் கொண்டாடும் ஆயிரம் ஆனைக்கி
அய்யமு தளித்த பெரியோர்
அறிவுபுரை நெறிமுறைமை தவறாத மறைபாலர்
அவனிசூழ் வேளாளரே!

### 2) மிக்கான சமூகம்

அம்புவியில் மிக்கான சித்திரமே ழிக்கொடிக்கு
அதிபனென வந்த சமூகம்
அரவின்மணி தன்னையே கவிவாணர் தங்களுக்கு
அன்பாய்க் கொடுத்த சமூகம்

பண்புபெற வேயுலகில் நீலிபலி யதுதந்து
பார்புகழ வந்த சமூகம்
பரதவித நாட்டியம் புரிகின்ற பொதுமாதர்
பண்புரிசை யிட்ட சமூகம்

தம்பமென வேதியர்கள் மறையோதி அச்சதை
சதாதினம் விளங்கு சமூகம்
தானமிகு தருமமும் அன்னசொன் னங்களும்
தயவாய் விளங்கு சமூகம்
கம்பர்தன் தமிழ்பெற்ற கீர்த்தியும் புகழவே
கனிவுகூர் துற்ற சமூகம்
காசினியில் மிக்கான மேலான சமூகமது
காராளர் தன்சமூகமே!

## 3. வாசல் சிறப்பு

நாவ லர்புகழ் நவமணி வாசலே
நாத கீதம் முழங்கிடும் வாசலே
தேவ தேவர் சிறந்திடும் வாசலே
சித்திர பத்தர் விளையாடும் வாசலே
பூமி பாலகர் ஓலக்க வாசலே
பூலோக மெங்கும் ரட்சிக்கும் வாசலே
மார்பி லேறி யவினாசி நாயகர்
வாழ்வு தந்திடும் கோபுர வாசலே
சேர லார்கள் பணிந்திடும் வாசலே
செம்பொன் மேருவுக் கிணையான வாசலே
பாரில் அன்னக் கொடிகட்டும் வாசலே
கம்பர் பச்சம் தவிராத வாசலே
வீர லட்சுமி விளங்கிடும் வாசலே
விருது காளம் முழங்கிடும் வாசலே
கார நீர்குடை யாகர வாசலே
கங்கை பாலர் கலியாண வாசலே
நம்பி னோர்தமைக் காத்திடும் வாசலே
நாவ லர்கள் புகழ்ந்திடும் வாசலே
சொம்ப தான குடைதரும் வாசலே
துய்ய பூமிதன் பாலகர் வாசலே!

### 4. வேளாளர்துணை

வாராத காலங்கள் வந்தாலும் பார
வழக்குவரும்
தீராத கோபங்கள் பசிநோய் தரிக்கச்
சிகந்தனிலே
சேராத பேர்வந்து மேலில் விழுந்தாலும்
தீர்க்கச்சிவன்
தோராத மேழியன் வேளாளச் சாமி
துணைநமக்கே!

### 5. வேளாளச் சாமி

தேரோடும் வேதியர் மன்னவர் மூன்றினில் சீர்வசிகர்
கூரிடும் பின்னோர் முதலான சாதி குலங்களுக்கு
நீரிடு மேழிச் சிவனாக வந்து நிலம்உழுகும்
சோறிடு மேழியன் வேளாளச் சாமி துணைநமக்கே!

### 6. சோறிடும் தெய்வம்

வீறுடன் வார்த்தை யுண்டோ
மாமேருக் கப்பால் இப்பால்
ஊறிடும் கிணறு போல
உதவிய செங்கை மேகம்
பாறிடும் கலிய கன்ற
பாணிவே ளாளர் தம்மைச்
சோறிடும் தெய்வ மென்று
சொல்லுவோம் சொல்லு வோமே!

## 7. மேழித் தெய்வம்

ஆழித் தேவர் அலைகடலில்
ஆடும் தேவர் அம்பலத்தில்
வாழித் தேவர் குலமக்கள்
வய்யந் தோறும் பெருக்காளர்
ஊழித் தேவர் எல்லோரும்
உலகங் காக்க வல்லாரோ
மேழித் தெய்வம் அல்லாமல்
வேறோர் தெய்வம் கூறோமே!

## 8. வேளாளர்களைப் புகழ்ந்து பாடிய புலவர்கள்

கம்பர்செந் தமிழும் இரட்டையர் மொழிந்த
கட்டளைக் கலித்துறைக் கவியும்
கனிந்ததெள் ளமிர்தம் எனப்புக ழேந்தி
களித்திடும் கலம்பகத் தமிழும்

பண்புசீர் ஒட்டக் கூத்தனாம் புலவன்
பகர்ந்திடும் பைந்துளா யிரமும்
பசுந்தமிழ் தேறு வாணியர் தாசன்
பரிவுடன் புகன்றசெங் கவியும்

செம்பியன் கவியும் வழுதிமார் கவியும்
சேரமான் செப்பிய கவியும்
தேவர்தன் சிறையை மீட்டவேள் குமரன்
தெளிவுற இசைத்தவெண் பாவும்

சம்பந்தர் கவியும் அவ்வைதன் தமிழும்
சங்கத்தார் செப்பிய தமிழும்
தவத்தினால் மிகவும் புகழ்கொண்ட வேளாளர்
தகைமையைச் சாற்றுவதற்கு எளிதோ.